

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.



ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்.

## அறிக்கை.

இந்த ஸ்ரீவிஷ்ணுதத்வவிளக்கம் சென்னைக்கடுத்த புரசை - செல்லப்பகிராமணிவீதியில் - க - வது ந விலக்கமுள்ள கிருஷ்ணசாமிமுதலியார் கிருகத்திலிருக்கும், ஸ்ரீ ஆண்டாள்சபையில் புத்தகம்-க-இ-ரூபா கவ-வீதம் விக்கிரயம் செய்யப்படும்.



ஸ்ரீமத்பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.

## சாத்துகவிகள்.

ஸ்ரீரங்கமஹாநகரிமத்தியில் நவரத்னகசித
திவ்யப்ரஹ்மரதாதிரூடராயெழுந்தருளியிருக்கும்
ஸ்ரீரங்கநாயகிவரபுத்ரராகிப்பிரஹ்மசகோதரரான
ஸ்ரீவேதவியாஸதாதபட்டர்ஸ்வாமிகளாலியற்றப்பட்டது

గద్యం.

శ్రీరంగదివ్యనగరీవిరాజమాన శ్రీరంగనాథకృపా పరిపూర్ణకటాక్ష క్షణవిశిష్ట వేదతమపబ్రహ్మణగ్రాహ్యమతస్థానాం, అమృతవదాస్వాదతరం-తదితరమర్వాదిదైత్యప్రకృతిముద్దృష్ట వేదబాహ్యమతస్థానాం,విదనాస్వాద్యతమం-తేషామేవతదనుప్రవిష్టానాం,అమృతమివఅపర్యాసేచనకం-అజ్ఞానతిమిరనిరాకరణపటుతరభానుకోటిప్రకాశబోధప్రదం,సుజ్ఞానదీపికాభాస్వరజీవతత్త్వవత్ స్వయంప్రకాశం- సర్వశ్రేష్ఠవిశిష్టాద్వైతసిద్ధాంతహస్తప్రదం-వరయోగినాంద్రావిడభాష యాకృతవిష్ణుతత్త్వప్రకాశకరహస్యం-భవాబ్ధినిమగ్నసకలలోక సంతారకనౌరివస్థితం, ఏతదుక్తతత్త్వార్థైస్స్వయమేవప్రకాశతే ॥ ..........................*

திருமழிசைக்கந்தாடையுபயவேதாந்தாதிகாரி
வரதாசாரியஸ்வாமிகளாலியற்றப்பட்டது.

స్రగ్ధరావృత్తం.

దృష్ట్యద్దర్వాదివర్గప్రభవదతిభృశోద్గామదుర్దాంతదర్ప।
జ్వాలాజాలప్రలోపప్రకటపటుతరోవిష్ణుతత్త్వప్రకాశః।
గ్రంథస్సంధుక్షితోసౌయతి ధరణిప తేర్భారతీభావబద్ధ।
సద్భిస్సంమ్మాననీయోభృశనతవరయోగ్యాహ్వయేనాదరేణ

வேதாந்தசார்யசம்பந்தரான-நாவல்பாக்கம்-பெரியதிருமலைநம்பி
வம்சோத்பவர் உபயபாஷ்யாதிகாரி
வீரராகவதாதாசார்யராலியற்றப்பட்டது.

స్రగ్ధరావృత్తం.

నిత్యానిత్యైక మార్గప్రకటనపటిమామ్నాయ సుస్పష్టగాథా
సింధుశ్రీలక్ష్మణార్యోదితమితరమతైర్దుర్నిరూహ్యంతదేతత్

వైశిష్టాద్వైతమాహ్యా ... తో విష్ణుతత్వప్రకాశ
గ్రంథోయంభక్తిదీపస్ఫ ... శ్రేష్ఠయోగ్యాహ్వయేనా.

శార్దూల ... తవృత్తం.

శ్రీనారాయణపాదపంకజ మధోద్మూరస్థితాయేనరాః
తేహ్యజ్ఞానమలాశయాఃతదిత రేతత్పాదభృంగాయితాః
తేషాంసత్కృపయోదితఃశ్రుతిమతోదుర్వాదివాగ్బంధన
గ్రంథోయంవరయోగినా విరచిత శ్రీవిష్ణుతత్వోదయః.

வேதாந்தசார்யஸம்பந்த ஸ்ரீநிவாஸயதிபாதாம்புதரான
ஸ்ரீரங்கவாஸ ஸ்ரீபாஷ்யாதிகாரி
ஸ்ரீநிவாஸராகவாசார்யராலியற்றப்பட்டது.

చూర్ణిక.

శ్రీమత్ పరదేవతాపారమార్థ్యవేదిపరాశరవ్యాసప్రాచేతసవైశంపాయనబోధాయనశుకశౌనక భారద్వాజశాండిల్యటంకద్రమిడాచార్యైఃనిర్ణీతా। శ్రీపరాంకుశపరకాలాదికృతద్రమిడోపనిషద్భిఃప్రతిష్ఠాదితా। నాథమునియామునరామానుజవేదాంతార్యవరవరమునిమతసమ్మతా। సాంఖ్యసౌగతచార్వాకశాంకరయాదవభాస్కరకాణాదకౌమారిలమతతమోనిరసనదివాకరః। రామానుజార్యసత్సంప్రదాయవిరోధానుష్ఠానఖండనపరశ్వధరూపా। శ్రీరంగనాథపదకమలనిరంతరానుభవప్రకాశకా। శ్రీవిష్ణుతత్వప్రకాశికావరయోగిరామానుజదాసేనప్రకాశితా విజయతే॥ ..................................................*

மத்வாசாரிமதஸ்தரான-கோயமாபுரி
வெங்கடரமணாசாரியாராலியற்றப்பட்டது.

అనుష్టుప్ శ్లోకములు.

ఇహైవవైష్ణవాద్యంక।చిహ్నితామనుజాభువి।పరమైకాంతిభావేనప్రసిద్ధాఃవైష్ణవోత్తమాః
తైర్గృహీతవ్యాస్మృతిస్సాతూ।శృతిస్మృత్యనుసారిణీ।తత్ప్రకాశకవివాయం।గ్రంథోయంవరయోగినా।అజ్ఞానగాఢతమసాం।భాస్కరోనిర్మితోనృణాం।విష్ణుతత్వప్రకాశాఖ్య।స్సర్వేషాంజ్ఞానదీపకః।ద్రష్టౄణాంతస్యనైత్యేన।ప్రబోధజాయతేమహాన్। తాదృశోయంమహాన్గ్రంథో।స్సర్వోత్కృష్టోభివర్ధతే॥ ..............................*

சத்வால்-சங்கரபாஷ்யாதிகாரி
சுப்ரமண்யசாஸ்த்ரிகளாலியற்றப்பட்டது.

ఆర్యావృత్తం.

శ్రీవిష్ణుతత్వదీపం-విదధేవరయోగినామకోదాసః। ..................*
రామానుజగురువరశిష్యో-హర్తుందుర్వాదిగర్వసామ్రాజ్యం॥..........*

 

ஸ்ரீ

ஸ்ரீமதேபராங்குசாயநம:

# சாத்துகவி.

திரிசிரபுரம் - மகாவித்வஜ்ஜனசேகரர்

கோவிந்தபிள்ளையவர்கள் இயற்றிய

கலிவிருத்தம்.

ஏமாசலஸ்ரீதார்கடமேர்பெறநீடு
மாமாணிலைத்தீபத்தணிவாழ்வதினேத்
தீமாசறுமாசெய்தனன் ஸ்ரீவரயோகி
ராமாநுஜதாசன்கவிநாவலரேறே.

புதுவை-பாத்மோத்தரம்பாடிய விலக்ஷணகவி

இராமாநுசநாவலரவர்கள் இயற்றிய

பன்னிருசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மும்மையெனும்வான்பொருளுமைம்பொருளுநாற்பொருளு முழுதுமுணர்முதிரு ளொளிசால், மூதெயிற்கோயில்வரயோகிராமாநுசன்முதுக்குறைவுடைப்புலமையோன், இம்மையினொடம்மையுறுபயனெய்துசெந்நெறியி னிலையுமாற்றரிக்கருளினோ, மறந்திட்டவிண்டுதத் துவவிளக்கத்தையக விருள்போமமலரியென்கோ, செம்மையுறுவைணவப் பௌவக்குமாதிருசெழுந்திங்களாகுமென்கோ, செருச்செய்பாடண்டமுத லாம்புன்மதக்களிறு தெருமரல்செய் சீயமென்கோ, சும்மையுறுகசடறுபுலக்கிழவர்முடிமிசைச்சூடுபொற்பூவதென்கோ, தொய்யிலுள்ளத்தனேன் யாதென்றுதுணிந்து சொல்லுகேன் சொலிவெல்லுகேன்.

சென்னைக்கவர்ன்மெண்டு போதனாசக்தி விர்த்திவித்தியாசாலை என்னும்

நார்மல்ஸ்கூல் தமிழ்த்தலைமைப்புலவர்-கோமளபுரம்,

இராசகோபால பிள்ளையவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

மருக்கோங்குக்காவரங்க வரயோகிராமாநுசப் பேர்வள்ளலீ; இருக்கோங்குமுதற்கடவு ளாரணனல்லாலில்லென் றிசையக்காட்டிச், செருக்கோங்குசெருமலிபுன்புறச்சமயத்திணியிருளைச்சிக்குமாறு, பெருக்கோங்குவிட்டுணுதத் துவவிளக்கநூலிங்குப்பெரிதீந்தானே.

ஸ்ரீமதகுஞ்சரபஞ்சரியாகிய
திரு-திருநாராயணராமாநுசதாஸரவர்கள் இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மண்டுற்றபல்வேறுபுலைச்சமயமாள்பொழியவண்காநாட்பன்,
வண்டுற்றவரங்கமுறையழகியவேகாங்கிமணவாளவள்ளல்,தொண்
டுற்றவரயோகிதொன்மறையாய்ந்ததிணுண்மைதுலங்கவிங்கோ
ர்,விண்டுற்றவிளக்கமெனும்வியனூலொன்றுதாமாவிரித்தான்மாதோ

நிலைமண்டிலவாசிரியப்பா.

பூவிற்சிறந்தபுண்டரீகத்தில், நாவியற்கலைகொணான்முகக்கட
வுளைப், படைத்தரனேடுயிர்படையென்றருளும், படையுடை
யாதிபகவன்றுதிய, ஆரணந்தேடற்கரியதேவன், நாரணன்சீர்த்
தியைநாட்டவநந்தன், பூதலத்துயர்பெரும்பூதூரதனில், வேத
வேள்விசெய்வியனசூரி,கேசவாசாரியர்கிளர்தவப்பயனாய்,பே
சவுதித்தருள்பெம்மான்றனக்கு, வேதமுணர்த்தவிப்பிரனும்,
யாதவனீன்றவிருபுதல்வியரும், கைம்மைகளாதலிற்காமந்தலைக்
கொளீஇ, மம்மருழந்துமாணெதிராசன், பக்கலிற்சென்றுதம்
பரிவுவிளம்பிட, அக்கணத்தூர்ப்புறமாக்கலுமவர்கள், நும்மு
யர்பெயர்க்கொருநூக்கலாவம்பல், விம்முறமதமதுவிரிநீருலக
த், தியற்றுவமெனவுரைபயிற்றியச்சிறுமியர், சலமொடுவடக்க
ட்சார்ந்துதானூர், தலமதிலொருமடந்தாவித்தாங்கே, உணர்வி
ல்புல்லாடவர்க்குறுகிழத்தியராய்ப்,புணர்முலைஞெமுங்கப்புது
நலந்தந்து, நன்மதியழிதல்செய்நயத்தகாமரபின், துன்மதிக்
கொத்ததூர்த்தநூல்களைக், கற்பனைசெய்தவைகாரிசேய்முதல்,
பொற்புற்றிலகும் பூர்வாசாரியர், ஓரான்வழியாயுடையவர்க்
கோதிச், சீராய்வருமிச்சிட்டாசாரம், எண்டிசைபரவுமிராமா
நுசமுனி, தொண்டராமெமைத்தந்தூயவருளால்,ஏயினசொ
ற்கொடுங்கெய்தினமென்னுத், தூயவரல்லாத்தோகையர்மொ
ழிகொளா, ஞானமில்வேதியரெனையோர்பலரும், ஒன்றிக்கட்கு
டியுகந்துமற்றுயிர்களைக், கொன்றுதின்னுங்குணங்கராய்ப்பொ
ல்லாக், கலிக்குநற்சார்பாக்கதித்தறக்கடவுள், அலக்கணுற்றழுங்
கவடர்ந்தாங்காங்குப், பதிதராயுழலும்பவந்தனைநீக்க, எதிபதிய
ன்றேரியம்புபுன்னூல்; ஆய்ந்தக்கணமேயழலுணவிடுவித், தே
ய்ந்தமாக்களியல்பைத்திருத்த, அத்தொடுமாயாதன்றைக்கன்று,
உத்தமவைணவரொத்துச்சீரிய, செந்தமிழின்மணஞ்சிறிதுமு
ணராத், தொந்திவளர்க்குந்துச்சாரியராய், முழுமதிக்கண்

ஞொருமுயற்கறைபோலவும், தொழுதகுநீரிற்றுதைநுரைபோலவும், புதுமணக்கமலப்புல்லிதழ்போலவும், ததைதுநெற்குமிதானதுபோலவும், அண்டர்குழாம்புக்கமுதம்பெறவே, பண்டுறுந்தானவர்பான்மைபோலவும், செருக்கொடுபவுண்டரிகன்றிருமாலின், உருக்கொடுநசிக்கவுற்றதுபோலவும், வரவைதிகநெறிவைணவசம[illegible]ருணாபெறுதோமென வுதித்தங்குரித்தே, அரவகலல்குலணியிழையிளமுலைக், குரவணிகருங்குழற்கொல்லுலைவெற்கட், டெரிவையரின்னலம்பருகினர்முயங்கல், அரிதலைப்பாளையபூநறுத்தேக்கல், பொருதலைத்தகர்மீன்போழ்முகக்கேழல், இருஞ்சிறைப்பறவையின்னனவருத்தல்,விரும்பியன்னவைவேட்கையோடியற்றிப்,புறத்திற்றிருமண்பொலிதரச்சாத்திப், பெறத்தகுசீயர்நம்பெருமாள்வகுளா, பரணன்சடகோபன்ராமாநுசன், திருவேங்கடத்தான்றிருக்கினம்மாழ்வார், எனப்பெயர்புனைந்திட்டிழுக்கென்பனவெலாம், மனப்படக்கரந்துமாயவேடங்கொடு, கலைப்பொருண்மாற்றிக்கழறும்பொய்யர், நிலைப்பெறுநீசநிசாசரர்தாமெனக், கள்ளிகிளர்ந்தவாடொப்புறவிப், பள்ளமடையார்பற்பலவிடங்களில், மன்னிப்ரசண்டிசெய்மாறுபாடுகளைப், பன்னிநன்மாந்தர்பண்பைமயக்கும், புலைமயக்கொடுபல்புன்மதாசாரமும், நிலைகொள்விசிட்டாத்துவிதநீதியும், சேதனர்தெளிந்துயச்சீர்த்தநூல்களை, ஆதரமாக்கொண்டாய்ந்ததிறுண்மையை, ஐயமில்வேங்கடாத்ரியின்னருளால், உய்யக்கிடாம்பியென்றுமரபினில்,வருராமாநுசவள்ளலையணுகித், திருவிலச்சனைதிகழ்புயத்தனாகிப், பெரியகோயிலைப்பேண்சிறுபுலியூர்,அருமுனியம்பொனடியாமழகிய, மணவாளன்கழன் மன்னிப்பொய்யிலாக், குணபோதம்பெறுகோதிலாப்புலவர், கோமான்முசர் குழாந்தொழுமாதவ, சீமான்சத்தியசீலனரங்கம், ஊராய்மகிழுமுயர்வரயோகி, பேராலோங்குபிரான்றரமில்சீர்,முத்தியருளுமூர்த்திவிட்டுணு, தத்துவவிளக்கந்தாஞேதினனே.

ஸ்ரீமத் - முடிச்சூர். அப்பாவுமுதலியாரவர்கள்
பிரதமமாணாக்கராகிய-திருவல்லிக்கேணி-ஜன்ஜாமாருத
இராசகோபாலபிள்ளையவர்கள்இயற்றிய
எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்மேவுமெதிராசவரமுனியனுட் டித்தசெம்மையைத்தேர்ந்து
ணாக்கும், தேர்மேவுவிண்டுதத்துவவிளக்கந்தனைச்சிந்தித்தியாரு

நீலகிரி-இராமாநுஜசித்ராந்தப்பிரசங்கி
மேகநாத்நுஜனா-சந்திரசேகரராவர்கள் இயற்றிய
அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சீரங்கக்கோயில்வருவரயோகி ராமாநுசப்பேர்ச்செம்மல், போரரும்புறச்சமயப் புல்லொழுக்கினாமென்னப் புகன்றுவே தந், நீரருமைவனவநீளெறியினிதுமற்றில்லென்ன நெடிதுநாட்டிப், பேரருளிட்டெனுதத்துவவிளக்கமீந்தனன்சீர்பிறக்குமாறே.

கோயம்புத்தூராழ்வார் சபாப்பிரசங்கி
மாயாவாதிவாரணபஞ்சான-பக்தவச்சலதாசரவர்கள் இயற்றிய
எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஐம்புலப்பகைசெற் றொருக்கிநன்மனத்தைப்பரங்கமாநகர்த் தனிமுதல்பால், வம்பறப்பதித்தகுணனுடையவர்யோகி ராமாநுசவள்ளல், பம்புசீர்வேதநெறி வணவப்பூம்பயிர்தழை வளர்வெய்த, வெம்புறச்சமயக்களைதெறவிந்தத்துவவிளக்கமீந்தன்றால்,

செவ - இலட்சுமணராவு அவர்கள் இயற்றிய
எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மன்னியசீர்த்திருவரங்கம் பெரியகோயில்வரயோகி ராமாநுசப்பேர்வள்ளல், துன்னியசீர்மறையவரு ரணேயென்றுந் தொழுநெறியீதாமென்றுந் தொகுத்துத்தோயில், இன்னியல் கொள்விட்டுணுதத்துவவிளக்கவியனுலொன்றிந்தெம்மனோருக் கீந்தான், அன்னவற்குக்கைம்மாறு செய்மாறென்னென்றுமீங் கோம்புகழவற்குவேய்குவோமே.

கோயம்புத்தூர்-இராமாயணப்பிரசங்கி
இராகவப்பிள்ளையவர்கள் இயற்றிய
நிலமண்டிலவாசிரியப்பா.

அரங்கன்குடிகொளச்சதனளித்த, ஆதிப்பிரமனளித்துமக்க ளாம், இமையவரியக்கர்சன்களிமுகன், ஈங்கிவர்மாணுடரியாவரு மேத்திட, உயக்குமருளைலோங்குவயினைவத்திடல், ஊக்கமிகுசமூ டைப்பள்ளமடையார், எதிபதிமதத்தரியாங்களேயென்று, எதி நித்துதிக்குமீனமதத்தின், ஐயமறுத்திவராதிவிண்டுவின், ஒளிர் நிடத்தை ஒங்கச்செய்து, ஓதுமம்பூமனுயர்வரயோகி, ஔவி யமகற்றி யுரைத்தனன்மாதோ.



வித்வான் - திருமயிலை

சண்முகப்பிள்ளையவர்கள் இயற்றிய

கட்டளைக்கலித்துறை.

திரையார்கலிவயிற்கண்படுக்கும்பரன்சேவடியிங்
குரையார்வமோடணைந்தன்னவனுண்மையையோர்ந்துளந்தா
கரையாவெழில்வரயோகியென்பானிக்கடையுகத்தித் [ன்
தரையார்பெறவிண்டுதத்வப்ரகாசமுஞ்சாற்றினனே.

வெண்பா.

அத்திக்கருளுமெழிலாராவமுதனிருஞ், சுத்தசித்தாந்தந்துதை
ந்திலங்க - மற்றவர்தம், பொய்த்தசித்தாந்தம்புழுதிபடவேபு
ரிந்தான்,கற்றவரயோகிகனித்து..............................(க)

ஆக்கையகன்றபோதாக்கையினைக்கல்லறையி, லேற்கவைக்கவே
முடிவிலேயெழுமென்றேவிளம்பும், பொய்ம்மார்க்கந்தன்னை
ப்புலப்படப்பொய்யென்றிசைத்தான்,இம்மானுபாவனிசைந்து

பரம்பொருளைவேதம்பரந்தாமனென்னு, மரும்பயனைராமா
நுசனன் - றருளுநெறி, காணுக்கரவடர்தங்கற்பைப்பொய்யெ
ன்றிசைத்தான், மாணுர்வரயோகிவந்து......................(௩)

சபாபதிதம்பிரானவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பரமதமாந்திமிரமணைந்தழிதருசேதனருய்யப் பகலோன்
போல்வந், தருணெறியாமெழில்விண்டுதத்வவிளக்கந்தனையின்
றருளினுனல், ஒருகடிகாசலப்பெருமானுபயபதமலருக்குளன்
புபூண்டோன்,வரயோகிவராமாநுசதாசனெனும்பெயர்கொ
ள்வள்ளியோனே.

கோயம்புத்தூருக்கடுத்த-குனியமுத்தூர்க்கணக்கராகிய-வித்துவான்

கறுப்பண்ணமுதலியாரவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீருலவுபூவுலகமீதிலுறைபாகவத சேகரர்நறுஞ்சுரும்பாச்
சீதரனதுபயசரணரவிந்தத்திலுறு தேனுணஞானமதனைத் - தே
டியுண்டானந்தவீட்டையவாரணச் செஞ்சொலமுதத்தையுதவு
ம்-திகழிராமாநுசமகானுபவராமே திருத்துவைணவசோதியை
த், தூருலவுபாவமுட்கொடுபள்ளமடையார்செய் துன்மதந்த
னைமேற்கொளீஇச்-சுத்தசாத்துவிகாபிமானத்தையடையாத சு
சியிலர்பசாசநகரைத் - துனைந்துநடவாமலன் றேரைத்திருத்தி

டச்சுருதியுபநிடதார்த்தமுந்-தொல்லாசிரியவசனசம்ப்ரதாயமு நிறைதொடுத்ததிகதிப்பியமதாய்த், தாருலவுவிண்டுதத்துவவிளக்கப்பெயர்தரித்தநூலொன்றியற்றித்-தக்கபெரியோர்கண் முன்னிலையிலனைவருமிதேசரிதகுந்தகுமென்னவே-சாற்றிநலமாயரங்கேற்றிபிதுதந்தனன் றகுசென்னையருகாண்மையாற்-றளிர்பூகவேலிவாய்திருவலிக்கேணியிற்றங்குகுணசீலனுக்கும், பேர்பெறுகிடாம்பிராமானுசாசாரியாற் பிறங்கிடுசமாஶ்ரயணமும் பெட்பினொடுவேங்கடாத்திரிஸ்வாமியவரிடம் பெறவரியவேதாந்தமும்-மீடுறவுணர்ந்தழகியமணவாளப்பெயர்ப்பெரியர்களிரகசியமுமே-பெரிதுகேட்டநெறியிலொழுகரங்கத்திலுறைபேசரிய வரயோகியே.

சென்னை-வைகுண்டவாத்தியார்வீதியில்-சாமிநாதவாத்தியாரென்னும்
திருமலைச்சாமிதாசரவர்கள் இயற்றிய
கட்டளைக்கலித்துறை.

வையம்புகழ்திருவேங்கடமாவன்மலரடிக்கே
மெய்யன்புசெய்யும்வரயோகிசெஞ்சடைமேவுகங்கை
அய்யன்றொழுவிண்டுதத்வவிளக்கமதாய்ந்தெடுத்துப்
பொய்யர்மதப்பயிர்தீர்ந்திடவந்துபுகன்றனனே.

அவுரங்காபாத்-முதரீஸ்
இப்ராம்ஸாஹேப் அவர்கள் இயற்றியது.
కందపద్యము.

శ్రీపతికృపవరయోగిర। మాపతిపరుడనుచు దెలసిమానవులుసదా
శ్రీపతిదాసులునైవర। దాపదమును జేరవిష్ణుతత్వము జెప్పెఁ॥

குருவாலூர்-இஸ்மால்ரவுத்தரவர்கள்இயற்றிய
தரவுக்கொச்சகக்கலிப்பா.

பாரபக்கமேதுமிலாப் பக்தன்வரயோகியிங்குத்
தாரகமாயுரைத்தவிண்டு தத்துவநல்விளக்கமதைப்
பாரிலெல்லாச்சமயிகளும் பார்க்கவுணர்ந்தொருநெறியில்
தீரர்களாய்மாயையொரீஇத் திப்பியமெய்ப்பதம்பெறுவார்.

ஸி - பர்த்தாலிமியூதுரை இயற்றிய,
நேரிசையாசிரியப்பா,

மலர்தலையுலகின்மன்னுமாங்கிலேய; நலங்கிளரரசிநடாத்துசெங்கோலுட், படுமெழிற்சென்னையம் பதியிலிராஜ, தானியென்றிசைக்குறுந்தானமதனைச், சேர்தருமாங்க மார்தருமாங்கப், பேர்தருமந்நகர்பெரிதுவந்திருப்போன், அருமறைகூறு

ஸ்ரீ

ஸ்ரீ ம த் வ ர வ ர மு ந யே ந ம:

## அ வ தா ரி கை.

ஸ்ரீயப்பதியாய், ஸ்ரீவைகுண்டநிகேதனனாய் எழுந்தருளியிருக்கிற பரமபதநாதன், நித்தியமுக்தரைப்போல் ஸர்வசேதனர்களுக்கும் நிரதிசயானந்தானுபவமுண்டாக்கும்பொருட்டுக் கரணகளேபரங்களைக்கொடுத்து, நாசரஹிதமான பரமபதமென்னும் அத்தையடைபவர்கள் சுத்தஸத்வாத்மகமாய், பஞ்சோபநிஷன்மயமாய், ஞானந்தஜனகமாய், ஒளிக்கொண்ட சோதியுமாயிருக்கும் அப்ராக்ருத விக்ரஹத்துடன் என்னைச் சேவித்துக்கொண்டு நித்யகிங்கர ஸ்வபாவத்துடனிருப்பார்களென்றும், மற்றபதவிகளில் ப்ரளயாந்த்யத்தில் மூன்றுநித்தியமானவையா யிருந்தபோதிலும் அவற்றையடைபவர்கள் அசரீரிகளாய் அணுஸ்வரூப ஜீவிகளாயிருப்பார்களென்றும், அவற்றில் சுகமில்லையென்றும், சிலபதவிகளில்சேர்ந்தவர்கள் தேவர்களாவார்களென்றும், மற்றவைகளை யடைபவர்கள் அற்பசுகமடைந்து புனராவர்த்தி ஜன்மங்களுக்கு வருவார்கள் என்றும், ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸபுராணங்களாலும், ஆழ்வார் ஆசாரியர்கள் ஸ்ரீஸூக்திகளாலும், அறிவித்திருக்க, சிலர்தாமஸரிஷிகளால் ஏற்படுத்தப்பட்டமோஹனசாஸ்த்ரங்களைச் சத்தியமென்றுநம்பி, அவற்றிலுழன்றுகொண்டிருக்க, நல்லசத்துக்களானமஹனீயர்கள்வேதசாஸ்த்ரப்ரமாணங்களாலே ஸாரஸங்க்ரஹமாய்வெளியிட்டருளியும், ப்ரத்யக்ஷபரமபதமானதிருவரங்கத்தில் கருடமண்டபத்தின்மீதிற் சித்ரரூபமாய்ப்பரமபதம், விரஜை, அதனடியில்விராட்புருஷன், அந்தப்புருஷனிலிருக்கும் அண்டங்கள் அவ்வண்டங்களிலிருக்கும் ஸ்வர்க்க, நரக, ஸ்தானமுதலானவிவரங்கள் ஆகிய எல்லாவற்றையும், ஸகலரும் ஸேவித்துப்பரனையறிந்து உஜ்ஜீவிக்கவேண்டுமென்ற திருவுள்ளத்தால் எறியருளப்பண்ணியுமிருக்க, பெரியோர்களுடைய ஸ்ரீஸூக்திகளையாவது, அவர்கள் எறியருளப்பண்ணியிருக்குமவைகளையாவது ஸேவித்துணராமலும் ஸன்மார்க்கத்தில் வர்த்திக்கும் பாகவதோத்தமர்கள் சந்நிதியில் ப்ருத்யஸ்ய ப்ருத்யராய்த் திவ்யார்த்தங்களைக் கேட்காமலும், சதுராக்ஷரி ஏகாக்ஷரியென்னும்பள்ளமடையார் ஸகலவர்ணத்தார் வீடுகளிலும் மதுமாம்ஸமுதலானவைகளை ஜிஹ்வாசாபல்யத்தால்புசித்து ஸ்ரீவைஷ்ணவர்களை நாநாவிதமாகத்தூஷித்துப்பரமபதத்தையடையும் ஸ்ரீவைஷ்ணவர்கள் நாங்களேயென்றும், ஸ்ரீவசனபூஷணாதிகாரிகள்

நாங்களேயென்றும், சாத்தாதஸ்வாமிகள் நாங்கள்தானென்று
ம், இதற்குத்திஷ்டாந்தம் ஸ்ரீவைஷ்ணவ சமயாசாரத்தில் பார்
த்துக்கொள்ளலாமென்றும் பாமரர்கள் ப்ரமிக்கும்படிபோதி
க்க, அவைகளையநேகர் நிஜமென்றுநம்பி, அவர்கள்பக்ஷமாய்ப்
பரமவைதிகசீலர்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்களைத்ருணமாகவெண்
ணி அந்தப்பள்ளமடையாரைக்காட்டிலும், ஷ பாமரர்கள்பத்
துப்பங்கதிகமாகத்தூஷித்து ஸ்ரீராமாநுஜர் திவ்யாஜ்ஞையின்ப
டி ஆசாரசீலத்துடன் தொண்டக்குலத்துள் கலந்த ஸ்ரீவசனபூஷ
ணாதிகாரிகளாயிருக்கும் அவர்களைச்சாத்தாத முதலிகளென்றும்
நம்பரமாசார்யரான பிள்ளைலோகம் ஜீயர்திருவாய்மலர்ந்தரு
ளின ஸ்ரீவைஷ்ணவசமயாசாரத்தின்படி அநுஷ்டிக்கும் விலக்ஷ
ண ஸ்ரீவைஷ்ணவர்களின்ஞானொன்று மறியாமல் அஜ்ஞானாந்தகா
ரத்திலகப்பட்டுமீள ஹேதுவில்லாமல் பகவத்பாகவத ஆசார்
யர்கள் திருவடிகளில் அஸங்கேயாபசாரப்பட்டுக்கொண்டிருப்
பதைக்கண்டு சகிக்கக்கூடாமல், அநேகபாகவதர்கள் கேட்டுக்
கொண்டபடி ஏகாக்ஷரி, சதுராக்ஷரி முதலான பள்ளமடையநு
ஷ்டான பிரகடனத்துடன் ஏகாக்ஷரிரகசியமும், சதுராக்ஷரிதனி
யன்களும், ஸ்ரீரங்கநாதபட்டாரியர் வெளியிட்டருளின ஸ்வரூ
பவிரோதி நிர்ணயரஹஸ்யமும், ஷ பள்ளமடையார் ப்ரமிக்
கச்செய்யும் அஜ்ஞானவந்தகாரத்தி லகப்பட்டவர்களுக்கும் ம
ற்ற மதஸ்தர்களுக்கும் ஆதித்யனைப்போ லந்தகாரத்தைப்போ
க்கி ஸத்ஜ்ஞானம் ஜனிக்கும்பொருட்டு, ஸகலமதஸ்தர்கள்சே
ரும் பதவிகளும், அவைகளிருக்கும்படியான ஸ்தானங்களும்,
வேதவேதாந்த ஸ்ம்ருதி, இதிஹாஸபுராணாகமமந்த்ர ப்ரமாண
ங்களுடன் ஸாரஸங்க்ரஹமாய் ஸ்ரீரங்கவாசியாகிய வரயோகி
ராமாநுஜதாஸரால் இயற்றப்பட்ட ஸ்ரீவிஷ்ணுதத்வவிளக்கம்
அநேகபாகவதபுண்யர்கள் ஸஹாயம்பெற்று அவர்கள்கேட்
டுக்கொண்டபடி அச்சில்பதிப்பிக்கலாயிற்று. காலக்ஷேபம்ஸ
ர்வாதிகாரமென்றும், ஸமாஸ்ரயணம் ஸர்வாதிகாரமென்றும்,
ஸ்ரீபாததீர்த்தத்தளிகைப்ரஸாதங்கள் ஸர்வாதிகாரமென்றும், பு
நஃஸமாஸ்ரயணங் கூடுமென்றும் கர்மம் வர்ணத்தைப்பற்றின
தென்றுஞ்சொல்லுவதைப்பற்றிப் பூர்வாசார்யர்கள்வசனானுஷ்
டானப்ரமாணங்களைக்ரோடீகரித்த ஓர்க்ரந்தம் இன்னஞ்சிலநா
ளில் அச்சில்பதிப்பிக்கப்படும்.

ஸ்ரீபராங்குசபரகாலயதிவரகுருவே நமஃ.



    

ஸ்ரீமத்வரவரமுநயேநம:



## தனியன்.

అస్మద్దేశికమస్మదియ్యపరమా చార్యానశేషాన్గురూన్
శ్రీమల్లక్ష్మణయోగిపుంగవమహా పూర్ణౌమునింయామునం
రామంపద్మవిలోచనంమునివరం నాథంశఠద్వేషిణం
శేనేశంశ్రియమిందిరాసహచరం నారాయణంసంశ్రయే॥



## பஞ்சரத்னமாலிகை.



సీసపద్యములు.

శ్రీకరముగనుండు శిరుపులిపురినిలో - కజ్ఞానతమసంబునణచిగొట్ట।
అరుమాకడలముదుడగుహరి-కరుణచేనర్కప్రకాశుడై యవతరించి। దం
డత్రయంబుకమండలుబట్టిన - కాషాయధరభాష్యకారులనగ। వెలిగెడు
శ్రీతిరువేంగడమునితిరు- వడిగళుగొనిపరమార్థమరసి। అధమమతులగు
వారలకలరుప్రాప్య। ప్రాపకంబులజూపంగపరిఢవిల్లి। పుడమియందుననన
సునేలబోడమిశాంతి। మొనయునళగియ మణవాళమునులదలతు॥ (౧)

సప్తాశ్వసంకాశశంఖచక్రములనా - చార్యానుకంపభుజములధాల్చి।
యున్నతముగద్వాదశోర్ధ్వపుండ్రంబుల-చిహ్నములతోగురుచింతజేసి।తిరు
కోట్టియూర్ నంబితిరుమాళిగందుతి-రుక్కోడియాళ్వార్తిరువడిగళై। శే
షత్వముగనుండిసేవారహస్యముల్ భాషించినామీదుపరమకరుణ। నతిరహ

స్వయముగానుండునర్థ నములను। వేదములనంత బోధించినమహాత్మునకు। పుడమి
యందుననను నేలబోడమి శాంతి। మొనయునళగియమణవాళమునులదలతు॥

గురుడై దైవంబనిగురుతుగాబట్టిన- వరులకేయితరదైవతను లేల। భాగవతకైంకర్యపరులైనవారికి- యోగసాధనలంపు యోజనేల। పరమవైష్ణవుల శ్రీపాదరతులగనుండు- వరదాసులకువిషయవాంఛలేల। మహిమంత్రపన్నులమరుసజొచ్చినవారి- కితరమంత్రములందుయిచ్ఛయేల। పదినియొకటిని యొందియుమాయవేషములనుదాల్చుకగురులనుమూఢులేల। పుడమియందుననను నేలబోడమిశాంతి। మొనయునళగియమణవాళమునులదలతు॥ (3)

ఆశ్రమస్వీకారమందిబహుశ్లోక- కారణాశాపాశగణముగోసి। యాయకారంబునందర్థంబుగన్గొని- వికృతదైవంబులవిడచియాము। కారార్థమూహించిగాంచియాభాసపు - మతములపైరేగుమనసునిలపి। మాతురార్థములోనిమర్మంబెఱింగి - నిశ్చయముగాచింతల చెదియగొట్టి। ఇదిమహాగూఢతరమిదియితరదుగణ। మిదితదీయవిలాసమీవెఱుగుమనుచు। పుడమియందుననను నేల బోడమిశాంతి। మొనయునళగియమణవాళమునులదలతు॥

అష్టాక్షరీమర్మమంతరంగంబున- దెల్పిధన్యత్వంబునేపరచి। మంత్రద్వయరహస్యమంతయుబోధించి భయముజెందిననాడుభయమువాపి। చరమశ్లోకార్థంబుజక్కగావివరించి--చరమనిష్టనుజూపిచపలముడిపి।అమలస్వరూపంబునాప్తతజూపిన- వరయోగులకుదాసవర్యుడగుచు। బుధులశ్రీపాదపద్మముల్ పూజజేసి।పొడవుతళిగప్రసాదముల్ పొందుమనుచు। పుడమియందుననను నేలబోడమిశాంతి ।మొనయునళగియ మణవాళమునులదలతు॥ (४)

—:0:—

வாழித்திருநாமங்கள்.

தென்னரங்கன்பொன்னடியைச்சேர்ந்திருப்போன்வாழியே
ஸ்ரீவசனபூஷணத்தைத்தேர்ந்துரைப்போன்வாழியே
மன்னுதிருமந்திரத்தின்வளமுரைப்போன்வாழியே
மாதவன்பாலன்றிக்கண்வையாதான்வாழியே

ப... றுவல்லிணைப்படகருமலன் வாழியே
பராங்குசனார்தமிழ்மறையைப்பரிந்துரைப்போன் வாழியே
...லியெம்பாரடிபணிவோன் வாழியே
அழகியமாமணவாளனடியிணைகள் வாழியே.

சீராருந்திருப்பதிகள்சேவிப்போன் வாழியே
திருவேங்கடமாமுனிவன்திருவடியோன் வாழியே
பாராருமெதிராசர்பதம்பணிவோன் வாழியே
பகவத்விஷயார்த்தத்தைப்பரிந்துரைப்போன் வாழியே
ஏராருந்தைப்பூசத்திங்குதித்தோன் வாழியே
எட்டிரண்டினுட்பொருளையெமக்களித்தோன் வாழியே
ஆராமஞ்சூழரங்கமடைந்துய்ந்தோன். வாழியே
அழகியமாமணவாளனடியிணைகள் வாழியே.

—:0:—

## மானவபோதை ஷட்ஸ்லோகம்.

కమలాపయోధర తటాధివాసినం।కమలాయతారుణ విశాలలోచనం
కలయంతుకాల జలదచ్ఛవింసదా।వరయోగివంద్య వరరామనాయకం (౧)

గిరిశాంబుజాత భవభావితంసదా।నిగమాంతసౌధ శిఖరావతంసితం
భజతాంపురాణ పురుషోత్తమంపరం। వరయోగివంద్య వరరామనాయకం.

జగదుద్భవస్థితి వినాశకారణం।వినతాపవర్గ కరణైకృతక్షణం
శరణంభజంతు శరణాగతాశ్రయం। వరయోగివంద్య వరరామనాయకం.

నహిసర్వమేత దుతదోషకల్పితం।పరమాత్మనస్త్య జతబుద్ధిమీద్రిశీం
మనసాపరంభజ తశుద్ధచేతసో।వరయోగివంద్య వరరామనాయకం. (౪)

నహినేహనేహ కిమపీతిజల్పితం।పరిముంచతాద్య నిజదోషకల్పితం
సహసాసమాశ్రయత సారసేక్షణం।వరయోగివంద్య వరరామనాయకం.

మనసానమాన శతబాధితంమతం।క్షణమాద్రియద్వ మతిమూఢచేతసః
భజతాతిదీన జనతార్తినాశకం।వరయోగివంద్య వరరామనాయకం. (౬)

## நிலமண்டில வாசிரியப்பா.

ஆதிமூலாவுனை யன்புடன்றுதிக்கும்
நீதிமூலரா நின்னடியார்சிலர்
அஞ்ஞானசத்த னற்பறுமிவனைச்
சுஞ்ஞானனென்று தொல்லுலகத்தின்
மதங்கள்வெகுவாய் மதிதனைமயக்கிப்
பதிதராய்க்கெடுவோர்ப் பாவனமாச்செய்
ஆரியரடிகளை யன்புடன்வணங்கிப்
பேரின்பவீடுறப் பெற்றவர்த்தங்களைச்
சுருக்கமாய்த்தமிழிற் சுருதியுக்தமாச்
சுரலோகபேதஞ் சுலபமாய்த்தெரிய
அறிவிக்கவேண்டுமென் றன்புடன்வினவ
மறுவிலாஅஸ்மதா சாரியரைத்தொடங்கிப்
பூர்வாசாரியர் பொன்னடிவணங்கி
ஆர்வமோடுனது பாதாம்புயம்பணிந்தேன்
விண்டுதத்துவ விளக்கம்விரிவாய்த்
தொண்டர்பிரியனே சொல்லவென்வாக்கினின்
றியம்பிடச்செய்வா யிதைச்சுபகரமாய்
நயந்துபார்ப்பவரை நல்லருள்புரிவாய்
வரயோகிப்ருந்த வந்திதபதாப்ஜா
வரராமசந்த்ரா வனமாலைமார்பா
நரசிங்கரூபா லக்ஷ்மிநாரணனே
சரணஞ்சரணஞ் சரபமதாரியே.

ஸ்ரீ அழகியசிங்கர் திருவடிகளேசரணம்.










அஸ்மத்குருப்யோநம:

ஸ்ரீபராங்குஶபரகால யதிவரர்
திருவடிகளேஶரணம்.

# ஸ்ரீவிஷ்ணுதத்வவிளக்கம்.



ஸ்ரீயஃபதியாய், ஸ்ரீவைகுண்ட நிகேதனனாய், ஸர்வஶேஷியாய், ஸர்வநியந்தாவாய், ஸர்வஸ்வாமியாய், ஸர்வவ்யாபகனாய், ஸர்வதாரகனாய், ஸர்வரக்ஷகனாய், ஸர்வபோக்தாவாய், ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், ஸர்வஸம்பூர்ணனாய், அவாப்தஸமஸ்தகாமனாய், அகிலபுவனஜன்மஸ்திதிலயகாரணனாய், அகிலஹேயப்ரத்யநீகனாய், எழுந்தருளியிராநின்று, (సూర్యకోటిప్రకాశాత్ ।చంద్రకోటి సుశీతలం) என்றும் (తద్విష్ణో:పరమం పదం) என்றும் (అక్షరం పరమం పదం) என்றும்சொல்லும்; இந்த ஶ்ருதிகளின்படியே; அநேககோடி ஸூர்ய சந்த்ர ப்ரகாஶமும், நாஶரஹிதமுமான அந்தப் பரமபதத்தில் (దివ్యావరణశతసహస్రావృతం) என்ற ஶ்ருதிவாக்யத்தின்படியே; அப்ராக்ருதமாகிய வநேக ஸஹஸ்ர நவரத்ந ஸ்தாபிதங்களான அரண்களும், மேடைகளும், புவனேஶ்வரங்களும், நதிகளும், கற்பவ்ருக்ஷ ஸமூஹங்களுமுள்ள ஶ்ருங்காரமான தோட்டங்களும், திவ்யபுருஷ ஸ்த்ரீகளுமுண்டாகிய மணிமயஸ்தம்ப ஶோபிதமான திருமாமணி மண்டபமென்னும் கொலுக்கூடத்திலுபயவிபூதியுந் தொழிலாக வகுப்புண்டு, ஸர்வாச்சர்யமயமான கோப்புடைய சீரிய சிங்காஸனத்திலே பனிரண்டிதழாய், நாநாஶக்திமயமான திவ்யகமலமாய், அதின் திவ்ய கர்ணிகையிலே, புஷ்

பஞ்சய விசித்ரமான திவ்யயோக பர்யங்கமாய், அதின்மே லநேகமாயிரஞ் சந்த்ரர்களை யுருக்கிவார்த்தாற்போலக் குளிர்ந்த புகரையுடைத்தான திருமேனியையுடைய ஸர்வவிதகைங்கர்ய கல்யாண பரிபூர்ணனான வகிலகீர்த்திபொருந்திய திருவநந்தாழ்வான் மீதில் லக்ஷ்மிபூமி நீளாயுக்தனான ஸர்வேஶ்வரன் (కేయూరవాన్ మకరకుండలవాన్ కిరీటీహారీహిరణ్మయవపుఃధృతశంఖచక్రః) என்கிற உபநிஷத்தின்படி ஆயிரமாற்றுத் தங்கப்ரகாஶத்தைப்போன்ற அப்ராக்ருத திருமேனியையுடைத்தான திவ்யமங்களவிக்ரஹனாய், திவ்ய மணிப்ரகாஶ கிரீடகேயூரமகரகுண்டலாதி திவ்யாபரண திவ்யாயுத வலங்காரனாய், ஸமஸ்தமான வாத்மாக்களையும், (ఆత్మా వై పుత్రనామాసి) என்கிற ஶ்ருதியின்படியே நவவித ஸம்பந்தங்களிலொன்றாகிய பிதாபுத்ர ஸம்பந்தத்தால், ஆலிங்கனாதி க்ரியையுடன் கொஞ்சிக் கொண்டிருப்பான், இந்த ஸ்வாமி பரப்ரஹ்மமென்றும், ஆதி நாராயணமூர்த்தியென்றும், பரமபதநாதனென்றும், முக்யத் திருநாமங்களை யுடையனாயிருத்தலேயன்றி இன்னும் அநந்த திருநாமங்களோடிருப்பன்.

இந்தப் பரப்ரஹ்மத்தை ஸ்ரீமந்நாராயணனை "నారాయణపరం బ్రహ్మతత్త్వంనారాయణఃపరః" என்று வேதமிரட்டித்துச் சத்தியஞ்செய்தபடியே, பரனென்று திடசித்தராய், ரஹஸ்யத்ரய ஜ்ஞானத்தாலறிந்து பரமபதத்திற் ப்ரவேஶிப்பவர்களுக்கு நராயணபரர்களென்றும், ஸ்ரீவைஷ்ணவர்களென்றும், ஸ்ரீவசனபூஷண வதிகாரிகளென்றும், ஏகாங்கிகளென்றும், பரம ஏகாங்கிகளென்றும், ப்ரபன்னர்களென்றும், இப்படி யநேக திருநாமங்களுண்டாயிருக்கும். இதுமுக்யமான ஸ்தானம் (యన్న దేవాఃనమునయః । నచాహంన్న చశంకరః । జానంతిపరమేశస్య । తద్విష్ణోఃపరమంపదం) என்ற ஶ்ருதிப்ரகாரம் தேவர்களாலும் ஸநகாதிமுனீஶ்வரர்களாலுஞ் சதுர்முகனாகிய என்னாலும் ஶங்கரனாலு மறியவொண்ணாத பரமபதமென்று பிரம்ஹா சொன்ன வாக்யத்தின்படியே ப்ரஹ்மருத்ராதியர்களறியவொண்ணாதவிந்த நித்யவிபூதியிற் சேர்கிறவர்கள் லீலாவிபூதியிலிருந்து ஸூக்ஷ்ம ஶரீரத்தோடேபுறப்பட்டு (வானேறவழிபெற்று மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தினன்னடுவுள், அன்னதோரில்லியினூடுபோ

ய்) ஸூக்ஷ்மஶரீரத்தையும் வாஸனோரேணுவையும் விரஜாஸ்நானத்தா லேகழித்து, ஸகலதாபங்களு மாறப்பெற்று, அமாநவகரஸ் பர்ஶத் தால்ஸ–தர்ஶந பாஞ்சஜந்ய, ஸஹிதராய்ச்சதுர்ப்புஜங்களுடன், ஒ ளிக்கொண்ட ஜோதியுமாயிருக்கிற,அப்ராக்ருத விக்ரஹத்தைப்பெ ற்று,லக்ஷ்மீசஹிதனாய், பூமீ நீளா நாயகனாய், விலக்ஷணவிக்ரஹ யுக் தனாயிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனை, நித்யாநுபவம்பண்ணி, நித்ய கிங்கரஸ்வபாவராயிருப்பர்கள். இவர்களுக்கு ஸ்ரீயஃபதித்வம் ஜகத் காரணத்வ முதலானவைகளில்லை, இவர்கள் புநர்ஜன்மங்களு மடை யமாட்டார்கள். இதுதான் பரமபதபலன்.

ஶப்தஸ்பர் ஶாதிகளாகிய ஸிம்ஹ வ்யாக்ராதிகளால் படும் ஹிம்ஸையையும், ஸம்ஸார தாபத்ரயமாகிற காட்டுத்தீயினால்வரு ம் க்லேஶத்தையும்போக்கி, ஜனனமரணங்களை ரஹிதமாக்கி, அப் ராக்ருத விக்ரஹத்துடன் நிரதிஶயாநந்தக்கடலில் முழுகும்படி செய்யும் விரஜாநதியானது பரமபதத்தின்கீழிருக்கின்றது. அதில், லவணஸமுத்ரத்திலங்கை, இக்கரைக்குச் சமீபமா யிருப்பதைப் போல் (తత్ పాశ్వ్ఽె విరజాతీరే యమద్వీపే వ్యవస్థితః) என்றும் (విజ్ఞానత ల్పతీరే యమద్వీపే వ్యవస్థితః) என்றும், சொல்லுகிறபடியே ஜ லமத்தியிற்கைவல்ய மக்கரைக்குச் சமீபமாயிருக்கிறது.

நகரத்துக்குப் பறைச்சேரி தூரமாயிருப்பதைப்போல், பரம பதத்துக்குக் கைவல்யமென்னும் பதம் தூரமாயிருக்கின்றது.

அக்கைவல்யத்தில் நிராகாரமான ப்ரகாஶமேயன்றி, ஸ்வரூப விலக்ஷணங்களில்லாமலிருக்கின்றன. அதில் ப்ரவேஶமாகுமவர்கள் கேவலர்.

## கேவலராவார்.

தனியிடத்திலே மிகவும் க்ஷுத்பிபாஸைகளாலே நலிவுபட்ட வன், பக்ஷ்யாபக்ஷ்ய விவேகம் பண்ணமாட்டாதே தன்னுடம்பை த்தானே ஜீவித்துப் பரஸன்னனுமாபோலே ஸம்ஸார தாபாக்னி யாலே தப்தனானவன், ஸம்ஸாரதுஃக நிவ்ருத்திக்குறுப்பாக ஶாஸ் த்ர ஜன்ய ஜ்ஞானத்தாலே ப்ரக்ருதியாத்ம விவேகம்பண்ணி ப்ரக் ருதி துஃகாஶ்ரயமாய் ஹேயபதார்த்த ஸமுதாயமாயிருக்கிற ஆகா ரத்தையும், ஆத்மா ப்ரக்ருதேஃபரனாய் ஸ்வயம்ப்ரகாஶகனாய் ஸ்வ

தஸ்ஸங்கியாய், நித்யனாய், அப்ராக்ருதனாயிருக்கிற வாகாரத்தையும் அநுஸந்தித்து முன்பு தான்பட்ட துக்கத்தின் கனத்தாலே இவ்வல்பரஸத்திலே கால்தாழ்ந்து உணர்முழுநலமான பரமாத்ம விவேகம் பண்ணமாட்டாதே அமுதவெள்ளத்தானுஞ் சிறப்புவிட்டு இவ்வாத்மப்ராப்திக்குச் சாதனமான ஜ்ஞானயோகத்திலே நிஷ்டனாய் யோகபலமான ஆத்மாநுபவமாத்திரத்தையே புருஷார்த்தமாக அநுபவித்துப்பின்பு ஸம்ஸாரஸம்பந்தமும் பகவத்ப்ராப்தியுமற்று யாவதாத்மபாவி அஶரீரியாய்க்கொண்டு திரிவானொருவன் என்றிருப்பதால் இவ்விதமான கேவலர்க ளக்கைவல்யத்தில் அஶரீரியாய் ப்ரவேசிப்பர்கள், இவர்களுக்கு ஆத்ம வேத்தர்களென்றும் கைவல்யர்களென்றும் பேர்களுண்டாயிருக்கின்றன. இவர்களை அத்வைதிகளென்று சிலர் சொல்லுவார்கள். இவர்களுக்கு மறுஜன்மங்களில்லை.

கைவல்யத்துடன் கூடியிருக்கும் நதிக்கு ப்ரஹ்மாம்ருதமென்றும், விரஜாநதியென்றும், அம்ருதவல்லியென்றும், விக்யானதல்பமென்றும், நாமதேயங்களுண்டா யிருக்கின்றன.

விரஜாநதிக்கரையில் ப்ரவேசிப்பவர்கள், (విజ్ఞానం యజ్ఞం తనుతే । విజ్ఞానం దేవాః సర్వే.) என்ற ஶ்ருதிப்ரகாரம், விக்யானமே பரத்வமென்பவர்கள். (తతస్తు విరజాతీర ప్రదేశం సమాగచ్ఛతి) என்கிறபடியே, அம்ருதவாஹிநியாய் வைதரணிக் கெதிர்த்தட்டான விரஜையைச்சென்று கிட்டினவர்கள் ஶரீரமில்லாமல் அணுஸ்வரூப ஜீவிகளாய், துறையில் அம்ருதபாநஞ் செய்துகொண்டிருப்பார்கள். இவர்களுக்கு ஜ்ஞானிகளென்றும், அம்ருதானுபவிகளென்றும் பேர்களுண்டாயிருக்கின்றன. இவர்களையும் அத்வைதிகளென்று வேறு சிலர்வழங்குகிறார்கள், இவர்களுக்கும் மறுஜன்மங்களில்லை.

ஸகலவிலக்ஷண விக்ரஹ நிர்ணயம்.

(సహస్రశీర్షా పురుషః । సహస్రాక్షస్సహస్రపాత్.) என்கிற ஶ்ருதியின்படியே, விரஜாநதியின்கீழ் விராட்புருஷன் உண்டாயிருக்கிறான் அவன்மீதிலிருக்கும் பரமமஹிமைகளைத்தெரியாமல் இந்த விராட்புருஷனையே பரப்ரஹ்மமென்று அநுஷ்டிக்குங் கபிலமதஸ்தர்களும், தத்தாத்ரேய மதஸ்தர்களும், ஶரீரங்களில்லாமல் அணுஸ்வரூபஜீவர்களா யிந்தமஹாபுருஷனது கிரீடங்களின்மீது மணி

களைப்போ லடைந்தவற்றின்மீதி லம்ருதபாநஞ் செய்துகொண் டிருப்பார்கள். இவர்களுக்கு யோகீஶ்வரர்களென்றுந் திகம்பரர்க ளென்றும், பரமஹம்ஸைகளென்றும், நாமதேயங்க ளுண்டாயி ருக்கின்றன; இவர்களையும் அத்வைதிகளோடு சிலர் சேர்த்துச் சொல்லுகிறார்கள். இவர்களுக்கும் மறுஜனனமில்லை.

அநந்தகோடி ப்ரஹ்மாண்டநாயகனான விராட்புருஷனது புருவத்தின் மத்தியில் த்ரிகுண மிஶ்ரமான மூலப்ரக்ருதி யிருக்கி ன்றது. இந்த ப்ரக்ருதிக்கு நாமதேயங்களென்னெனில், ப்ரக்ருதி, அவித்தை, ஶக்தியென்னு மிவைகள்தாம் (రథమార్గాణిపశ్యేన్నావేవ సింధుం) என்றும் (దుర్గాం దేవీంశరణమహం ప్రపద్యే) என்றுஞ் சொ ல்லுகிற ஶ்ருதிகளின்படியே இந்த ஶக்தியைப் பரத்வமென்னும் ஶாக்தேயமதஸ்தர்கள் அதின்மீதில் ஶுத்ததத்வ மஹிமைகளைத் தெரியாமல், மிஶ்ரதத்வமான மூலப்ரக்ருதியை அணுமாத்ர ஜீவ ஸ்வரூபர்களாய், கல்லிலுரைத்த பொன்னை மெழுகினிடமாக ஒட் டினாற்போல்அடைவார்கள். இவர்கள் காலாந்த்ரத்தில் மறுபடியும் ஜன்மங்களுக்கு வருவார்கள். இது ப்ரக்ருதிஸ்தானம்.

இந்த ப்ரக்ருதி தனது ஸ்வதந்த்ரத்தினால் ப்ரஹ்மாண்டங்க ளைச்செய்ய அறியாமல், ஸ்வாமியை ஸ்தோத்ரஞ்செய்வதற்குப் பிரமாணம், பாத்மபுராணம் உத்தரகாண்டத்தி லாறுவது அத்யா யத்திற் பார்த்துக்கொள்ளலாம். இந்த ப்ரக்ருதியில் மஹத்தத்வ மும், அஹங்காரதத்வமும், ஶப்ததத்வமும், ஸ்பர்ஶதத்வமும், ரூபதத்வமும், ரஸதத்வமும், கந்ததத்வமுமாகிய ஸப்தாவரணங் கள் பிறந்தன. இவைகள் மஹதாதிகளென்று சொல்லப்படும். இந்த மஹதாதிகள் ப்ரஹ்மாண்டங்களை ஸ்ருஷ்டிக்கத் தெரியா மல் ஸ்வாமியை ஸ்தோத்ரஞ்செய்வது பாகவத த்ருதிய ஸ்கந் தத்திற் பார்த்துக்கொள்க. பின்னு மிந்த மஹதாதிகளான, ஸப் தாவரணங்களும், ப்ரஹ்மாண்டங்களுக்கு மேற்கட்டுகள் கட்டி னாற்போ லிருக்கின்றனவென்று, அந்த பாகவதத்திற்றானே பரி க்ஷித்து மஹாராஜனுக்கு ஶுகமுனி ஸாதித்திருக்கிறார். இந்த ஸப்தாவரணங்களிற் சேருவோர் வெவ்வேறு மதஸ்தர்களாயிரு ப்பர்கள்.

அவர்கள் யாரெனில் (ప్రాణో బ్రహ్మేతివ్యజానాత్ మనసా ధ్యేవఖల్విమానిభూతానిజాయంతే) என்ற ஸ்ருதியின்படியே மநஸ்ஸே பிரஹ்மமென்று கொள்ளும் தத்வ வேத்தாக்களென்னும் பேருடையவர்கள். இவர்கள் மஹத்தத்வமென்றஆவரணத்தையே யடைவர்கள்.

(ఆనందో బ్రహ్మేతివ్యజానాత్ ఆనందాద్ధ్యేవఖల్వి మానిభూతాని జాయంతే) என்கிற ஸ்ருதியின்படியே அஹங்காரமே பரத்வமென்பவர்கள். அஹங்கார ஆவரணத்தையே யடைவர்கள்.

విజ్ఞానం బ్రహ్మేతివ్యజానాత్ విజ్ఞానాద్ధ్యేవఖల్విమా నిభూతానిజాయంతే) என்கிற ஸ்ருதியின்படியே ரூபதமே பரத்வமென்றவர்கள் ரூபதாவரணத்தையே யடைவர்கள்.

(ప్రాణో బ్రహ్మేతివ్యజానాత్ ప్రాణాద్ధ్యేవఖల్విమా నిభూతాని జాయంతే) என்கிற ஸ்ருதியின்படியே பிராணவாயுவே பிரஹ்மமென்பவர்கள், ஸ்பரிஸமென்னும் ஆவரணத்தையேயடைவார்கள்.

(అగ్నోయాం వై త్రాయిఖిందా దేవమానః వదాం) என்கிற ஸ்ருதியின்படியே, அக்னியைப் பரத்வமென்பவர்கள் ரூபாவரணத்தையே யடைவர்கள்.

(ఆపోవాయిదగుంసర్వం విశ్వాభూతాన్యాపః । ఆపోభూమాభువః సుపదోం) என்கிற ஸ்ருதியின்படியே ஜலமே பரத்வமென்பவர்கள் ரஸாவரணத்தையே யடைவர்கள்.

(మృత్తికేసహనమేపాపం యన్మయాదుష్కృతంకృతం। మృత్తికేప్రతిష్ఠితేసర్వం) என்கிற ஸ்ருதியின்படியே, ம்ருத்திகையைப் பரத்வமென்பவர்கள் கந்தாவரணத்தையே யடைவர்கள்.

இந்த ஸ்ருதிகளின் பிரகாரம் ஸப்தாவரணங்களிற் சேர்ந்தவர்கள், பிறகு ப்ரக்ருதிவாஸனை தேஹத்துடன் அணுஸ்வரூப ஜீவர்களாய்ப் பல்லிவாயி லகப்பட்ட கொதுகுகளைப்போ லந்த ஏழாவரணங்களி லகப்பட்டிருப்பர்கள். இவர்கள் மறுபடியும் ஜன்மங்களுக்கு வருவர்கள்.

(అండానాంతు సహస్రాణాం । అనంత బ్రహ్మాండనమేకతమస్య కుక్షౌ) என்கிறபடியே பரமாணுக்களைப்போல் ஸப்தாவரணங்களோடுகூடின விராட்புருஷனது கர்ப்பத்திலும், ரோமகூபத்திலும் அநந்தகோடி ப்ரஹ்மாண்டங்களிருக்கின்றன. பின்னும், ஸப்தாவரணங்களோடுகூடின விராட்புருஷனது கர்ப்பரோமகூபத்திற் பரமாணுக்களைப்போன்ற ப்ரஹ்மாண்டங்கள், அத்திமரத்திற் பழுத்திய கனிபோற் பழுத்திருக்கின்றனவென் றநேக ஶ்ருதிவாக்யங்களிருக்கின்றன. அந்த ப்ரஹ்மாண்டங்களில் ஸ்ரீமந்நாராயணனது சரித்திரங்க ளொரோவிதமாயிருக்கின்றன. இப்போது நாமிருக்கிற ப்ரஹ்மாண்டத்தின் சரித்ரமாவது இந்த ப்ரஹ்மாண்டத்துக்குள் ஸ்வாமி வடபத்ர ஶயனராய் மஹாஜலத்தைக் கல்பித்து அந்த ஜலத்தின்மீதிருப்பர். காலாந்தரத்தில் தமது கர்ப்பஸ்தானத்தில் ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகள் முதலான ஸமஸ்த ஜீவர்களையும் ஶரீரங்களை விபிவித்துத் தமது உதரத்துக்குள் ளடக்கிக்கொள்ளும்போது (బ్రహ్మేశోస్వముక్తిః) என்று சொல்லும்படியாய்ச்செய்து கொள்ள அவர்கர்ப்பத்திற்றானே அச்சீவர்கள் அடங்கியிருப்பர்கள். மறுபடியும் ஸ்ருஷ்டிகாலத்தில் (యధాపూర్వమకల్పయత్) என்றபடியே பூர்வம்போலவே, ஜகத் ஸ்ருஷ்டிகாலத்தில் ஜன்மங்களுக்கு வருவர்கள்.

அப்படி யடக்கிவைத்துக்கொண்டிருக்கின்ற வடபத்ரஶயனன் ப்ரஹ்மாவைப் படைத்தபோ தந்த ப்ரஹ்மா பகவானைக் காணும லந்தத் தாமரைக் கர்ணிகையி லநேககாலங்கள் தபஸ்ஸு செய்ய, அந்த வடபத்ரஶயனன் ப்ரஹ்மாவை யாதரித்து ரிக்கு முதலான வேதங்களை ப்ரஸாதித்தது வேதங்களிலும் ஸ்ரீமஹா பாகவத த்விதீய, த்ருதீய, ஸ்கந்தங்களிலும், ஸ்ரீரங்க மஹாத்மிய முதலானவைகளிலும் விவரித்திருக்கின்றது. அதனாலேயே (ప్రజాపతిః పితరః) என்றும் (కింభగవంతః పరమం వదంతి) என்றுஞ் சொல்லுகிற ஶ்ருதிகளின்ப்ரகாரம் ப்ரஹ்மாவுக்குப் பிதாவாகவும், பகவானுகவும், பரனாகவு மிருக்கிறானென்பது விஶதமாகின்றது. அவரே, ஆதிமூலமென்ற கஜேந்த்ராழ்வானை ரக்ஷித்தவர். இந்த ஸ்வாமி, மூன்று ஶிகரங்களை மஹாமேருவில் கல்பித்து மத்யஶிகரத்தில் ஸத்ய

லோகத்தை நிர்ணயித்து ப்ரஹ்மாவுக்குப் பட்டங்கட்டி லோகங்களை ஸ்ருஷ்டிக்கும்படி ஆஜ்ஞாபித்தனர். அந்தவடபத்ரஸயனரோ க்ஷீராப்திநாதனும், வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்தரென்னும் நான்கு திருநாமங்களுடன் சதுர்வ்யூஹ வைகுண்டங்களைக் கல்பித்து, அவற்றிலெழுந்தருளியிருக்கிறார். இந்த வைகுண்டங்களாவன க்ஷீரஸமுத்ரம், ஸுத்தோதகஸமுத்ர மிவைகளின்மத்யத்வீபத்தில் வாஸுதேவ வைகுண்டம் கிழக்கிலும், ஸங்கர்ஷண வைகுண்டந் தெற்கிலும்,ப்ரத்யும்னவைகுண்டம் மேற்கிலும், அநிருத்தவைகுண்டம் வடக்கிலும், ஒருவைகுண்டம் மேருவின் மேற்குச்சிகரத்திலும் நிர்ணயித்து விண்டுவென்ற திருநாமத்துடனெழுந்தருளியிருக்கிறார் இவர்தாம் கல்பாதியில் வடபத்ரஸயன திருக்கோலமாயிருந்து தமது நாபியில் ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அந்த ப்ரஹ்மாவினது லலாடத்தில் ருத்ரனைக் கல்பித்தனர். இதற்கு (బ్రహ్మణోఽస్యజ్యేష్ఠాయరుద్రాయ లలాటాః క్రోధాయరుద్రాఽజాయతే) என்றும், (యోసౌచయజతోవిష్ణుస్సత్వగుణప్రణీతోభవత్ । తస్యనాభేరజో త్వాస్స్వయంభూః । తథాతస్యభ్రువోంతరాళాత్ తమోగుణప్రధానోరుద్రోభవత్) என்றுஞ் சொல்லுகிற ஸ்ருதிகளே ஸாக்ஷி. இதுவுமன்றிப் பாகவத த்ருதிய ஸ்கந்தத்தில் (ధియానిగృహ్యమాణోపి । భ్రువోర్మధ్యాత్ ప్రజాపతేః । సద్యోజాయతతన్మన్యుః కుమారోనీలలోహితః।) என்றும், பாரதத்தில் (మన్నాభిపంకజాజ్జాతో । పద్మయోనిఃపితామహః । తల్లలాటోద్భవోరుద్ర । స్తస్మాజ్జాతష్షడాననః) என்றுஞ்சொல்லுகிறபடியே வாராஹ ப்ரஹ்மாண்ட நாரசிங்காதி புராணங்களிலும் விவரித்திருக்கின்றது. இவ்விதமாய் ப்ரஹ்மாவின் லலாடத்திற்பிறந்த ருத்ரனுக்கு மேருவின் கிழக்கு ஸிகரத்தின்மீதிற் கைலாஸத்தை நிர்மித்துப் பட்டங்கட்டிவைத்தனர். இந்த மூன்று சிகரங்களிலிருக்குந் த்ரிமூர்த்திகளின் பட்டணங்களின்மீது தூரத்தில் ஸிம்ஸுமார சக்ரம் வடபத்ரஸயனன் நாபீகமலத்தில் ப்ரஹ்மாபிறந்தபோதேயிருள்ளிப்புனையைப்போன்றுகூடப்பிறந்தந்தப்ரஹ்மருத்ராதிகளுக்குக் காலசக்ரமாய்த் திரிந்துகொண்டிருக்கிறது. அப்படிப்பட்ட ஸிம்ஸுமார சக்ரத்தை எம்பெருமான் த்ருவருக்குப் பட்டங்கட்டிவைத்தனர். அந்த ஸிம்ஸுமார சக்ரத்தின்மீது த்ருவவைகுண்ட

னது தேஜஸ் அண்டகடாஹ பர்யந்தம் வ்யாபித்திருக்கின்றது, அந்தத் தேஜஸிற் பொருந்தியிருப்பவர்கள் சில மதஸ்தர்கள்.

அவர்கள் யாரெனில் (నిరంజనో నిర్వికల్పో నిరాఖ్యాతః) என்றபடியும், (ఆనన్దమాత్రః పురుషః) என்றபடியு மனுஷ்டித்து (సమావస్థితః) என்கிற ராஜஸஜ்ஞானிகளும் (பாகவதத்தி லேழாவது ஸ்கந்தத்தில் ப்ரஹ்மாவை ஹிரண்யகசிபன் ஸ்தோத்திரஞ்செய்தபடி) ஜோதி ப்ரகாசமான நிர்க்குணனே ஸகுணனுமெனென்றும், ப்ரஹ்மாண்டமானுமெனென்றும், ராஜஸஜ்ஞானிளான ராஜரிகள் முதலான யாவரும் (ఊర్ధ్వాయనమః, ఊర్ధ్వలింగాయనమః, ఆత్మాయనమః, ఆత్మలింగాయనమః, పరమలింగాయనమః) என்றபிரகாரம் ஜோதிப்ரகாசமான லிங்கரூபனே ஸகுணனுமெனென்றும், கைலாயத்திலிருக்கிறானென்றும் லிங்கத்தைப்பூஜிக்கும் பாசுபத வீரசைவர்களானவர்களும் (శివాయవిష్ణురూపాయ । శివరూపాయవిష్ణవే) என்றபடி ப்ரஹ்மாவைவிட்டு ஹரிஹரர்களை ஏகமென்பவர்களும், ச்ருதி (స్సబ్రహ్మాస్సశివస్స హరింద్రోసాక్షరాత్) என்னும் ஸந்யாஸிகளுமென்பவர்கள். இவர்கள் யாவரும் சிம்சுமார சக்ரத்தின்மீது த்ருவனது ப்ரகாசத்துக்குள் ஸூர்யகிரணங்களி லணுக்க ளகப்பட்டதைப்போல் அணுஸ்வரூபிகளாயடங்குவர்கள். இவர்களில் ஹரி ப்ரஹ்ம ருத்ராதிகளை யேகமென்று சொல்லுகிற ஸந்யாஸிகள் வாசா அத்வைதம் பேசுவர்கள். இவர்களையு மத்வைதிகளென்னப் படுவார்கள்.

முன் க்ஷீராப்திசயனனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட வாஸுதேவ ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்த, வைகுண்டங்களில் ஸ்ரீபதரிகாச்ரமத்தில் நாராயணருஷி உபதேசித்த ஸ்ரீமதஷ்டாக்ஷர மந்த்ர ஜபசித்தர்க ளானவர்களும், ஸ்ரீவைஷ்ணவர்களென்ற பேருடன் வாஸுதேவபாராயணர்க ளானவர்களும், ஸ்ரீவைஷ்ணவர்களென்ற பேருடன் கர்மத்தை யவலம்பித்து வருமவர்களும், (సర్వభూతాధివాసో౽సి । శ్రీవాసుదేవాయనమః) என்கிற ச்ருதிப்ரகாரமனுஷ்டிக்குமவர்களும், (తన్నో నరసింహః ప్రచోదయాత్) என்கிற ச்ருதிப்ரகாரம். ஸ்ரீநரஸிம்ஹோபாஸிகளும், ப்ரஹ்லாதன் முதலானவர்களும் த்வாதசாக்ஷர மந்த்ரஸித்யானவர்களுங் கோபால

மந்த்ர ஸித்தியானவர்களும், ஹநுமந்த மந்த்ர ஸித்தராயாவென்
னும் மத்வாசாரிய மதஸ்தர்களான தத்வாதிகளும், ஸங்கர்ஷண
வ்யூகமென்னும் வைகுண்டத்தை யடைவர்கள்.

பாராசர்ய வ்யாஸ மந்த்ரஸாம்ப்ரதாயஸ்தர்கள் ப்ரத்யும்னவ்யூ
கமென்னும் வைகுண்டத்தை யடைவர்கள். இந்தப்ரத்யும்ன வைகு
ண்டத்தில் நான் ஸநகாதிகள் ஜயவிஜயர்களுக்கு சாபமீந்தனர்
அநிருத்த வ்யூகத்திலிருக்கும் ஸ்வாமி நாரதாதிகள் திவ்யகானத்தை
க்கேட்டுக்கொண்டுந் தேவர்கள்முறைகேட்டு ஆதரித்து ரக்ஷித்துக்
கொண்டுமிருப்பர். இந்த அநிருத்தவ்யூஹமென்னும் வைகுண்டத்
தை (స్మరణాన్ముక్తిః) என்றப்ரகாரம் நாராயணஸ்மரணை செய்தவர்க
ளடைவார்கள். இந்த ஸ்வாமியே (ఆజాయమానో బహుధా విజాయ
తే) என்றபடியும் (ధర్మసంస్థాపనార్థాయ సంభవామి యుగే యుగే)
என்றபடியும் அவதாரங்களெல்லாஞ் செய்வர். இந்தநான்கு வ்யூ
ஹ வைகுண்டங்களி லெழுந்தருளியிருக்குமவர் தமக்கு விலாஸ
மாக க்ஷீரஸமுத்ரோதக மத்யத்வீபத்திற் றமது தேஜஸ்ஸுடன்,
ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளை இந்த ஸ்தானத்திலிருக்கு மாத்மகோ
டிகள் யாவரையும் ப்ரளய ஸ்ருஷ்டிகாலத்தில் வடபத்ரசயநன்
தமது நாபிகமலத்தி லிருந்தும் புருவத்தின் மத்தியிலுண்டான
குமிழியிலிடமாகவு மின்னு மநேக விதங்களாலும் (தவம்புரிந்த
சேதனரைச் சந்திரனுதித்தன், சிவன் ப்ரம லிந்திரனுச்செய்கை,
உவந்து திருப்பாடகமருவுஞ் செங்கண்மாறன்மார், பிருப் பாடக
வுரையாலே) என்றும். "இட்டமானவிருக்கினிலெட்டெனவோது
ம், அட்டகத்தனிலேழதாமத்தியாயத்தில், திட்டமாந்தசமப்பெயர்
சேர்வருக்கத்தில், மட்டுலாமலர்மாதரியின்மனையாளை. நிகரில்கார
ணியென்னவுநியாமகையெனவும், தகையதன்மனமுகந்தவொவர
வர்தமையே, மகிமைநான்முகன் சங்கரன்வாசவன்வசுக்கள், நிகழ
னுக்கிரகஞ்செய்பவளென்னவுஞ்செப்பும்." என்றுஞ் சொல்லுகி
றபடியே ஸ்ருஷ்டிசெய்வார்.

மேரு சிகரங்களிலிருக்கும் பட்டணங்களையடையவர்யாவெ
னில்! (ఏకో విష్ణుర్మహద్భూతం హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ) என்றும்
விஷ்ணு ஷடாக்ஷரமந்த்ரஸித்தியானவர்களும், ஸாத்விக ப்ரஹ்ம

மென்னும் விஷ்ணுபாராயணர்களும் மஹாமேருவின் மேற்குச் சிகரத்திலிருக்கும் வைகுண்டத்தை யடைவார்கள். இந்தவிஷ்ணு, ப்ரஹ்ம ருத்ரர்களுக்குத் துணையாய் வர்த்திப்பர். இப்படியிருக்க, த்ரிமூர்த்திகளை ஐக்யமென்றும், ஏகமென்றுஞ் சொல்லுகிறார்கள். ப்ரஹ்மலோகத்தை யடைபவர்கள் யாரெனில் (సత్యంపరంపరం సుసః | సత్యసజ్ఞానసత్యేన) என்கிற ஸ்ருதியின்படியே ஸத்யவ்ரத ப்ரஹ்மகாயத்ரி ஜபஸ்தர்களான ஸ்மார்த்தர்களும், ராஜஸ ப்ரஹ்மனை இவனேகர்த்தனென்று பத்மகர்ப்பனையாராதிப்பவர்களுஞ் சத்யலோகமான ப்ரஹ்மதேவனது லோகத்தையடைபவர்கள்.

(ఆబ్రహ్మభువనాల్లోక | పునరావృత్తినోర్జున) என்ற பகவத்கீதை ப்ரமாணப்படி ப்ரஹ்மலோகத்தை யடைந்தவர்கள். மறுபடியும் ஜன்மத்துக்கு வருவார்கள்.

கைலாயத்தை யடைபவர்கள் யாரெனில்! (ఏకఏవరుద్రోన ద్వితీయాయతస్థే) என்றும், (శివోమేఅస్తుసదాశివోం)என்றும்கூறும் ஸ்ருதிப்ரகாரம் ஸதாசிவனே கர்த்தாவென்று நமச்சிவாயவென்னுஞ் சிவபஞ்சாக்ஷர ஜபஸ்தர்களான தாமஸபக்தர்கள் கைலாயஞ் சேர்ந்தபின்பு, (విశ్వాధికోరుద్రోమహర్షిః) என்று வேதத்திற் சொன்னப்ரகாரமும், பாகவதத்தில் (హస్తేత్వక్షమాలా హృదిరామతత్వం | జిహ్వాగ్రభాగేవరరామమంత్రం | సమస్తకే కేశవపాదతీర్థం | శివంమహాభాగవతంస్మరామి) என்று சொல்லிருக்கிற ப்ரகாரமுமே கையில் ஸ்ரீராமமந்த்ரத்தை ஜபிக்கிற ஜபமாலையும், தன் ஹ்ருதயத்தில் ஸ்ரீராமமூர்த்தியே பரத்வமென்கிற ஜ்ஞானமுந் தன்னுடைய நாவிலே ஸ்ரேஷ்டமான ராமமந்த்ரத்தையு முச்சாரணமுங் கொண்டு கைலயங்கிரியில் தபஸ்ஸோடணிருக்கும் ருத்ரமூர்த்தியை ருஷிகளுக்குத் தலைவனென்றும் பாகவதனென்றுஞ் சொல்லியிருப்பதா லந்தமூர்த்தியைப் பார்வதிபணிந்து அம்மந்த்ரத்தைத் தனக் குபதேசஞ் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி ருத்ரமூர்த்தி யுபதேசித்த மந்திரமாவது (శ్రీరామరామరామేతి | రమేరామేమనోరమే | సహస్రనామతత్తుల్యం | రామనామవరాననే)

என்று இம்மந்திரத்தை யுபதேசித்ததாய்ப் பாத்மபுராணத்திற்
சொல்லியிருப்பதாற் கைலாயத்தை யடைந்தவர்களுக்கும் இவ்வி
தமா யுபதேசிப்பதா லவ்வுபதேசத்தையு மவரனுக்கிரஹத்தை
யும் பெற்றவர்கள் மத்யலோகத்தில் ராமநாமத்தை பஜிப்பவ
ர்களாகப் பிறப்பர்கள்.

இந்த மேருவின் ஶிகரத்திலிருக்கும் வைகுண்டத்தின் கீழி
ருக்குங் காரண வைகுண்டங்கள் ஆறுண்டு. அவற்றில் ருக்மாங்கத,
அம்பரீஷாதிவ்ரத நியமஸ்தர்களும் (போதாயன மதஸ்தர்களும்)
(ராமானந்த், நீமானந்த், விஷ்ணுசாமு, ஹரிவாசி, ராதாவல்
லபி, பாவன்,) ஸாம்ப்ரதாயர்களென்கிற ஹரிதாசர்கள் ப்ரவே
ஶிப்பர்கள்.

கிழக்குச் சிகரத்திலிருக்குங் கைலாயத்தின் கீழ் விஶ்வாவஸு
ப்ரஹ்மா நிர்ணயித்த பட்டணத்தில் சதாசிவனிருக்கிறான். இவ
னது தேஜஸ்ஸு கைலாய பர்யந்தமிருக்கும், அதில் (கிரி, புரி,
பாரதி, பன், ஹாரண், சாரண், கூகட், பூகட், ரூகட், ஸகட்)
என்கிற ருத்ரதபஸிகளும், ஶரவணபவ, என்கிற சௌப்பிரம
ணியமதஸ்தர்களும், காணபத்யமதஸ்தர்களும், ஸௌர்யகிரணங்
களி லகப்பட்ட தூசுகளைப்போ லடங்குவர்கள்.

(மல்லேஶ்வராயநம:, மாதேஶ்வராயநம:, சங்கரேஶ்வரா
யநம:, ஜடேஶ்வராயநம:) என்று த்யானித்துக்கொண்டு காடுக
ளிற் சஞ்சரித்து, ம்ருகம், பக்ஷி முதலானவைகளைக் கொன்றும்,
தின்றும், சில ம்லேச்ச க்ருத்யங்களையு மனுஸரித்து வருபவர்க
ளும், அகோரவீரபத்ரனை பூஜிக்கிறவர்களும் (తేఘోరా స్త్రీధర)என்
றபடியே பயங்கரமான எலும்பு மாலைகளைத் தரித்துக்கொண்டு
(నైచై పిశాచైసమాః) என்றபடியே பேய்களுக்குச் சமமாய் ஸதா
ஶிவ பட்டணத்திற்சேர்வர்கள்.

மேருவுக்கு நடுச்சிகரத்திலிருக்கும் ஸத்யலோகத்தில் ப்ரஹ்
மதேவனுல் ஸநகாதிகளும் நாரதரும் நவப்ரஹ்மாக்களும், துவா
தஶாதித்யர்களும், நவக்ரஹங்களும், நக்ஷத்திர கணங்களும், ஆகிய
ஸமஸ்தமானவர்களு முண்டானர்கள். அவர்களுக்குத் தகுந்த

லோகங்களைப் பிரமன் நிர்ணயித்து வைத்தனன். இப்படிப்பட்ட ப்ரஹ்மாவிருக்கும் ஸத்யலோகத்தின் கீழ்த்தபோலோகமிருக்கின்றது. அதின்கீழ் ஜனர்லோகமிருக்கின்றது. அதின்கீழ் மஹர்லோகமிருக்கின்றது. அதின்கீழ் ஸுவர்லோகமிருக்கின்றது. அதின்கீழ்ப் புவர்லோகமிருக்கின்றது, அதின்கீழ் மத்யலோகமாகிய பூலோகமிருக்கின்றது. இந்தப் பூலோகத்தின்மீதில் ஏழுலோகங்களும் இவ்விதமாயிருக்கின்றன.

இவைகளில் (తపసా దేవా దేవతావగ్ర | ఆయుస్తేతస్మాత్తపః | పరమం వదంతి) என்ற ஶ்ருதிப்பிரகாரந் தபஸ்ஸுசெய்தவர்கள் தபோலோகத்தை யடைவர்கள்.

(శమేన శాంతా శివమాచరంతి | తస్మాచ్ఛమః పరమం వదంతి) என்ற ஶ்ருதிப்பிரகாரம் ஶாந்தஶமதமாதிக குணமுண்டானவர்கள் ஜனர்லோகத்தையடைவர்கள். ஜனர்லோகபரியந்தந் தினப்ரளயத்தில் ஜலப்ரளயமாகும்.

(మహాతః । మహామహాతః) என்றபடியே கர்மயோகங்களில் ஸ்வதந்த்ரரானவர்கள் மஹர்லோகத்தை யடைவர்கள்.

(యజ్ఞ యిదియజ్ఞేన హి దేవాః దివంగతః) என்றும், (తస్మాద్యజ్ఞం పరమం వదంతి) என்றுஞ்சொல்லுகிற ஶ்ருதிப்ரகாரம், (జ్యోతిష్టోమేన స్వర్గకామో యజేత) என்றபடிஎக்கியங்கள் செய்தவர்கள் ஸ்வர்க்கலோகமாகிய இந்த்ரலோகமடைந்தங்கு, பசி, தாஹ, ஶோக, மோஹ, ஜரா, மரணாதிகளின்றிக்கே ஆர்ஜித்தபுண்ணியத்துக் கீடாகவம்ருதபானம்பண்ணி அப்ஸரஸ்த்ரீகளோடே ஶப்தாதிவிஷயாநுபவஞ்செய்து கொண்டிருப்பர்கள். மஹம்மது மதஸ்தர்களு மிந்த லோகத்தை யடைவர்கள். அவர்களடையும்படியான முகாந்திரம் யாதெனில்.

—:0:—

## புருகான்வேதஸார ஸங்க்ரஹம்.



(அல்லாஹுதாலா) என்பதுகடவுளுடைய திருநாமமென்றும், அதைப்போல் ஆயிரம்பேருள்ளவர்கடவுளென்றும், அக்கடவுள், பாபம், ஶோகம், மரணம், தாஹம், நித்திரை, அச்சம் ஆகிய

வைகளில்லாதவரென்றும், தந்நினைவுக்குக் கெடுதலில்லாதவ ரென்றும், தம்மைப்போலொருவரில்லாமலுந் தாமொருவரைப்போ லில்லாமலுந் தாமாய்த்தனித்தவரென்றும், தாமொருவராலுண்டாகாமலண்டபிண்ட சராசரங்களெல்லாந்தாமே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலுடையவரென்றும், அப்படிப்பட்ட பகவானானவர் அண்டஸ்ருஷ்டிக்குமுன்னதாய்த் தம்முடைய முச்சாயலாகிய, சிவப்பு, பச்சை, வெள்ளை யென்னும் மூன்றுவர்ணத்தில் வெள்ளையாகிய வர்ணத்தைச்சிலகாலம் மயிலைப்போல் ஸ்ருஷ்டித்துவைத்துக்கொண்டு, அண்டத்தில் முதல்ஸ்ருஷ்டிக்காய், ஆதம், அவ்வா என்பவர்களை ஸ்ருஷ்டித்து, அவர்களிடமாய்ப் பூலோகத்திலுள்ளயாவத் மனுஷ்யஜன்மங்களையுமுண்டாகச்செய்து,அவர்கள்தம்மையறிந்து கரைசேர, தாவுத் என்னும் நபியைஉற்பவிக்கச்செய்து, அவருக்கு (ஜபூரென்னும்) முதல் வேதத்தைக் கொடுத்து, பின்பு, மூஸாஎன்னும் நபியையுண்டாக்கி யவருக்குத் (தொகிரயத்தென்னும்) இரண்டாம் வேதத்தைக் கொடுத்து, பின்பு, ஈசா என்னும் நபியைப்படைத்து அவருக்கு (இஞ்சல்) என்னு மூன்றும் வேதத்தைக்கொடுத்து அதின்மேல், தம்சாயலைக் கொண்டு மயிலில் முதலனேகவிதங்களாயுண்டாக்கி வைத்திருந்ததம், அம்ஙத்தை மஹம்மத் நபியாகவுண்டாக்கியவருக்கு (புர்க்கான்) என்னும் நான்காம் வேதத்தைக்கொடுத்தார்.இதில் மூசாநபிக்குக்கொடுத்த (தொகிரியத்) என்னுமிரண்டாம் வேதத்துக்குப் பின் (தாவுத்) என்னும் நபிக்குக்கொடுத்த (ஜபூர்) என்னும் முதல்வேதத்தை நிக்ரஹித்து (ஈசாநபி) என்பவரையுண்டாக்கி யவருக்கு(இஞ்சல்)என்னும் மூன்றும் வேதத்தைக்கொடுத்தபின். (மூஸாநபி) என்பவருக்குக்கொடுத்த (தொகிரியத்) என்னும் இரண்டாம்வேதத்தைத் திரஸ்கரித்தும், (மஹம்மதுநபி)என்பவருக்கு(புருகான்) என்னும் நாலாம்வேதத்தைக் கொடுத்தபின் (ஈசாநபி)என்பவருக்குக் கொடுத்த (இஞ்சல்) என்னும் மூன்றும் வேதத்தைத்யஜித்தும், பின்பிந்த நாலாம் வேதமாகிய (புருகான்) வேதத்தை(மஹம்மத்நபி) என்பவருக்குத் தந்து, அந்தவேதத்திற் சொல்லியிருப்பதை யுலகத்தில்வசிக்கும் யாவருக்கும்போதிக்கும்படி கடவுள் ஆஜ்ஞாபித்ததாய் அவ்வேதம் சொல்லுகிறது. அதன்விவரமாவது.—

(ஈமான்) என்று முறுதியோடு கடவுளை ஐந்துநேரந்தொழுதல், சயர், சக்காத் என்னும் பெருந்தர்மத்தைச்செய்தல், தன்குருவின் உற்பத்திஸ்தானமாகிய மக்காவிற்கு வருஷத்தி லொருதரம்போய் (அஜ்ஜு) என்னும்பெருநாளைத் தொழுதல், முப்பது நோன்புமுதலிய விரதங்களை நடத்திவந்தனேகதர்மங்கள்செய்தல், குட்டுக்கரிநோன்பென்னும் பெருநாளில் எஜ்ஞ, யாகாதிக்ருத்யங்களைப்போல் மந்திரமூலமாய் ஆடு, பசு - ஒட்டை, முதலானவைகளைவதைத்து விசேஷதர்மங்கள்செய்தல், (அரும், கரும்-மக்கூர்) என்று சொல்லுஞ் சாராயக்குடி, களவு, சூது, ஜீவஹிம்ஸை, பரஸ்திரீகமநம், வட்டி வாங்குதல், பிறர் பொருளாசை, இதரஜனதூஷணை இவைமுதலாகிய எல்லாத் துர்மார்க்கச் செய்கைகளையும் பற்றறவிட்டு லோகத்திலுள்ள (அவுலியாக்கள், அம்பிலியாக்களென்னும்) குருமார்களுக்கு அநேகவணக் கமொடுக்கமாய் நடந்து தம்முயிர்போல் மன்னுயிர் யாவும் என்ற எண்ணத்துடன் பிறருக்குவந்த ஆபத்துத் தம்மதாய், பிறர் பொருளெட்டியாய் நினைத்து நடந்துவருவர்கள்- (பிரதோஸ், தாருக்கரார், கல்லூத், மாவ்யா, தாரூசலாம், ஜன்னத்நயிம், தாருல்நயிம், அதன்.) என்னுமிந்த எட்டுவிதமாகிய பேரும் வகுப்புமுள்ள தேஜோரூபமாய், அநேகவித சிங்காரங்களோடு கூடிய ஸ்வர்க்க லோகத்திலே சென்று கூராணிப்பெண்களென்னும் - அப்ஸரஸ்த்ரீக ளநேகவித வூழியஞ்செய்ய அவர்களுடன் பலவிதலீலாபோக போக்யங்களை அநுபவித்துக்கொண்டு இருப்பார்களென்பதும், (அரும், கரும், ஜஹ) என்னும் பெருங்குற்றஞ்செய்பவர்கள் நரகத்தையடைவார்களென்பதும் அகாலமரணமாகிய துர்மரணங்களாகும்படியானவர்கள் பிஸாசுக ளாவார்களென்பதுமாம். மஹம்மது நபிக்குக் கிடைத்தபுர்கான் என்னும் நாலாவது வேதத்தில் இதுசொல்லி யிருக்கின்றது.

அவ்விதமாகவே-இருக்கு முதலியவேதஸாஸ்திரபுராணங்களிலும், விசேஷதர்மத்துடன் எஜ்ஞ, யாகாதிகளைச் செய்பவர்கள் ஸ்வர்க்காநுபவஞ் செய்வார்கள் என்றும், தீமையாகிய குற்றங்களைச் செய்பவர்கள் நரகலோகத்தை யடைவார்களென்றும் மந்த்ர

லோப க்ரியாலோபங்களைச் செய்பவர்கள் பிசாசமாவார்களென்றுஞ் சொல்லியிருக்கிறபடியால் - இந்த மஹம்மதீய மதஸ்தர்கள் (புருகான்) வேதத்திற்சொல்லியிருக்கும் நன்மார்க்கத்தைச்செய்பவர்கள் ஸ்வர்க்க லோகத்தில் ஏகதேசபாகத்தை யடைவார்களென்பது விளங்குகின்றது.

(తస్మాద్దానంపరమంవదంతి। తస్మాద్ధర్మంపరమంవదంతి।) என்கிற ச்ருதியின்படி, தானம், சத்திரம், காவடி, வநதடாகங்கள் முதலானதர்மங்களைச் செய்தவர்கள் புவர்லோகமடைவர்கள். இப்படிக்கு. ஊர்த்துவலோகங்களையடைந்தவர்கள் (క్షీణేపుణ్యే మర్త్యలోకంవిశంతి) என்ற ச்ருதியின்படியே புண்யங்கள் க்ஷீணித்துப் பூலோகத்தில் ஜனிக்கவருவர்கள்.

—:0:—

## இனிக்கிரஹமண்டலங்களில் சேர்பவர்கள் விவரம்.

(ఆప్యాయస్వ సమేతుతే విశ్వతస్సోమవృష్ణియం) என்றச்ருதியின்பிரகாரம், சந்த்ரனே தெய்வமென்பவர்கள், சந்திரமண்டலத்தையடைவர்கள்.

(ఆదిత్యోవాఏషఏతన్మండలంతపతి) என்றச்ருதியின் பிரகாரம் ஸூரியனே தெய்வமென்னும் ஸௌரமதஸ்தர்கள் ஸூரிய மண்டலத்தையடைவர்கள்.

(మహాకృత్యవాః పైశాచః) என்றும் (గురుంత్వంకృత్యహుంకృత్య। విప్రన్నిర్జిత్యవాదతః। అరణ్యేనిర్జలేదేశే। భవతిబ్రహ్మరాక్షసః।) என்றும் (మంత్రలోపంక్రియాలోపం। శాస్త్రార్థత్యాగమేవచ। యేకుర్వంతినరాయాంతి। శీఘ్రంపైశాచమండలం) என்றும் (శ్రుతిస్మృతిపరిత్యజ్య। తిష్ఠంతియేనరాధమాః। పిశాచమండలంయాంతి। పాపాఃజన్మనిజన్మని) என்றும், (అపార్థంత్వస్తుశ్రుతీనాంతు। యేవదంతిసుపాపినః। ప్రలోభ్యమాతరంలోకం। యంగచ్ఛంతినరాభువి) என்றும், (అన్యస్త్రీరతాసక్తాః। మనుజాఃకులనాశనాః। పిశాచమండలంప్రాప్య। సహస్రందుఃఖమాప్నుయాత్।) என்றுமிருப்பதால் பஞ்சமா பாதகர்களும், மந்த்ரலோபம், க்ரியாலோபம் செய்தவர்களும், வேதகுத்ருஷ்டிகளும், ப்ரபந்த குத்ருஷ்டிகளும், ரஹஸ்ய குத்ருஷ்டிகள்முதலானவர்களும் பூதப்ரேத பிசாசமண்டலத்தை யடைவர்கள்.

அவர்களில் பஞ்சமாபாதகர்கள் யாரெனில்! (అహింసాపర మోధర్మః) என்றும் (నహింస్యాత్సర్వభూతాని) என்றும் (నసురాంపిబేత్ |నకలంజంభక్షయేత్ |నానృతంవదేత్ |నపరదారాన్గచ్ఛేత్ |) என்றும் (బ్రహ్మహత్యాసురాపానం| అస్తేయంగురుసుందరీ| విశ్వాసఘాతకంచైవ|ఏతత్ పాతకపంచకం) என்றும்சொல்லுகிறபடி தர்மங்களில் விசேஷ தர்மமானது ஜீவஹிம்ஸைசெய்யாம லிருப்பதாதலால் மனிதனு யிர்களை வதைசெய்யாதேஎன்றும், ப்ரஹ்ம ஹத்தி, ஸுராபானம் செய்யாதே யென்றும், பொய் சொல்லாதே, பரஸ்திரீ கமநஞ் செய்யாதே, ஸ்நேஹத்ரோஹமுதலானவற்றைச் செய்யாதேயெ ன்றும்வேதசாஸ்த்ர புராணங்களில் சொல்லியிருக்க, அவைகளை நெஞ்சில் வையாமலும், பெரியோர்களை யாச்ரயித்து உணர்ந்து கொள்ளாமலும், உயிர்களைக் கொன்று தின்று குருபத்நிகமநம், ஸ்நேஹத்ரோஹ முதலானவைகளைச் செய்பவர்களே பஞ்சமா பாதகர்கள்.

மந்திரலோபம் க்ரியாலோபஞ் செய்பவர்கள் யாரெனில், யாகாதிக்ருத்யங்களையும் ஜ்ஞாநாநுஷ்டானங்களுக்குரிய மந்த்ரங்க ளையும், ஜபதபங்களில் நடத்தவேண்டிய விஷயங்களையும் இ வைகளுக்கு விதித்திருக்குங் க்ரியைகளையுஞ்செய்து அக்ஷரலோபங் களுடன், மந்திரங்களை யுச்சரிக்கிறவர்களும், மந்த்ரங்களை யுச்சரித் துஅவற்றிற்குஅங்கங்களாயிருக்குமவைகளைச்செய்யாமலிருக்குமவ ர்களும்,மந்த்ரகிரியாலோபிகள். வேதகுத்ருஷ்டிகள்யாரெனில்.—

—:0:—

## பிரச்சின்ன பௌத்தராபிப்ராய திரஸ்காரம்.

—:0:—

(ద్వాసుపర్ణా సయుజా సఖాయా సమానం వృక్షంపరిషస్వజాతే| తయోరన్యః పిప్పలంస్వాద్వత్తిః అనశ్నన్నన్యో అభిచాకశీతి) என்றபச்ரு தியில், ஜீவாத்மா பரமாத்மா வென்ற இரண்டு பக்ஷிகள் ஒன்றை விட்டொன்று பிரியாமல் ப்ரக்ருதியாகியசரீரமென்கிற வ்ருக்ஷத்தி லிருக்கின்றன. அவைகளில் ஜீவாத்மா என்கிற பக்ஷியானது சரீர ஸம்பந்தத்தால் ஸுக்ருதத்தையும், துஷ்க்ருதத்தையுஞ் செய்துஅ த்தாலந்த வ்ருக்ஷத்தின் பழங்களாகிய ஸுகதுக்கங்களைப் புஜிக்கு

மென்றும், பரமாத்மா என்கிறபக்ஷியானது அந்த விருக்ஷத்திலிட
மூமான ஸுகதுக்கங்களைப் புஜிக்கவேமாட்டாதென்றும் சொன்ன
பரமாத்மாவாகிய விஷ்ணுவைப் பாபம்அணுகாதென்று சொன்ன
(అపహతపాప్మా దివ్యోదేవ ఏకో నారాయణః) இந்த ச்ருதியில்,
ஸ்ரீமந்நாராயணன் பாபரஹிதனென்றும், தைவிகத்தன்மை யவ
னொருவனுக்கே யுண்டென்றும், (అపహత పాప్మా విజరో విమృ
త్యుః విశోకో విజిఘత్సః । అపిపాసః సత్యకామః, సత్యసంకల్పః) என்றம
ற்றொருச்ருதியில் அந்த நாராயணன் பாபமில்லாதவன் கிழத்
தனமில்லாமல் நித்யம் இருபத்தைந்து வயதுடனே கூடியிருப்ப
வன் - மரணமில்லாதவன், ஶோகமில்லாதவன், பசி யில்லாதவன்,
நித்யமான விச்சை யுடையவன், நித்யமான நினைப்பை யுடை
யவன், அதாவது, இவனொரு காரியத்தை யிப்படிச் செய்யவே
ண்டுமென்று இச்சை கொண்டாலும் நினைத் தாலும் அவை
வேறொருவருடைய இச்சையாலாவது நினைவினாலாவது மாறமா
ட்டாவென்று சொன்னவைகளில், பாபமணுகாதென்றுஞ்சொல்லி
யிருக்கிறது. இப்படிப்பட்ட நாராயணனது நாபிகமலத்தில் ச்ரு
தி - (స ప్రజాపతిరేకః పుష్కరపర్ణే సమభవత్ । లలాటాత్క్రోధజో
రుద్రః । త్ర్యక్షః ఖండపరశుః । వరజనత్ సంవత్సరో జాయతః । ఇందో వ
రుణో సోమరుద్రాః । పర్జన్యో యమః । బ్రహ్మణః పుత్రాయ జ్యేష్ఠాయ
శ్రేష్ఠాయ పుత్రాయ రుద్రాయ) என்றதில் சதுர்முக னொருவனேதா
மரைமலரிலிருந்து பிறந்தான். அவனுடைய நெற்றியிலிருந்து
க்ரோதஜனுனருத்ரன் பிறந்தான். வர்ஷங்களுக்கு அதிதேவதைகளு
ம் இந்திரன், வருணன், சந்த்ரன், ஏகாதசருத்திரர்கள் பர்ஜன்ய
தேவதை இயமன் முதலானோர் பிறந்தார்களென்று சொல்லியிருக்
கிறதன்றிக்கே (శ్రుతిస్మృతిర్మమైవాజ్ఞా । యస్తాముల్లంఘ్యవర్తతే।
ఆజ్ఞాచ్ఛేదీ మమద్రోహీ) என்றதில் ச்ருதிஸ்ம்ருதிகள் என்னுடைய
ஆக்கினையென்றும் அவற்றை உல்லங்கனம் செய்தவர்கள் எனக்கு
த்ரோஹிக ளென்றும், சொல்லியிருக்க, அவைகளை யுணராமல்
(నజీవో నదేహో నవానందమఃఖౌ । నయజ్ఞో నదానం నపుణ్యం నపాపం న
వామంత్రతంత్రౌ తపోవాన హోమా । చిదానందరూప శ్శివోహం శివో
హం) என்றும் (నిరానందగంధో నచజ్ఞానబంధో।నమేయో నవాచ్యో నసం

కల్పయోగి । పరోక్షం త్వబద్ధో న మోక్షో న సత్త । చిదానందరూపశ్శివోహం శివోహం) என்றும் (నచైవోపదేష్టా నచైవోపదేశ్యా।నచైవాస్తిమానం నచైవాస్తికాలః । నచైవాస్తిదేశో నచైవాస్తిబుద్ధి । చిదానందరూప శ్శివోహంశివోహం) என்றும் (నదేవానయక్షా నవాగా నదైత్యా।నవాసూర్య చంద్రౌ నవాపప్రపాణిః । నలక్ష్మీశ్వరోవా నవాగీశ్వరోవా। చిదానందరూప శ్శివోహంశివోహం) என்றும் (ఇదం దృశ్యభూతం జగన్నాస్తి సర్వం కుతో భేదబుద్ధిః కుతో భేదబుద్ధిః | పరంతత్త్వమేతత్ పరంతత్త్వమేత । చిదానందరూప శ్శివోహంశివోహం) என்றும் ப்ரஹ்மத்துக்குத் தோஷகுணங் கல்பித்து வேதம்பொய்யென்றும், ப்ரஹ்மாதி தேவர்களும் பார்க்கப்பட்ட ஜகத்தும், பார்க்கச்சக்யமில்லாத ஸ்வர்க்காதி லோகங்களும், உபதேசஞ்செய்வதும் உபதேசம் பெற்றுக்கொள்வதும், ஜீவன், தேஹம், தேசம், காலம், புத்தி என்று சொல்லும்படியான ஸர்வமும் மித்யை, நானே தோஷாச்ரயமாயிருக்கும் ப்ரஹ்மம் நான் சொல்லுவதேபரதத்துவம் நானேபரதத்துவம் இவை ஸத்யமென்றுஞ்சொல்லுமவர்களே அத்வைதிகளென்றும். மாயாவாதிகளென்றும, ப்ரச்சின்னபௌத்தர்களென்றும் சொல்லப்படுவார். இவர்களும்,—

—:0:—

## கிரிஸ்துமத அஜ்ஞாநாந்தகார நிரஸநஸூர்யோதயம்.



ஸிலவருஷங்களுக்குமுன் சிலபாதிரிகள் சென்னபட்டணவீதிகள்தோறும் தங்களுக்குத் தோன்றினபடி கண்டபடியாய் இதரமதஸ்தர்களைத் தூஷித்து, கிரிஸ்துமதமே, ஶ்ரேஷ்டமென்றும் தங்களுடைய(ஸுவிசேஷமே)ஸத்ய வேதமென்றும், அதை நம்பினவர்கள் பராபரனுடைய பரமண்டலங்களை யடைவர்களென்றும், அதைநம்பாதவர்கள் நரகத்தையடைவர்களென்றும், ப்ரசங்கஞ்செய்துகொண்டுவருகையில், அந்தப்பாதிரிகளைக்கதிர்வேற்கவிராயரென்பவர் கேட்டகேள்வியாவன! ஐயா! பாதிரியாரேயுங்கள் மோஸே யென்பவர் எழுதிய(ஸுவிசேஷம்-௧௧-ம். அதிகாரம், ௰௧-௰௨-௰௩-௰௪ ௰௫-௰௬ ௰௭-௰௮ - ம். வசனங்களில் (லோத்) குடியிருந்த பட்டணங்களைத் தாம்கவிழ்த்துப்போடுகையில் (லோத்தை)அந்தக்

களிழ்ந்தவின் நமியிருந்ததப்பவிட்டனுப்பினுர்.பிற்பாடு(லோத்)
சோவாரை விட்டுப்போய் அவனும் அவனேடகூட அவனதிரண்டு
குமாரத்திகளும் பர்வதத்தின்பேரில் ஒரு கெவியிலே குடியிருந்
தார்களென்றும், அங்கு (லோத்) என்பவனுடைய மூத்தகுமாரத்தி
இளையவளோடு நமதுதகப்பனுக்குமதுவைப்பானம்பண்ணக்கொ
டுத்து அவனிடத்திற்புணரலாமென்று யோசித்ததாகவும், யோசித்
தபின், அன்றையராத்திரி தன்தகப்பனுக்கு மதுபானம் பண்ணக்
கொடுத்து மூத்தவள்தகப்பனிடத்தில் புணர்ந்ததாகவும்,மறுநாள்சி
றியவளுடன் மூத்தவள்இன்றையராத்திரிக்குமதுவைப்பானப்பண்
ணக்கொடுத்து நீபோய் அவரோடு சயனியென்று சொன்னதாயும்,
அப்படிக்கே இளையவள் சயனித்ததாயும், இவ்விரண்டு குமார
த்திகளுக்கும் தகப்பனிடத்தில் சேர்ந்ததினுல் கர்ப்பந்தரித்து மூத்
தவளுக்கு (மோவாவும்) இளையவளுக்கு (பேன்அம்மீயும்) ஜனித்
தனர்களென்றும் சொல்லியிருக்கின்றதல்லவா! அப்படிக்கித் தகாத
காரியங்களைச் செய்ததாய்ச்சொன்ன புத்தகந்தானு? சத்யவேதம்,
அதனை நம்பி நடக்கிறவர்கள்தானு!பராபரனையடைவது,செய்யத்த
காத காரியங்களைச் செய்தவர்கள்தானு! தீர்க்கதரிசிகள், அவர்களின்
கிருத்தியங்களை நம்பி நடக்கிறவர்கள்தானு! கடைத்தேறுவது, ஆ!
ஆ! ஆ! இது வெகுநேர்த்தியாயிருக்கின்றது. ஐயா! அவைகளை நம்
பினவர்கள் பரலோகத்தை யடையும்படியாயிருந்தால் நீங்களும்
அப்படியே குமாரத்திகளைப்புணர்ந்து பராபரனை அதிசுலபமாக
அடையலாமே. இது உங்களுக்கு அதிசுலபமாயிருக்க, நீங்க ளதை
விட்டுப் புத்தகங்களைச்சுமந்து வீதிகள்தோறும் கண்டபடி கத்திக்
கொண்டு அதிக ப்ரயாசப்பட்டுத் திரிவானேன்! கிரிஸ்துமத திர
ஸ்காரமென்று ஓர் நூல் அச்சிட்டுப்பூர்வத்தில்தானே பரசமயக்கோ
ளரியாகிய ஸ்ரீமாந் முடிச்சூர் - அப்பாரியர் கண்டித்திருக்க அ
தையு முணராமற்போனதென்ன!

ஸ்ரீபராங்குசர் திருவவதார வருடம் (௬௯௭௦) க்குச் சரி
யான விபவஹூ ஆவணிமீ ௧௰வ கோயமாபுரிக் கோட்டையிலெ
ழுந்தருளியிருந்த ஸ்ரீமத் - உப - திருக்கோவலூர் ஆதிவராஹாசா
ரியாரது தேனே மலருந் திவ்யதிருவடிப் பொற்றாமரை களு
க்கு ஆட்செய்யும்-ஸ்ரீமாந், பெருமாள்ராமாநுஜதாஸர் மேல்கண்ட

ஸ்வாமியினது திருவடியைத் தர்ஸித்துக்கொண்டு தமதுதிருமாளிகைக் கெழுந்தருளும்போது, பாதையிலிருக்கும் மூன்றும்பள்ளிக் கூடத்திலிருந்த, ஒருபாதிரியும் ஒரு உபதேசியும் இவரைக்கண்டபோது, பாதிரி இவரைப்பார்த்துச் சொன்னதாவது, ஐயோ! என்ஸ்நேஹிதரே, கடவுள் உமக்குநல்ல அழகும் புத்தியுங் கொடுத்திருக்க, அந்தவிவேகத்தைக்கொண்டு கடைத்தேறாமல் வீணாய்க்கண்டகண்ட தெய்வங்களைத்தொழுதும், பரிசுத்தமான வுமது லலாடத்தைத் தெருத்திண்ணைகளுக்கிடும் சுண்ணாம்பு செம்மண்பட்டைபோல் கண்டதுகளைப் பூசிக்கெடுத்தும், வீண்காலத்தைக் கழிக்கின்றீரே, இதைப்பார்க்க நான் மெத்தவும் பரிதாபப்படுகிறேனென்பதாய்ச்சொல்லி, இன்னும்தன்வாயில் வந்தபடி மததூஷணங்களையுஞ்சொல்ல, அதிக சாந்தராயிருக்கும், ஷை தாஸர் பாதிரியைக் கடாக்ஷித்து, ஐயா! வெறுமனே வீதியிற் செல்லும்படியான என்னை, நீர் அழைத்து இகழ்ச்சியாய்ப்பேசியதுமல்லாமல் எங்கள் மதத்தையும் தூஷித்தீரல்லவா? ஆனால் யானுங்கள் மதக்கோட்பாட்டை நன்றாயறிவேன் அதில் எனக்கு இக்காலத்தில் தோன்றியமாத்திரம், சில கேள்விகளைக் கேட்கிறேன், அதற்கு நீர் தகுதியான விடைகொடுப்பீராகில் யானுங்கள் மதத்தில் ப்ரவேசிக்கச் சித்தமாயிருக்கிறேன், அதற்கு நீர் விடைசெய்யச் சக்தியற்றவராய் விடுவீராகில், நீர் என்னைப்போல் திருமண்காப்புத் தரித்துக்கொண்டு யாங்கள் சொல்லு மேவலைச்செய்யச் சம்மதிப்பீரா என்றுகேட்டனர். பாதிரி தாஸரைப்பார்த்து உங்களுடைய மதத்துக்குரிய சங்கதிகளில் நான் முக்கியந்தெரிந்துகொண்டவனாதலால் அவற்றிலுள்ளபெருங்குற்றங்களையெடுத்து உம்மை நான் கேள்விகளாய்க்கேட்கிறேன், அதற்கு நீர் தகுந்த வுத்தரஞ்சொல்லி உங்கள் மதத்துக்குரிய வேதசாஸ்திர புராணங்களையும், அதில் சொல்லும் கடவுளையும், நீர் நிலைநிறுத்திக் கொள்வீராகில் அதின்மேல் எங்கள் வேதமாகிய சுவிசேஷத்திலும், எங்களிடத்திலுமுள்ள குற்றங்களை நீர்காட்டலாம், அப்போது உங்களுடையமதம் வீணானதென்றும், அதில்சொல்லும் கடவுள் தேவனல்லனென்றும், அதினால் நீங்கள் யாதொரு ப்ரயோஜனமும் அடையீர்களென்றும், நாம் நிரூபிப்

போமாகில், நீங்கள் எங்கள்மதத்தில் ப்ரவேசிக்கவேண்டியது. அல்லது உங்களுடைய மதமே சரியானது, அதில் சொல்லும்கடவுளே பரப்ரஹ்மம் அந்த வேதஶாஸ்த்ரப்படி நடப்பவர்களே, மறுமை லாபம் பெறுபவர்கள் என்று ஸ்தாபித்து, எங்களுடைய சுவிசேஷம் வேதமல்ல, அதில் முறையிடும் ஏசுரக்ஷகரல்லவென்று நிரூபிப்பீராகில், நாங்கள் உங்களைப்போல், திருமண்ணிட்டுக்கொண்டு நீங்கள் சொல்லும் ஏவல்களைக் கேட்போமென்று பாதிரிசொல்ல, அவ்விதமே ஷை தாஸர் சம்மதிக்கப் பாதிரிகேட்ட கேள்விகளாவன?

ஐயா! பெருமாள்ராமாநுஜதாஸரே, அண்டபிண்டசராசரங்களெல்லாம் ஆக்கி, ஆதரித்து, அழிக்குங்கடவுள் ஒருவரா! அல்லது பலரா! என்று கேட்டதற்கு ஷை தாஸர் கடவுளொருவரேயன்றிப் பலகடவுளரில்லையென்று சொன்னார்.

பாதிரி கேள்வி, ஐயா! அவ்விதமிருக்க உங்கள் மதத்தில் பலபல தேவர்களைச்சொல்லக்காரணம் யாதென்றார். தாஸர் விடை ஶ்ருதி (ఏకోహవైనారాయణఆసీత్ । నబ్రహ్మానశంకరః।సముద్భూతాత్వా సమచింతయత్ । తతఏతేధ్యానాజ్జాయంతేవిశ్వేహిరణ్యగర్భోగ్నిర్యమవరుణరుద్రేంద్రాః।) என்றதில், பிரமன் ருத்திரனை ஈசானியன் ப்ருதிவியிலுள்ளவர்கள், நக்ஷத்திரங்கள், முநீஶ்வரர்கள், ஆகிய யாவருமிறந்து நாராயணனொருவனே முடிவிலிருக்கிறனென்றும், பின்பு இறந்தயாவரும் விஷ்ணுவினுடையநினைப்பினலுண்டாவார்களென்றும், மற்றொரு ஶ்ருதியில் (నారాయణపరంబ్రహ్మ తత్వంనారాయణఃపరః) என்றதில் நாராயணன் பரப்ரஹ்மமென்றும், ஸத்யமாய் நாராயணனே பரனென்றும் வேதபுருஷன் ஸத்யஞ்செய்து சொன்னதுமன்றி, ஸ்ரீவேதவ்யாஸர் (సత్యంసత్యంపునస్సత్యం। ఉద్ధృత్యభుజముచ్యతే । వేదశాస్త్రాత్పరంనాస్తి । నదైవంకేశవాత్పరం) என்றதில் மூன்றுதரங் கையை யுயரவெடுத்து ஸத்யஞ்செய்து சொல்லுகிறேன் வேதத்துக்குமிஞ்சின ஶாஸ்த்ரமில்லை கேசவனுக்கதிகமான தெய்வமுமில்லையென்று சொல்லியிருப்பதுமன்றி, ஸ்ரீபராஶர் (యథాసర్వేషుదేవేషు। నాస్తినారాయణాత్పరః । తథా

సర్వేషాం మంత్రేషు| నమంత్రోష్టాక్షరాత్పరః) என்றதில் எப்படி ஸம
ஸ்த தேவர்களுக்குள்ளேயும், நாராயணனைவிடப் பரனில்லையோ,
அப்படியே ஸமஸ்தமந்திரங்களிலும் அஷ்டாக்ஷரிக்குமிஞ்சின மந்தி
ரமுமில்லையென்றுசொல்லியிருப்பதுமன்றி, ப்ருகுமஹருஷி (ఆలో
డ్యసర్వశాస్త్రాణి । విచార్యచపునఃపునః । ఇదమేకంసునిష్పన్నం । ధ్యే
యోనారాయణస్సదా) என்றதில் எத்தனைதரம் ஶாஸ்த்ரங்களை விசா
ரித்தபோதிலும், ஸகலவேத, ஶாஸ்த்ரங்களும் அந்த நாராயண
னே பரனென்று ப்ரதிபாதிக்கின்றனவென்று சொல்லியிருப்ப
து மன்றி, ருத்ரமூர்த்தி காசிக்ஷேத்திரத்தில் உமைக்கு ஸத்யஞ்
செய்து (శ్రీరామరామరామేతి | యేతత్తార్యం సముచ్యతే | అత
స్తంజానకీనాథం | పరబ్రహ్మదినిశ్చితం) என்றுவேதத்தில் சொன்ன அ
ர்த்தத்தைப் பார்வதியே இப்போது உனக்குச் சொல்லுகிறேன்,
ஜானகிநாதனாகிய பரப்ரஹ்மமென்று சொல்லப்பட்டிருக்கின்ற
பொருளெதுவோ அப்பொருளைத்தான் உனக் குபதேசிக்கிறே
னென்று சிவன் ப்ரமாணஞ்செய்து சொன்னதுமன்றி, போதாய
னருஷி (నారాయణసమోనాన్య| సర్వలోకేషువిద్యతే , దస్మాదభ్యధికః
కశ్చిత్ । న్యాపినా స్తిః కేశవాత్) என்றதில் ஸ்ரீமந்நாராயணனுக்கு
அதிகமானவர்களும் ஸமானமானவர்களுமில்லை என்று ஸமஸ்த
வேதங்களிலுஞ் சொல்லப்பட்ட பொருளை ஸமஸ்தலோகத்தாரு
மறிந்திருக்கிறார்கள், ஆகையினாலே கேஶவனைவிட வேறே அதிக
மானவர் ஒருவருமில்லையென்று சொன்னதுமன்றி, ஸ்ரீஶடகோப
ர் த்ரவிடவேதத்தில் "ஒன்றுந்தேவுமுலகுமுயிருமற்றும் யாதுமி
லா, அன்று நான்முகன்றன்னொடுலகோடுயிர்படைத்தான், குன்ற
ம்போன்மணிமாடநீடுதிருக்குருகூரதனில், நின்றவாதிப்பிரானிற்க
மற்றைத்தெய்வம்நாடுதிரோ, என்றுதிருவாய்மலர்ந்தருளியதுமன்றி,
தொண்டரடிப்பொடியாழ்வார். "மற்றுமோர்தெய்வமுண்டோம
தியிலாமானுடங்காள், உற்றபோதன்றிநீங்க ளொருவனென் றுண
ரமாட்டீர், அற்றமேலொன்றறியீர வ னல்லாற்றெய்வமில்லை, கற்றி
னமேய்த்தவெந்தை கழலிணை பணிமினீரோ" என்றருளியதுமன்றி,
பூர்வம் சிவவாக்யராயிருந்த திருமழிசைப்பிரான், "தன்னுளே தி
ரைத்தெழுந் தரங்கவெண் டடங்கடல், தன்னுளே திரைத்தெழுந்த

டங்குகின்ற தன்மைபோல், நின்னுளேயடங்குகின்ற நீர்மைநின்க ணின்றதே'' என்றும் "தூய்மையோகமாயினாய் துழாயலங்கன் மாலையாய், ஆமையாகி யாழ்கடற் றுயின்றவாதி தேவநின், நாமதேய மின்னதென்ன வல்லமல்ல மாகிலும்,சாமவேத கீதனாய சக்கிரபாணி யல்லையோ'' என்றும் திருவாய்மலர்ந் தருளியதுமன்றித் திருவரங்கத் தமுதனார். "நாட்டியநீசச் சமயங்கண்மாண்டன நாரணனைக், காட்டியவேதங் களிப்புற்றதுதென் குருகைவள்ளல், வாட்டமிலாவண்டமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில், ஈட்டியசீலத் திராமாநுசன்ற னியில்வுகண்டே'' என்று திருவாய்மலர்ந்தருளியதுமன்றி, வேதத்தைக்கரைகண்ட பிள்ளைப்பெருமாள் ஐயங்காரும். "கானூர்ந்ததாமரை வாவியுளானை கராவினயர்ந், தானேந்திமூலமென் றோதியநாட்சென் றுதவுகையால், தேனூர்ந்தசோலை யரங்கனல்லாற்றெய்வ மில்லையென்று, மானேந்துகையன் மழுவேந்தி னுனிந்த மாநிலத்தே'' என்றும் திருவாய்மலர்ந்தருளினார். இப்படிக்கு வேதங்களும் ருஷிகளும் ஆழ்வாராசாரியர்களும் சத்தியஞ்செய்து லோகமுஜ்ஜீவன மடையும்பொருட்டுச் சாதித்திருப்பதால் கடவுள் ஒருவனே யென்பதற்கு எவ்வளவுஞ் சந்தேஹமில்லையென்று சொன்னார்.

அதற்குப்பாதிரி, ஆனாற் சிவனுக்குத் தெய்வத்தன்மைசொல்லுகிறீர்களே அது சரியானதல்ல, ப்ரஹ்ம ருத்ரேந்த்ராதியர்கள் மனுஷ்யரோ அல்லது தேவர்களென்று சொல்லக்கூடா தென்பதாய்ச் சொல்ல, தாஸர்விடை;

"தவம்புரிந்த சேதனரைச் சந்திரனுதித்தன், சிவன்பிரம னிந்திரனுச் செய்கை - உவந்து, திருப்பா டகமருவுஞ் செங்கண் மாறன் மார், பிருப்பா டகவுரையாலே'' என்றபடியே, ஸ்ரீமந்நாராயணனால், ப்ரஹ்மருத்ரேந்த்ராதிதேவர்கள் தம்மை யாச்ரயிக்கும் பக்தர்களுக்கு இஷ்டகாமியங்களைக் கொடுக்கும் ஶக்தி தவத்தினால் பெற்று ஜனித்தவர்களாகையால் அவருக்குத் தெய்வத்தன்மையில்லையென்றுசொல்ல ஹேதுவில்லையென்றார்.

பாதிரி கேள்வி; உங்களில் தெய்வத்தன்மைபெற்ற சிவனைவர் தம்மைக்கோரி வரம்பெறவந்த பத்மாஸுரனென்பவனுக்கு

த் தாம் வரத்தைக்கொடுத்தால் அவன் தம்தலையில் கைவைக்கவரு வானென்று தெரிந்துகொள்ளாமல் அவனுக்கு வரத்தைக்கொடுத்து, அவன் தம்தலையில் கைவைக்கவரும்போது நிர்வஹிக்க ஶக்தியற்றவராய் ஓடி ஐவேலங்காயில் மறைந்தாரல்லவா! இவ்வளவு ஶக்திஹீனருக்குத் தெய்வத்தன்மை சொல்லப்போமோ என்றபோது, தாஸர் நகைத்து, ஐயா! பாதிரியாரே, நீர் எவ்விடத்தில் சிவனுக்குத் தெய்வத்தன்மை யில்லையென்று சொல்லப்போகின்றீரோ அவ்விடத்தில்தானே அவருக்குத் தெய்வத்தன்மையும், தம்மைக்கோரும் பக்தர்களுக்குத்தரும் இஷ்டகாம்ய ஸித்தியும், பரப்ரஹ்மத்தின் நிர்ணயமும் பரிஷ்காரமாய்த் தெரிந்துகொள்ளப் போதுமான இடமிருந்தும், அந்தப்புராணத்தையும், அதிலடங்கிய அர்த்தங்களையும் கவனித்துப்பார்த்துத் தெரிந்துகொள்ளாமல் (ஆசை வெட்கமறியாதென்ற) பழமொழிப்படிக்குத் தம்மிடத்திலிருக்கும் குற்றங்களையெண்ணிப் பாராமல் பிறரிடத்திலிருக்கும் பொறுமையால் அவர்கள்செய்யும் ஸத்கார்யங்களெல்லாம் துஷ்கார்யமாய்ச் சிந்திப்பவரைப்போல் நீர்சொன்னீரோயென, அதற்குப் பாதிரியார், அது எங்ஙனே யென்றார்.

தாஸர்விடை, ஐயா! பாதிரியாரே ருத்ரமூர்த்தியாகிய கைலையங்கிரிவாசர் தம்மைக்கோரித் தவம்செய்யு மடியார்களுக்கு இஷ்டகாம்யங் கொடுப்பவராகையால், வ்ருகாஸுரனெனவன் தம்மைக்கோரி நெடுநாள் தவம்புரிந்தபடியால், அதற்காகவந்து, தாம் வரமீயுங்காலத்தில் தம்மையே பின்பற்றித் துரத்த, அதினாலவன் கெடுவானென்று பூர்ணமாய்த் தெரிந்திருந்தபோதைக்கும் அவனுக்கு வரமீயாதபக்ஷத்தில் நெடுநாளாய்க் காளகண்டனைப்பற்றி கடுந்தவம் புரிந்த வ்ருகாஸுரன் வீணாய்ப்போனான் நாமுமவ்விதம் நடப்போமாகில் யாதொருபலனையு மடையோம் என் றுலகம்பழிக்குமென்ற வார்த்தைக்காய் வெள்ளியங்கிரியோன் விரைவுடன்வந்து, வ்ருகாஸுரன் வேண்டலின்படியே, அவன் தன்னஸ்தத்தை யார்தலையில் வைக்கினும் வைக்கப்பெற்றோர் சாம்பராய்ப்போக வரத்தை தந்தார். இவ்விதமாகிய வரத்தைப்பெற்ற வ்ருகாஸுரனெனவன் அந்தவரந்தனக்குப் பலித்த ஸங்கதியைத்தெரிந்துகொ

ள்ளவேண்டு மென்பதாய்த்தீட்டிய மரத்திலேயே கூர்பார்ப்பதைப்போல், சிவபெருமான் சிரசைத்தீண்டவருங் காலத்தில், இந்தப் பாதகனானவன் பரப்ரஹ்மஸ்வரூபியாகிய ஸ்ரீயப்பதியால் தீர்ந்துபோவானென்று கருதினவராய் ராமமந்த்ரத்தை த்யானஞ்செய்துகொண்டு ஐவேலங்காயில் மறைந்து விட்டார், அப்போதே அந்தப் பரப்ரஹ்மமாகிய ஸர்வேச்வரன் ப்ரஹ்மசாரி யவதாரமாய் அந்த அஸுரனை அவன் கரத்தையே அவனது சிரத்தின் மீதில் வைக்கச்செய்து, அழித்துவிட்டார். ஆகையால், ஐயா பாதிரியாரே! வ்ருகாஸுரன் கோரின வரம் ஈந்ததினாலும், அந்தத்துஷ்டன்கொண்ட கருத்தையறிந்து ஐவேலங்காயில் மறைந்ததினாலும், சிவன்கொடுத்த வரத்தின்படிக்கே, பத்மாஸுரன் தனது கரத்தைத் தனது சிரத்தின்மீது தாக்கிக்கொண்டிறந்ததினாலும் சிவன் தெய்வத்தன்மை யுடையாரென்றும், அச்சிவனுக்குவந்த ஆபத்தைத் தொலைக்க ஸ்ரீமந்நாராயணன் தக்ஷணம் ப்ரஹ்மசாரி வடிவாய்வந்து ரக்ஷித்ததினால் பரப்ரஹ்மமாகிய கடவுள் தமது பக்தஜனங்களுக்கு வந்த இடரைத்தீர்க்க எவ்விடங்களிலும் பரிபூரணமாய் நிறைந்திருக்கிறாரென்றும் தெரிந்துகொள்ளப் போதுமான இடமிருக்க, நீர் அவற்றை எல்லாம் யூஹிக்காமல் பேசுவது சரியானதல்லவென்றுரைத்து, பின்னும் பாதிரிகேட்ட பல கேள்விகளுக்கு அங்கங்கேயே தகுதியான விடையுரைத்து வாக்குப்பந்தனம் செய்து விட்டார்.

அவ்வினாவிடைகள் முழுமையுமிதி லெழுதினால் க்ரந்தம் விரிவாகுமென்னு முத்தேசத்தா லெழுதவில்லை. இதுநிற்க ஷெட தாஸர் பாதிரியைப்பார்த்து ஐயா! பாதிரியாரே! நீர் எங்கள் மதத்துக்குரிய ஸங்கதியைப்பற்றிப் பேசவேண்டுமானால் அம்மதக்கோட்பாட்டின் ஶாஸ்த்ரமுழுதுந் தெரிந்திருந்தால் பேசலாம், உமக்கோசிறிதும் தெரியாது. அதிலெனக்குத் தெரிந்தமாத்ரம் வேதஶாஸ்திர புராணாதிகள்பேரைச் சொல்லுகிறேன் கேளுமென்று சொன்னார்.

இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்குவேதங்களும், தயித்திரியம், ப்ரகதாரண்ணியம், இலிங்கம், சாரீரம், நார

ஸிங்கம், சதபதபிரமாணம், காருடம், கற்பம், சாந்தோக்கியம், கட வல்லிமுண்டம், முற்சலோபம், ப்ரஹ்மவிந்து, தாபநீயம், சுவா பஜ்ஞநோபம், ஞானவர்க்கம், யாஜ்ஞவர்க்கம், மைத்ராவருணம், சிற்குணாலயம், தாரமந்திரம், தீபம், மஹோபநிடம், காலாக்னி ருத்திரம், சாபாலம், மாநாரணம், சுவேதாஸ்வதரம், சுபாலம், பரமார்ப்பம், அதருவசிரம் முதலான உபநிஷத்துகளும், வாசிஷ்டம், ஆரிதம், வியாசம், காசிபம், பாரத்துவாசம், பராசரியம் என்னும் சாத்விகதர்ம சாஸ்திரங்களும், ஆனதாக்கியம், காத்தியாயனம், ஆத்திரேயம், மானவம், யாஜ்ஞவர்க்கம், வைணவம் என்னும் ராஜஸதர்மநூல்களும்; வாருகர்ப்பத்தியம், சாமவர்த்தம், அவுசனஸம், சாத்த , கோதமம், யாமிகம் என்னும் தாமஸதர்ம நூல்களும், ப்ரஹ்மாண்டம், ப்ரஹ்மவைவர்த்தம், மார்க்கண்டேயம், வாமனம், ப்ராஹ்மம், பௌடிகம் என்னும் ராஜஸபுராணங்களும், கந்தம், ஆக்கினேயம், சைவம், கூர்மம், மச்சியம், இலிங்கம் ஆகிய தாமத புராணங்களும், பாகவதம், பாத்மம், வா[illegible]ம், வைஷ்ணவம், காருடம், நாரதீயம் ஆகிய சாத்துவிக புராணங்களும், பார்க்கவம், சோமம், சாம்பம், வாருணம், மானவம், ஸ்காந்தம், வாயுவியம், துருவாசம், நாரசிங்கம், பாராசரம், மாரீசம், நாரதம், காபிலம், ஆத்தியம், கௌசிகம், வாசிட்டம், ப்ரம்மாண்டம், சிவதருமம் என்னும் உபபுராணங்களும். ஆங்கிரஸர், வியாதனர், கர்ப்பாலனர், ஆபத்தம்பர், வருணனர், போதாயனர், சாபாலர் முதலிய முனிவர்களால் செய்யப்பட்ட உபஸ்மருதிகளும்;பாரத்துவாசர், வாசிஷ்டர், பாராசார், சௌனகர், நாராயணர், அகத்தியர் இவர்களால் செய்யப்பட்ட சம்மிதைகளும், நூற்றெட்டுச் சம்மிதைகளையுடைய பாஞ்சராத்ரம், வைகானசம் என்னும் வைதிகாகமங்களும், வால்மீகர், அருளிய ஸ்ரீமத்ராமாயணமும், ஸ்ரீவேதவ்யாஸர் அருளிய பஞ்சமவேதமாகிய ஸ்ரீமஹாபாரதமும் பிரமனும், சிவனும் ஆடிய பரதநூலும், அகத்தியர், தன்வந்த்ரி, ரோமர், நந்திகேஸ்வரர் முதலானோர்செய்த வாகட நூல்களும், ருத்திரன், நந்தி, சுப்ரம்ஹண்யர்செய்த ஜோதிஷ நூல்களும்,வையாசிகம், காபிலம், கௌதமியம், ஜைமினியம், பராசி

யபம், காணாதம் என்னும் தர்ஶனவர்க்க ஶாஸ்த்ரங்களும், யா
தவம், மாயாவாதம், ஹிரண்யகர்ப்பம், ராமாநுஜம், பார்க்கரம்,
தத்துவவாதம் என்னும் ஆறுமத ஶாஸ்த்ரங்களும் உண்டு. இவைக
ளை எல்லாம் செவ்வையாய்ப் பரிஶோதித்தால் பரப்ரஹ்ம நிர்ண
யமும் மதாசார ஒழுங்கும் செவ்வையாய்த்தெரிந்து கொள்ளலா
ம், இவ்வளவு ஶாஸ்த்ர புராணங்களையும் பரிஶோதனைசெய்து தெ
ரிந்துகொள்ள வேண்டுமானால் எளிதில் பார்த்துத் தெரியக்கூடாத
தா யிருக்குமென்பதாய் எண்ணங்கொள்வீராகில் இந்த வேதஶா
ஸ்த்ர புராணங்களையெல்லாம் பாலைக்காய்ச்சித் தயிராய்த் தோய்
த்து மத்தால் கடைந்து வெண்ணெயெடுத்தாற்போலேயும், பொ
டியாலும், அரக்காலும், புனைந்து செய்த நகையையுருக்கித் தங்
கக்கட்டியாய்ச்செய் ததுபோலேயும், ஆழ்வார்களருளிய திவ்ய
ப்ரபந்தங்களாலேயும், வெண்ணெயையுருக்கி நெய்யாய்ச்செய்
தது போலேயும்; எழுமாற்றுள்ள தங்கத்தைப் புடத்தில்வைத்துப்
பத்தரைமாற்றாக்குவதுபோலேயும் பூர்வாசாரியர்கள் திருவாய்மல
ர்ந்தருளிய திவ்ய ஸ்ரீஸூக்திகளாகிய ஆறாயிரப்படி, ஒன்பதினா
யிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்
தாறாயிரப்படி, நிகமநப்படி, ரஹஸ்யத்ரயம், தத்துவத்ரயம்,
அர்த்தபஞ்சகம், ஸ்ரீவசன பூஷணம் முதலான ரஹஸ்யங்களாலே
யும் பரப்ரஹ்ம நிச்சயத்தையும், நாமநுஷ்டிக்கு மநுஷ்டானங்
களையும் அடையும் பதவிகளையும் எளிதிலறியலாம்; இப்படிப்பட்
டவைகளில் நீரேதாயினும் பார்த்திருக்கிறீராவென்றுகேட்க, பா
திரி (மவுனங்கலஹநாஸ்தி) என்கிறபடியே யாதொரு உத்தரமுஞ்
சொல்லாமல் பித்தம்பிடித்தவனைப்போல் ப்ரமித்து நின்றார்.—

அதின்மேல் தாஸர் பாதிரியைப்பார்த்து ஐயா நீர் எங்கள்
வேதஶாஸ்த்ரங்களைச்செவ்வையாய்ப்பார்க்காதவராகையால் அதை
க்குறித்துப் பேசச் சக்தியற்றவராயிருக்கிறீர் ஆனால், நான், உங்க
ளுடைய (சுவிசேஷத்திலுள்ள) சங்கதிகளைச் செவ்வையாய்த்தெ
ரிந்துகொண்டிருக்கிறேன். அதற்குப்பதில் விடைதாருமென்று
கேட்டு ஆரம்பித்தார். தாஸர் கேள்வி, ஐயா! பாதிரியாரே, நீங்கள்
கிரிஸ்துவைத் தேவனென்றும், அவர்தாம் ரக்ஷகரென்றும், சொல்

லுகிறீர்களல்லவா, நீங்கள் வேதமென்று நம்பிவைத்துக்கொண்டு இருக்கிற (சுவிசேஷமென்னும்) புத்தகத்தில் (மத்தேயு) ௯ - ம். அதிகாரம், ௬-ம் வசனத்திலும் (லூக்கா) ௬-ம். அதிகாரம். ௨௨-ம் வசனத்திலும் ஷை (லூக்கா) ௯ - ம், அதிகாரம், ௨௬ - ம், வாக்கியத்திலும் (யோவான்) ௩ - ம். அதிகாரம் ௰௩ - வது வாக்கியத்திலும், மற்றும் பல இடங்களிலும் (ஏசுவானவர் தம் வாக்கினால் அநேகவிதமாய் நான் மனிதனுடைய குமாரன், நான்மனிதனுடைய குமாரன் என்று வெகுகண்டிதமாய்ச் சொல்லியிருக்க நீங்கள் என்ன ஆதாரத்தைப்பற்றி ஏசுவைத் தேவன் தேவனென்பதாய்ச் சொல்லுகிறீர்களென்றும்,—

௨ - வது ஐயா, கொஞ்சம் தயவுசெய்து (மத்தேயு) எ - ம் அதிகாரம், ௨௧ - ம், வாக்கியத்தைப்பாருங்கள், அதில், என்னைக் கர்த்தாவே கர்த்தாவே என்கிற எவனும், பரலோக ராஜ்யத்தில் ப்ரவேசிப்பதில்லை, பரமண்டலங்களிலே யிருக்கிற என் பிதாவினுடைய சித்தத்தின்படி செய்கிறவனே அதில் ப்ரவேசிப்பான் என்பதாய் ஏசு தன்வாக்கினாலே சொல்லியிருக்க, நீங்கள் ஏசுவார்த்தையை நம்பாமல், அவனையே கர்த்தாவே கர்த்தாவே என்றுசொல்லி எந்தலோகத்தில் ப்ரவேசிக்க எண்ணங்கொண் டிருக்கிறீர்கள் என்றும்,—

௩ - வது ஐயா, பாதிரியாரே; மத்தேயு, ௬ - ம். அதிகாரம், ௯ - ம், வசனத்தைப்பாருங்கள், அதில் பராபரனைப்பற்றி ஜபம் செய்யும்படி ஏசுவே சொல்லியிருக்க, ஏசுவின்வார்த்தையை நம்பாமல், ஏசுவையே ஜபஞ்செய்து எந்தலோகத்தை யடையப்போகிறீர்களென்றும்,—

ச - வது ஐயாபாதிரி யாரே; ஏசுதிரித்தவமுள்ளவனென்றும் லோகத்துக்கு ரக்ஷகனென்றும் சொல்லுகிறீர்க ளல்லவா! அப்படிக்கிருந்தால் அவனிடம் பிசாசுவந்து சேருமா; அப்படிக்கிருக்க (மத்தேயு) ச - ம். அதிகாரம், அ - ௯ - ம், வசனங்களைப்பாருங்கள். அதில் பிசாசானவன் அவனை மிகவுமுயர்ந்த மலையின்மேற் கொண்டுபோய் உலகத்திலுள்ள ராஜ்யங்களெல்லாவற்றையு மவைகளின் மகிமையையும் அவனுக்குக் காண்பித்து நீ விழுந்து என்னைத்

ம் தாமுதா விலைகளையெல்லாந் தருவேனென்று சொன்னானென்று கண்டிருக்கிறது. அப்படியிருக்க, ஒரு பிசாசானவன் வந்து க ட்டித் தூக்கிக்கொண்டுபோக அதினிடமிருந்து தப்பிக் கொள் ளச் சக்தியற்று அதின் கைக்குள் அகப்பட, அது எடுத்துக்கொண் டுபோய் உலகத்தையும் உலகத்தின் மகிமைகளையும் காட்டக்கண்ட ஏசுவென்றும் ஒருமனிதனை ரக்ஷகனென்றெறுசொல்ல உங்கள் புத்தி க்குத் தோன்றவில்லையோவென்றும் கேட்டார். இப்மட்டோ?

௫ - வது ஐயா, பாதிரியாரே; (மத்தேயு) உக - ம். அதிகார ம், கக - வது வாக்கியம் வழியருகே ஒரு அத்திமரத்தை யவர் கண்டு அதினிடத்தில் போய் அதில் இலைகளையன்றிக் கனிகளைக்கா ணாமலிருக்கிற பொழுது, அவரதை நோக்கி இனிமேல் ஒருகாலு ம் உன்னில் கனியுண்டாகா திருக்கக்கடவது என்று சொன்னார் உட னே அத்திமரம் பட்டுப்போய் விட்டது. ஐயா, அத்திமரத்தில் கா யில்லாத காலம் என்று தெரிந்து கொள்ளச் சக்தியற்று வீணாய் தினிடம் போய்ப் பொறுமையா லதற்குச் சாபமிட்டுப் பட்டுப் போகும்படி செய்த மஹானுபாவர் தாமோரக்ஷகர்! இவர்தாமா திரி தத்துவமுள்ளவர்! இவனைநம்பித்தானு கரையேறுவது! அத்தி மரத்தை ரக்ஷித்ததைப்போல் உங்களையும் ரக்ஷிப்பார் என்று தெரி ந்துகொள்ளக் கூடாதா என்றும்,—

௬ - வது ஐயா, பாதிரியாரே; (மத்தேயு) உஎ - ம். அதிகார ம், ௩௪ - ம், வசனம். கசப்பான கீரைகலந்த காடியை யவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள். அவர் அதை ருசிபார்த்துக் குடிக்க மன மில்லாதவரா யிருந்தார். ஐயா, ஏசுவைச்சிலுவையிலறையுங் கால த்தில் கசப்பான கீரையைக்கலந்த காடியைக்கொடுக்க அதைக் கச ப்பென்று முன்னதாக அறிந்துகொள்ளாமல் குடித்துப்பார்த்துக் கசப்பென்று தள்ளிய, ஏசுதானு இறந்தகாலம், நிகழ்காலம், எதிர் காலமென்ற முக்காலங்களையு முணர்ந்தவர்! இவனை நம்பித்தானே யாவருங்கரையேறுவது! ஒன்றைப்பார்த்ததின்மேல் நம்மைப்போ ல் தெரிந்துகொள்பவரே யல்லது முன் தெரிந்துகொள்ள வல்லவ ரல்லரே! இப்படிப்பட்டவருடைய வார்த்தையை என்னமாய் ந ம்பலாம் என்றும்,—

௭ - வது (மத்தேயு) ௨௭ - ம். அதிகாரம், ௪௬ - ம், வாக்கியம். பின்பு ஒன்பதாமணி நேரத்திலே ஏசுவானவர் எலீ எலீ, லாமா, சபஹ்த்தானி என்று மிகுந்த சப்தத்தோடே கூப்பிட்டார். அதற்கு என்தேவனே என்தேவனே என் என்னைக் கைவிட்டீரென்ற அர்த்தமாம். ௫௰ - வது வாக்கியம். பின்பு ஏசுவானவர் மறுபடியு மிகுந்த சப்தமிட்டு ஆவியை விட்டு விட்டார் ஐயா, தன்னைத்தான் காத்துக்கொள்ளக் கடவுளை யநேகவிதமாய் ப்ராத்தித்தும், கடவுள்வந்து காவாமையால் ப்ராணனைவிட்டிறந்த ஏசு மற்ற பாலரைக்காக்கக்கூடும்! ஏசுவையே வந்து காவாதகடவுள் ஏசுவை நம்பினவர்களைக் காக்கவருவாரா? தம்மைக்காக்கக் கடவுள்கிருபையைச் சம்பாதிக்காத ஏசுவானவர் பிறரைக் காக்கக்கடவுள் கிருபையைச் சம்பாதித்திருக்கிறாரென்று சொல்லும் பெரும்பொய்யாகிய கட்டுக்கதையை யார் நம்பக்கூடுமென்றுஞ்சொல்லி, ஏசுரக்ஷகனென்ற பாதிரி நாவெழாமல் அநேகம் கேள்விகளால் வாயடங்கிப்போகச்செய்து, பரத்வ, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாவதாரமாய் எழுந்தருளிய ஹார, கேயூர மகரகுண்டல கிரீடாதி திவ்ய பூஷண பீதாம்பர தாரியாய், சங்கு சக்ர கதாபாணியாய், விலக்ஷண விக்ரஹ யுக்தரான ஸ்ரீமந்நாராயணனல்லது வேறே யாரும் ரக்ஷகரல்லரென்பதாய் ஷை தாஸர் உபதேசித்தார்.

அதற்குப்பாதிரியார் நகைத்து ஐயா, பெருமாள் ராமாநுஜ தாஸரே; ஸர்வலோக ஜீவதயாபரராயிராநின்ற லோகாராத்யராகிய கடவுளுக்கு ரூபமுண்டோ வென்பதாய்க் கேட்டார். அதற்குத் தாஸர் புன்சிரிப்புக்கொண்டு ஐயா, வேதஶாஸ்திர புராணங்களின்படி பகவானுடைய ரூபநாமங்களை நீர் தெரிந்துகொள்ள வேண்டுமானால் பூரணமாய் அந்தவேத ஶாஸ்த்ர புராணங்களின் சங்கதி உமக்குத் தெரியா தாகையால் நீர் வேதமென்று நம்பிவைத்துக்கொண் டிருக்கிற (சுவிசேஷமென்னும்) புத்தகத்திலேயே கடவுளுக்கு ரூபஞ்சொல்லி யிருக்கிறது அதை நீர் கவனித்துப்பார்த்துத் தெரிந்துகொள்ளச் சக்தியற்றவராய் விட்டீர் என்பதாய்ச் சொன்னார்.

அதற்கு ஷை பாதிரியார், எங்கள் சுவிசேஷத்தில் எந்தவிட

த்தில் பராபரனாகிய கடவுளுக்கு ரூபஞ் சொல்லுகிறதென்பதாய்க் கேட்டார்.

அதற்கு தாஸர்விடை. ௧ - வது ஐயா, பாதிரியாரே; தாங்கள் செவ்வையாய்க் கவனித்துப்பாருங்கள் முதலாம்மோசே, முதலாமதிகாரம். ௨௬ - ம், வாக்கியம்) பிற்பாடு பராபரன் நம்முடைய சாயலாக நம்முடைய வுருவத்தின்படியே மனிதனையுண்டாக்குவோமாக, அவர்கள் சமுத்திரங்களின் மச்சங்களையும், ஆகாசத்துப் பறவைகளையும், மிருகஜீவன்களையும், பூமியனைத்தையும் பூமியின்மேல் ஊருகிற சகல ஜீவனவற்றையும் ஆளக்கடவரென்றார். ௨௭ - வது வாக்கியம் அப்படியே பராபரன் மனுஷியனைத்தம்முடைய சாயலாகச் சிருஷ்டித்தார் அதனைப் பராபரனுடைய சாயலாக சிருஷ்டித்தார். ஆணும் பெண்ணுமாகச் சிருஷ்டித்தார். என்றிருக்க அந்தப் பராபரன் தம்முடைய சாயலாகத் தம்முடைய உருவத்தின்படியே மனுஷியர்களைச் சிருஷ்டித்ததாகக்கண்டிருக்கையில் மனுஷியருடைய வுருவத்திற்கும் சாயலுக்கும் பராபரன் வுருவமும் சாயலும் ஒத்திருக்கின்றனவென்று தங்களுடைய புத்திக்குத்தோற்றும லிருப்பது மெத்த ஆச்சரிய மல்லவா?

௨ - வது முதலாம்மோசே, ௨ - ம். அதிகாரம், ௨ - ம், வசனம் பராபரனுண்டாக்கின தம்முடைய கிரியையை ஏழாம்நாளிலே நிறைவேற்றின பிற்பாடு அவர்தாமுண்டாக்கின தம்முடைய கிரியையை எல்லாம் முடித்தபின் ஏழாம்நாளிலே ஓய்ந்திருந்தார். மூன்றும்வாக்கியம். பராபரன் ஏழாம்நாளை ஆசீர்வதித்து அதைப் பரிசுத்தமாக்கினார், அதேதெனில் பராபரன் உண்டுபண்ணி ஸ்ருஷ்டித்த தம்முடைய கிரியையையெல்லாம் முடித்தபின் அதிலே ஓய்ந்திருந்தார். ஐயா, இதினால் வெளியாகும் சங்கதியாதெனில் பராபரனாகிய கடவுள் லோகஸ்ருஷ்டிக்காய் ஏழுநாள்தான் மிகுந்த வேலைசெய்து அதின்மேல் ஓய்ந்திருந்ததாய்த் தெரியவருகிறபடியால் ரூபமில்லாத வஸ்து ஏழுநாளுண்டாக்கவும் அதின்மேல் சலித்து ஓய்ந்து இருக்கவும் ஆசீர்வதிக்கவும் கூடுமா! என்பதாய் நீர் செவ்வையாய்க் கவனித்துப்பாரும்.

௩ - வது முதலாமோசே, ௨ - ம். அதிகாரம். ௭ - ம், வாக்

கியம் பராபரனாகிய கர்த்தர் மனுஷ்யனைப்பூமியின் மண்ணினாலே யுருவாக்கி ஜீவனின் ஸ்வாஸத்தை யவன் நாசியிலே யூதினார் அப்போது மனுஷ்யன் ஜீவாத்துமாவானான். ஐயா, இதில் உருவாக்கினதாகவும் ஊதினதாகவும் எழுதியிருப்பதால் கைகளில்லாமல் உருவாக்கவும், வாயில்லாமல் ஊதவும் கூடுமாவென்று யோசித்துப்பாரும்.

௪ - வது ௧ - மோசே, ௨ - ம். அதிகாரம், ௧௬ - வது வாக்கியம் பராபரனாகிய கர்த்தர் மனுஷ்யனுக்குக் கற்பித்துச்சொன்னதாவது நீ, தோட்டத்தினுடைய சகல வ்ருக்ஷத்தின் கனியிலும், புசிக்கவே புசிக்கலாம். ௧௭ - வது ஆனால் நன்மை தீமை அறியத்தக்க வ்ருக்ஷத்தின் கனியிலே புசியாயாக, ஏனெனில், அதில் நீ புசிக்கிறநாளிலே சாவவே சாவாய் என்றார். ஐயா, இந்தவாக்கியத்தால் பராபரனாகிய கர்த்தர் மனிதனுடன் செவ்வையாய்ப்பேசி ஒரு ஏற்பாடும் சொல்லியதாகச் செவ்வையாய்த் தெரியவருகிறதல்லவா?

௫ - வது மோசே, முதலதிகாரம். ௫ - ௬ - ௮ - ௯ - ௧0 - ௧௫ - ௨௨ - ௨௮ - ௨௯ - ௩0 - வது வாக்கியங்களிலும் ஷை மோசே, ௩ - ம், அதிகாரம். ௯ - ௧௧ - ௧௩ - ௧௪ - ௧௭ - வது வாக்கியங்களிலும் மோசே முதலதிகாரம். ௧௨ - ௧௮ - ௨௬ - ௨௭ - ௩௧- வது வாக்கியங்களிலும், ஷை மோசே, ௨ - ம். அதிகாரம். ௨ - ௩ - ௧௯ - ௨௧ - ௨௨ - வது வாக்கியங்களிலும், ஷை மோசே, ௩ - ம், அதிகாரம். ௮ - ௨௨ - ௨௩ - வது வாக்கியங்களிலும், ஷை மோசே, ௫ - ம், அதிகாரம். ௨௯ - வது வாக்கியத்திலும், ஷை மோசே ௬ - ம், அதிகாரம் ௬-௮-வது வாக்கியங்களிலும் ஷை மோசே ௭ - ம், அதிகாரம். ௨ - வது வாக்கியத்திலும், மத்தேயு ௨௬ - ம், அதிகாரம். ௬௪ - ம், வாக்கியத்திலும் தாங்கள் தயவுசெய்து பார்த்தால் பராபரனாகிய கடவுளுக்குக் கண், வாய், முகம், தேஹமுதலான அவயவங்களெல்லா மிருப்பனவாய்ப் பரிஷ்காரமாய்த் தெரிந்துகொள்ளலாம். அப்படிக்கில்லாமல் நீங்கள் கடவுளுக்கு ரூபமில்லையென்று நினைப்பதுமல்லாமல் உலகத்திலுள்ள ஜனங்களுக்கும் போதிப்பது எவ்வளவுந் தகாதென்று சாதித்தார்.

அதற்குப் பாதிரியார் வாய்பேசாமலிருக்க, அவரைப்பார்த்து ஷை தாஸர், ஐயா, உங்கள் சுவிசேஷத்திலிட மிருந்தே எசுரக்ஷகரல்லவென்றும், பராபரனுக்கு மனிதனைப்போன்ற ரூபமுண்டென்றும் காட்டக்கண்டீரல்லவா! இன்னமந்தச் சுவிசேஷத்தைக்கொண்டே பராபரனுக்குப் பூஜை அல்லது ஆராதனை செய்யும் பக்தர்களுக்கு நெற்றியில் நாமமிருக்கவேண்டு மென்பதையும், நீங்கள் வேதமென்று நம்பிவைத்துக்கொண் டிருக்கிற சுவிசேஷம், கட்டுக்கதை யென்பதையும், சுவிசேஷத்தின்படியே, உங்களுக்குப் பரமண்டலங் கிடையாதென்பதையும், பரிஷ்காரமாய்க் காட்டுகிறேனென்று போதிக்கத்துணிந்தார்.

க - வது தெய்வவசன போதகராகிய யோவானென்பவருக்கு வெளிப்படுத்தின சுவிசேஷம் கச - ம், அதிகாரம். முதலாவதுவாக்கியம். பின்பு நான் பார்க்கையில், சீயோன், பர்வதத்தின் மேலே, ஆட்டுக்குட்டியையும் அதினுடன்கூட அவருடையபிதாவின் நாமம், தங்கள் நெற்றிகளிலே எழுதப்பட்டிருந்த (கசச000) பேர்களையும் நிற்கக்கண்டேன். ஷை சுவிசேஷம், உஉ - வது அதிகாரம் ௩ - ச - வது வாக்கியங்கள். பராபரனும் ஆட்டுக்குட்டியுமிருக்கிற ஆசனமே அதிலிருக்கும் அவருடைய ஊழியக்காரர் அவருக்கு ஆராதனைசெய்து அவருடைய சமுகத்தைத்தரிசிப்பார்கள், அவருடைய நாமம் அவர்களுடைய நெற்றியிலிருக்கும். ஐயா! இதினால் ஆட்டுக்குட்டியாகிய எசுவோடுகூட (கசச000) பேர் கடவுளுடைய நாமம் நெற்றியில் வைத்திருக்கிறதாகவும் பராபரனையும், எசுவையும், அவர்களுடைய ஊழியக்காரர்க ளாராதனை செய்யுங்காலத்திலுந் தரிசிக்குங்காலத்திலும் அவருடையநாமம் அவர்களுடைய நெற்றியிலிருந்ததாய்ப்பரிஷ்காரமாய்க் கண்டிருக்க, தாங்கள்நெற்றியில் நாமத்தை வைக்காமல் பாழ்நெற்றியுடனிருக்கிறதோடு நெற்றியில் நாமமிட்டிருக்கும் பகவத்பாகவதர்களைப்பரிஹாஸஞ்செய்து, நீங்கள் நரகமடைவதோடு உங்களுடைய வார்த்தையை நம்பிநடக்கும் ஜனங்களுக்கும், அக்கதியைச்சம்பவிக்கும்படி செய்யுந்தொழிலைவிட்டுத் தாங்கள் வாக்குதத்தம் செய்தபடிக்கு நாமம் வைத்துக்கொள்ள வேண்டுமென்பதாய், தாஸர்

ஸாதித்ததற்கு, பாதிரியார், நாமமென்பதாய்க் கண்டிருப்பது, நீங்கள் நெற்றியில் வைத்திருக்குந் திருமண்ணாகிய நாமமல்ல, பகவானுடைய பேராகிய நாமமென்பதாய்ச் சொன்னார்.

அதற்கு தாஸர்விடை. ஐயா! பகவானுடைய பேரென்னும் நாமம் அவர்கள்நெற்றியிலிருந்த தல்லாமல் திருமண்ணென்கிற நாமமிருக்க வில்லையென்பதாய்த் தாங்கள் சொல்லுகிறீர்களே! ஆனால் பகவானுடைய பேரென்னும் நாமமிவருடைய நெற்றியில் பச்சையென்னும் சாயத்தால் குத்தியிருந்ததா! அல்லது தங்கமலாங் கொண்டெழுதி யிருந்ததா! அல்லது எழுத்தாணியைக்கொண்டு வடிவுபடக்கீறி யிருந்ததா! அப்படிக்கெதுவாவது இருந்தால் எப்போதும் ஸார்வதமாக வல்லவா இருக்கவேண்டும், அப்படிக்கில்லாமல் சியோன் பர்வதத்தின்மேல் ஏசுமுதல் - (௧௪௪000) பேரும், பராபரனையும் ஏசுவையும் அவருடைய ஊழியக்காரர் தரிசிகுங் காலத்திலும் ஆராதனைசெய்யுங் காலத்திலும் நாமம் நெற்றியிலிருந்ததாய்க் கண்டிருப்பதல்லவா! அப்படிக்கே ஸ்ரீமத் ராமாநுஜ ஸித்தாந்த ப்ரவர்த்தகர்களாகிய பாகவதர்கள், அஸூத்தகாலங்களில் நாமம் நெற்றியிலில்லாமலிருந்த போதிலும் பகவத்பாகவதா சாரியர்களை, ஸேவிக்கப்போகும் காலங்களிலும் ஆராதிக்கும் காலங்களிலும் அகத்தியம் நெற்றியில் நாமம்வைத்திருப்பதுபோல், ஏசுவும் ஏசுவின் சிஷ்யர்களும், கடவுளைத்தரிசிக்குங்காலத்தில் நெற்றியில், நாமமிட்டிருந்ததாய்ச் சுவிசேஷத்திலெழுதியிருக்க அதைமறுத்து, பாழ்நெற்றியோடு இருக்கும்படியாய்ப் போதிக்கு முங்களுக்கு ஒருகாலும் நல்லகதிகிடையாதென்றே தேறும்.

ஐயா; பாதிரியாரே நெற்றியி லெழுதப்பட்டிருந்த நாமமென்றதினால் பகவான்பேரென்பதாய்த் தாங்களர்த்தஞ் செய்வது எவ்வளவுங்கூடாது. ஏனெனில்! நெற்றியிலெழுதப்பட்டிருந்தது நெற்றியில்வைக்கப்பட்டிருந்தது நெற்றியில்தரித்திருந்தது, நெற்றியிலிட்டிருந்தது, என்னும் பலவார்த்தைகளும் நெற்றியில் நாமம் வைத்திருந்ததற்கே அர்த்தமாகும்.

அதெப்படியென்றால் இந்தப் பாசுரங்களைப் பாருங்கள்.

மங்கலமாகிய நெற்றிவயிறு மணிமார்புகளம் வலப்பாலுந்தி, தங்கவலத்தோளதன்மேல் வயிற்றினிடப் பாகமிடத் தோடோளி ன்மேல், தங்கியசீர் வெரிந்பிடரி தலையாகும் பதின்மூன்றாய்ச் சா ற்றுந்தானம், இங்கிவற்றினுச்சிதவிர்ந் திடுவதுடனீ ரிருநாம மெழு துந்தானம். பெருங்குறிக ளீராறிற்பிடரிடங் கந்தரமூமுயர் பெரு மேற்றோள்கள், இரண்டுமொழிந் திடுந்திரும ணிருநாலாயெழுது வதற்கேற்றதானம்,திருத்தியதோள்களுமார்பு நெற்றியுமா றீரிரண் டாய்த் தீட்டுந்தானம், பொருந்தியநெற்றித்தலமேயொன்றாக வெ ழுதுவர் புண்டரத்தின்றானம். கிளரொளிசேர் புண்டரங்கள் பதின் மூன்றாயிடுமிடத்திற் கேசவாதி, வளமைமிகு நாமமெல்லா மந்திர ங்கள் வாசுதேவாந்தமாக, ஒளிகிளரும் புண்டரங்க ளீராறாயிடுமிட த்திலோதுநாமம், தெளிவுறுக்கேசவ னாதிதாமோதராந்தமு மந்தி ரங்களாகும். எனவும் (నాసికాయాస్తు యోదాని । నాసామూలం ప్ర చక్షతే । తధారభ్యలిఖేత్సమ్యక్ ౹ యుభకొశాఖాంతి) எனவும் வ ரும் இந்தப் பாசுரங்களாலும் ப்ரலோகத்தாலும் நெற்றியி லெழு தப்பட்ட நாமம் என்பது திருமண் காப்பென்று யாவரும் எளி தில் தெரியப்பரிஷ்காரமாய்த் தெரிவதோடு அந்த நாமமிடுங்கால த்தில் கேசவாதி தாமோதர பர்யந்தம் பகவன் மந்த்ரங்களே அந் தத்திருமண்காப்பல்லது வேறல்லவென்று தெரியவருகிற தல்லவா, இப்படிப்பட்ட பகவன் மந்த்ரங்களாகிய திருமண்ணை யார்தூஷிக் கிறார்களோ அவர்கள் ரௌரவாதி நரகங்களுக்கு ஆளாவார்களென் றதற்குப்போதுமான ஆதாரமுண்டு. அப்படிப்பட்டவிவரங்களோ டு சொல்லாமல் பகவன் நாமம் நெற்றியி லிருக்கக்கண்டேனென் றல்லது இடும்படியாகிய விதமும் அதின் மந்த்ரங்களும் அதினுல டையும் ப்ரயோஜனமும் நீங்கள் வேதமென்று நம்பிவைத்துக் கொண்டிருக்கும் சுவிசேஷபுத்தகத்தில் ஏன் எழுதப்படவில்லை என்பதாய்த் தாங்கள் யோசிப்பீர்களோ; ஐயா, இந்தச் சுவிசேஷ ம் வேதமல்ல ஶாஸ்த்ரமல்ல, புராணமல்ல, வேதஶாஸ்த்ர புராண ங்களா யிருந்தால் வேதத்தை யநுசரித்து ஶாஸ்த்ரமும், ஶாஸ்த்ர த்தை யநுசரித்துப் புராணங்களும் பேசும். இது அப்படிக்கில்லா மல் பல பல விதமாய்ப் பேசுவதும் லோகத்திலுள்ள ஆத்மாக்க

ர் கடைத்தேறப் போதுமான ஆதாரமும் வழியும் இதிலில்லாம
லிருப்பதும் யாதுகாரண மெனில்; ஏசு இறந்துபோன, ௨௫-௩௦
வருஷத்திற்குமேல், ௧ - வது மத்தேயு என்பவர், எழுதியபுத்தகம்
௧ - க்கு, அதிகாரம் ௨௮ - ௨ - வது மார்க்கென்பவர், எழுதிய
புத்தகம் ௧ - க்கு, அதிகாரம். ௧௬ - ௩ - வது லூக்காவென்பவர்
தெயோப்பிலு என்பவருக்கு அறிவிக்க எழுதிய புத்தகம். ௧- க்கு,
அதிகாரம். ௨௪ - ௪ - வது யோவானென்பவர், எழுதின புத்தக
ம். ௧ - க்கு, அதிகாரம் ௨௧ - ௫ - வது மேற்கண்ட லூக்காவெ
ன்பவர், எழுதின அப்போஸ்தலர் நடவடிக்கை புத்தகம். ௧ - க்கு,
அதிகாரம் ௨௮ - ௬ - வது அப்போஸ்தலராகிய பவுல், ரோமாபு
ரியாருக்கு எழுதிய நிருபம். ௧ - க்கு, அதிகாரம். ௧௬ - ௭ - வது
அப்போஸ்தல ராகிய பவுல், கொருந்தியருக்கு எழுதிய முதலாம்
நிருபம். ௧ - க்கு, அதிகாரம் ௧௬ - ௮ - வது அப்போஸ்தலராகி
ய பவுல், ஷை ஊருக்கெழுதின, ௨ - ம், நிருபம். ௧ - க்கு, அதி
காரம். ௧௩ - ௯ - வது அப்போஸ்தலராகிய பவுல், கலாத்தியர்க்கு
எழுதின நிருபம். ௧ - க்கு, அதிகாரம். ௬ - ௧௦ - வது ஷை பவுல்,
எபேசியருக் கெழுதின நிருபம். ௧ - க்கு, அதிகாரம். ௬ - ௧௧ -
வது ஷை பவுல், பிலிப்பியருக் கெழுதிய நிருபம். ௧ - க்கு, அதி
காரம். ௪ - ௧௨ - வது ஷை பவுல்; கொலோசருக் கெழுதின
நிருபம். ௧ - க்கு, அதிகாரம். ௪ - ௧௩ - வது ஷை பவுல், தெச
லோனிக்கேயருக்கெழுதின முதலாம்நிருபம். ௧ - க்கு, அதிகாரம்
௫ - ௧௪ - வது ஷை பவுல், தெசலோனிக் கேயருக்கெழுதின ௨-
ம். நிருபம் - ௧ - க்கு, அதிகாரம். ௩ - ௧௫ - வது ஷை பவுல், தீ
மோத்தேயுவுக்கெழுதின முதலாம் நிருபம். ௧ - க்கு, அதிகாரம்.
௬ - ௧௬ - வது ஷை பவுல், தீமோத்தேயுவுக் கெழுதின. ௨-ம். நி
ருபம். ௧ - க்கு, அதிகாரம். ௪ - ௧௭ - வது ஷை பவுல், தீத்துவுக்
கெழுதின நிருபம். ௧ - க்கு, அதிகாரம். ௩ - ௧௮ - வது ஷை ப
வுல், பிலேமோனுக்கெழுதின நிருபம். ௧ - க்கு, அதிகாரம். ௧ -
௧௯ - வது ஷை பவுல், எபிரேயர்க்கெழுதின நிருபம். ௧ - க்கு,
அதிகாரம். ௧௩ - ௨௦ - வது அப்போஸ்தல ராகிய யாக்கோப்பு
டைய பொதுவான நிருபம். ௧ - க்கு, அதிகாரம். ௫ - ௨௧ - வது

அப்போஸ்தல ராகிய பேதுருவின். க - ம், திருபம். க - க்கு, அதிகாரம். ரு - உஉ - வது அப்போஸ்தல ராகிய பேதுருவினு டைய பொதுவான உ - ம், திருபம். க - க்கு, அதிகாரம். ரு - உரு - வது அப்போஸ்தல ராகிய யோவானுடைய பொதுவான முதலாம் திருபம். க - க்கு, அதிகாரம். ரு - உச - வது அப்போ ஸ்தல ராகிய யோவானுடைய உ - ம், திருபம். க - க்கு, அதிகா ரம். க - உரு - வது அப்போஸ்தல ராகிய யோவானுடைய ரு-ம், திருபம். க - க்கு, அதிகாரம். க - உசு - வது அப்போஸ்தல ரா கிய யூதாவின் பொதுவான திருபம். க - க்கு, அதிகாரம். க - உஎ - வது அப்போஸ்தல ராகிய யோவான் என்பவர் எழுதின அறிவிப்புப்புத்தகம். க - க்கு, அதிகாரம். உஉ - ஆகக்கூடிய புத்த கம். சு - க்கு, திருபங்கள். உக - க்கும், கூடிய அதிகாரங்கள். (உகூ०) க்கும் கூடிய வாக்கியங்கள், எகூருகக - க்கும் கூடிய மொழிகள். கअஉருரு - க்கும் கூடிய எழுத்துகள் அரு அரு அ()-உள்ளன. இப்படியிருக்க; ஐயா, பாதிரியாரே இவைதாமா! வேதம். இவற்றைக்கொண்டுதானு மனிதர் உஜ்ஜீவிக்கிறது, பளா! பளா! நன்றாயிருக்கிறது.

ஜகத் ரக்ஷகனுகிய பகவான் வாக்யத்தாலுண்டாகிய வேதத் தை விட்டு மீன்பிடிக்கும் செம்படவர்களால் ஏற்படுத்திய மூன் ேறேடுபின்மாறு படுகின்றழுதேவிப் புத்தகமாகிய பைபில் என் றும் சுவிசேஷமென்றும் பேருள்ள இந்தக்கட்டுக்கதையைக்கொண் டா ஆதியில் நான் சொன்ன இருக்காதி வேதசாஸ்த்ர புராணங்க ளை எளிதஞ் செய்வது. ஐயா பாதிரியாரே ஐயா பாதிரியாரே இவ்வளவு தோன்றுத தங்களுடைய மந்தமதிக்கு யானென்ன சொல்வேன். ஐயா, அந்தக் கட்டுக்கதையாகிய சுவிசேஷத்தினி டமிருந்தே, அந்தச் சுவிசேஷம் வேதமல்லவென்று சொல்லுவத ற்குப் போதுமான அநேக சாக்ஷிகளிருப்பதால் அவற்றிற்சில சொல்லுகிறேனென்று சொல்லத் தொடங்கினர்.

ஐயா, பாதிரியாரே,-லூக்கா உ-ம், அதிகாரம். உரு - ம். வச னம் கர்ப்பந்திறந்து பிறக்கிற ஆணெல்லாம் கர்த்தருக்குப் பரி

சுத்தமானதென்று அழைக்கப் படுவதாகவென்று, கர்த்தருடைய ஞாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி ஷை லூக்கா, ௨௪ - ம். வசனம். அவர்களதைப் பராபரனுக்கு ஒப்புக்கொடுக்கும்படிக்கும் பராபரனுடைய ஞாயப்ரமாணத்தில் சொல்லி யிருக்கிறபடி ஒருஜோடு காட்டுப்புறவை அல்லது, ௨ - புறாக்குஞ்சுகளைப்பலியிடும் படிக்கும், பிள்ளையை எரிசிலேம்பட்டணத்துக்குக்கொண்டு போனார்கள். ஷை லூக்கா, ௨௭ - ம், வசனம். அவனந்த ஆவியினாலே ஏவப்பட்டுத் தேவாலயத்திலே வந்திருந்தான். அப்பொழுது ஏசுவென்னும் பிள்ளையை ஞாயப்ரமாண முறையின்படி செய்த தாய் தகப்பன்மார் அவனை உள்ளே கொண்டுவருகையில், ௨௮ - ம். வசனம். அவன் அவனைத்தன் கைகளிலேந்திக்கொண்டு பராபரனைத் தோத்திரித்துச் சொன்னது.

ஐயா, இந்த ௪ - வசனங்களில் ஏசுபிறந்தவுடன் அவர்தாய் தகப்பன்மார் பராபரன் அருளிச்செய்த ஞாயப்ரமாணப்படிக்கு அந்த ஏசுவை எரிசிலேம் பட்டணத்திற்குக் கொண்டுபோய் அவ்விடமுள்ள தேவாலயத்தில் ஏசுவுக்கு வேதசடங்கு நிறைவேற்றியதாய்ச் சொல்லியிருக்க, ஏசுவின் தாய்தகப்பன்மார் நம்பிவந்த வேதமெதுவோ! கர்த்தர் ஞாயப்ரமாண மெதுவோ! அதைக்கவனித்துப் பாராமல் அந்தச்சங்கதியைச் சொல்லிவரும் ஏசுவின் சரித்திர நூலாகிய இந்தச் சுவிசேஷ மென்னும் அநியாய ப்ரமாணத்தை வேதமென்று சொல்வது எவ்வளவுந்தகாது. ஆகையால் இந்தச் சுவிசேஷத்தாலேயேஏசுதேவனல்லவென்றும், அவரால் ரக்ஷிக்கக் கூடாதென்றும் பராபரனாகிய கடவுளுக்கு மனிதனைப்போல ரூபமுண்டென்றும், ஏசுவைநம்பிய உங்களுக்குப் பரலோகராஜ்யங் கிடையாதென்றும் பரிஷ்காரமாய்த் தெரியப்படுத்திய படியால், பூர்வம் அக்ஷோப்ய முனிக்கும் வித்தியா ரண்யருக்கும் உண்டானவாதத்தில் (అసినాతత్వమసినా। పరజీవప్రభేదినా । విద్యారణ్యమహారణ్యం। అక్షోభ్యమునిరచ్ఛినత్ ) என்றபடியே உங்கள்மதமாகிய இருளை இராமாநுச ஸித்தாந்தமாகிய ஸூர்யோதயத்தால் நீங்கிவிட்டபடியால், நீங்கள் முன்வாக்குதந்தம் செய்தபடி எங்களாசாரியர் திருவடிகளிலாச்ரயித்துப் ப

ஞ்ச ஸம்ஸ்காரஞ் செய்து கொள்ளுங்கோள். அவ்விதம் செய்து கொள்ளத்தப்பினால் மத்தேயு, எ - ம், அதிகாரம் ௨௧ - ம், வாக்கியத்திற் கண்டபடிக்கு உங்களுக்குப் பரலோக ராஜ்யங் கிடைப்பதில்லை. எப்போது பரலோகராஜ்யங் கிடைக்கவில்லையோ அப்போது நீங்கள் பிசாசமண்டல மடைவீர்க ளென்பதற்கு எவ்வளவுஞ் சந்தேகமில்லையென்று சொல்லி நிறுத்தினார். இதற்குப் பிரதியுத்தரம் பாதிரியார் சொல்லாமல் போய்விட்டார். ஆகையால் உண்மையான வேதத்தைக் கைசோர்ந்து, வேதமென்று நம்பிவைத்துக் கொண்டிருக்கும் பைபிலின் கருத்தின்படி நடவாமலும் இராமாநுசஸித்தாந்தத்தி லீடுபட்டிருக்கும் பாகவதர்கள் திருவடிகளி லபசாரப்படுவது மன்றி யவர்களிடத்தில் வாதித்து முடிவு சொல்லாமல் ஓடிப்போய், அமோக க்ராமங்களில் சென்றவ்விடமிருக்கும் மூடமதிகளுக்கு ஏதோதங்களுக்குத் தெரிந்த அண்டப்புளுகைப்புளுகி ஜாதிப்ரஷ்டத்துவம், மதப்ரஷ்டத்துவஞ் செய்பவர்களும்.

## தான்தோன்றிமதகுஞ்ஜரபஞ்ஜனி.

இப்போது தமக்குத்தோன்றினபடி ஒருமதத்தை ஏற்பாடு செய்துகொண்டு,ஸ்ரீமாந் பக்தவத்ஸலதாஸரும் அடியேனும்,பராங்குசர் திருவவதாரஹூ சகௗ௲௯-க்குச் சரியான பிரஜோத்பத்தி வருடம் ருஷபமீ சேலத்துக்கு விடைகொண்டிருக்க, அச்சமயத்தில் நாங்களிருக்கும் ஸ்தலத்துக்குச்சிலர் வந்து ப்ரஹ்மத்துக்கு ரூபமில்லையென்றும், விக்ரஹாராதனை செய்வது மூடத்தன்மை யென்றும், அப்படி பூசிப்பதில் ப்ரஹ்மத்தைப் பரிஹாஸஞ்செய்வது போலாகிறதென்றும், நெற்றியில்கண்டதைப் பூசிக்கொண்டு திரிவது அக்ரமமென்றும், ப்ரஹ்மத்தை மனத்தில் நினைத்தால் போதுமானது மேல் வேஷம் பூணுவதில் டம்பாகாரமே ஒழிய அதினால் யாதொரு பலனுமில்லை யென்றும், குருவென்பதாய் ஒருவனை ஆச்ரயிப்பது அவிவேகமென்றும், வேத

ஶாஸ்த்ரங்களெல்லாஞ் ஶாஸ்த்ரத் தப்பான கட்டுவாக்கியங்களென்றுந் தங்களுடைய யுக்தியே வேதமென்றும், வாதித்ததுமன்றி, ஶ்ருதி ஸ்ம்ருதி யிதிஹாஸ உபநிஷத்துக்களுக்கு அபார்த்தஞ்செய்தார்கள். இப்படிக்கே தங்களுக்குத் தோன்றியிருக்குந் துர்யுக்திகளை ஸகலருக்கும் போதித்து க்யாதிலாபபூஜையைப் பெற எண்ணங்கொண்டவர்களாய், பூர்வத்தில் நமது ராமாநுஜர் அறுஸமயங்களை ஹதஞ்செய்து ஸத்யமான விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்டினதுபோல் இக்காலத்தில் நாமும் ஒருமதத்தை ஸ்தாபிக்கலாமென்றதிகப்ரயாசையெடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இப்படிபட்ட மாயாவாதிகள் பூர்வத்தில் "தர்க்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்றசோம்பரும் சூனியவாதரும் நான்மறைகள், நிற்க்கக்குறும்புசெய் நீசருமாண்டனர்நீணிலத்தே, பொற்கற்பகமெம் மிராமாநுசமுனி போந்தபின்னே." என்று திருவரங்கத்தமுதனார் திருவாய் மலர்ந்தருளியபடி அடியோடுமாண்டு போயும், கலிதோஷத்தால் மறுபடியும், தான்தோன்றி மதஸ்தர்களாய் முளைத்துக்கொண்டு, ஶ்ருதி, ஸ்ம்ருதி யிதிஹாஸ புராணகமாதி ஸம்மதமாயிருக்கும் ஸத்யமான ஸித்தாந்தத்தைத் தங்களுடைய பேயுக்திகளால் நிஷேதித்துத் தங்களுக்குத்தோன்றியபடி, அநேகவிடங்களில் வாயாடிவர, அதை நம்பி ப்ரீதியுடன் ஸமீபத்தில்சேர்ந்து அவர்கள் ப்ரஸங்கஞ் செய்வதைக்கேட்டவர்களிற் சில விவேகிகள் ஸன்மார்க்கமா யிருக்குமென்று நினைத்து நாம் அவர்களைக் கனப்படுத்திக் கேட்கக்கேட்கக் கடைசியில் (కనకపుసింహాసనమున। శునకముగూర్చుండబెట్టి శుభలగ్నమునం। దొనరగబట్టముగట్టిన। వెనకటిగుణమేలమాను) என்றபடியேயிது தான் தோன்றிகள் க்யாதிபெறச்செய்து வரும் ப்ரஸங்கமிதுவென்றறிந்து, இவர்கள் முகத்தில் விழிக்கப்போகாது, வேதவிருத்தமான மார்க்கத்தைப் போதிக்கிறவர்களா யிருக்கின்றார்கள். பூர்விகர்கள். "కీడొసగెడిగురుడేలా। గాడిదెవాలంబుబట్టికాపేరిపద। గూడు నెగుండెలుపగలగ । జాడించదెరొమ్ముదన్న సంపంగిమన్నా" என்றபடி, கழுதைவாலைப் பிடித்துக் காவிரி நதியைக்கடக்க நினைத்தவர்களைப் போலாகும் இவர்களுடைய வார்த்தைகளை நம்பி இந்த மதத்தில்

பிரவேசிப்பவர்களுடைய கதியென்று நினைத்து "ஈயாடுவதோ கருடற்கெதிரே யிரவிக்கெதிர் மின்மினி யாடுவதோ, நாயாடுவதோ வுறுவெம்புலிமுன் நரிகேசரிமுன்நடையாடுவதோ, பேயாடுவதோ வழகூர்வசிமுன் பெருமான் வகுளாபரணன் னருளால், ஓயாதுணாயா யிரமாமறையினொருசொற்பெறுமோ உலகிற்கவியே." என்று ஸங்கத்தார் கூறியபடிஇந்தத் தான்தோன்றிக ளெவ்வளவு குயுக்திகள் செய்து இந்தமதத்தை நிலை நிறுத்தினபோதிலும், நமதாழ்வாராசாரியர்கள் ஸ்தாபித்த ஸித்தாந்தத்துக்குச் சமமாகாதென்று அம்மதத்தை நிக்ரஹித்தார்கள். ஷை தான்தோன்றி மதஸ்தர், ஒரு ஆதாரமுமில்லாமல் வாதிக்கத்துணிந்து பாகவதாபசாரங்களுக்கு ஆளாவதுமன்றிப் பகவானுக்குந் த்ரோஹிகளுமாகிறார்களே; ஐயோ! இந்தப்புத்திஇவர்களுக் கெவ்விதமாய்ச் சித்தித்ததோ, தெரியவில்லை! ஒருமதத்தை நூதனமாய்க்கற்பிக்க எண்ணங்கொண்டு செய்தால் அது ச்ருதி ஸ்ம்ருதி யுக்திகளுக்கும் பொருத்தி யிருந்தாலல்லவா அநுபவத்துக்கு வரும். அப்படிக்கில்லாமல் தங்களுடைய யுக்தியே விசேஷமென்றும், அதுவே வேதமென்றும் சொன்னால் யார் நம்புவார்கள். அது அந்த வேதத்துக் கொக்குமா! (శృతిస్మృతీ మమైవాజ్ఞా। యస్తాముల్లంఘ్య వర్తతే। ఆజ్ఞాచ్ఛేదీ మమద్రోహీ) என்றிருக்கும் பகவத் ஸ்ரீஸூக்திகளுக்கு விருத்தமல்லவா! இவர்கள் பகவானுக்கு த்ரோஹிகளென்றும் வேதபாஹ்யரென்றும், விவேகிகளுக்குத் தெரியாமல் போகாது. வேதத்தில் (యథోర్ణనాభిస్సృజతే గృహ్ణతే చ । తథా పృథివ్యామోషధయస్సంభవంతి। యోఽసావజితో విష్ణుస్సత్వగుణప్రవర్తకో భవత్ । తస్యనాభేర జాతాత్స్వయంభూః తథా తస్య భ్రువోఽంతరాళాత్ । తమోరుద్రః ప్రాదురభవత్) என்று யஜுர்வேதாரணத்தில் ஸர்க்காதியென்று லோகஸ்ருஷ்டியைச்சொல்லும் ச்ருதியில், ஊர்ணநாபி என்கிறசிலந்திப்பூச்சியானது, எவ்வளவு காலத்தில் தன் வாயிலிருந்து நூலை ஸ்ருஷ்டித்து மறுபடியும்க்ரஹிக்கின்றதோ அவ்வளவுகாலத்தில் விஷ்ணுவானவர் இந்தப் பூமியையும், அதிலுள்ள மனுஷ்ய பசுபக்ஷிகளையும், அவற்றுக்கு ஆஹாரங்களையும், படைத்தார். அவர் தம்மையொழிந்தயாவராலும் பூஜிக்கப்பட்டு ஸாத்விக குணத்தையுடையவரென்றுபரஸ்

பரஞ்சோதிக்கொன்றும்தன்மையுடையவர். அவருடையநாபீக மலத்தில் ராஜஸனான ப்ரஹ்மா பிறந்தான். அப்படியே அந்தப்ரஹ்மாவின் புருவங்களின் மத்தியில் தாமஸனான ருத்ரன் பிறந்தான் என்றும், சாந்தோக்கிய உபநிஷத்தில் (కేయూరవాన్ మకరకుండలవాన్ కిరీటీహారీహిరణ్మయవపుః ధృతశంఖచక్రః తస్యయథా కప్యాసం పుండరీకమేవాక్షిణీ ,, என்றதில் இந்த நாராயணன் கேயூர மகர குண்டல கிரீட கௌஸ்துவாபரணங்களை யுடையவனென்றும், அப்ராக்ருத பஞ்சோபநி ஷின்மயமான திருமேனியையுடையவ னென்றும், தாமரை மலர்போன்ற திருநயனங்களையுடைய நாராயணனென்றும் ப்ருதிசொல்லி யிருப்பதால், ரூபமிருக்கிற தென்று பரிஷ்காரமாய்த் தெரியவருகிறது. ஆதலால் ப்ரஹ்மத்துக்கு ரூபமில்லையென்று சொல்லும் பக்ஷம் நிரஸ்தமாய் விட்டது. மற்றொரு ப்ருதியில், (యో బ్రహ్మాణం విదధాతి పూర్వం । యో వై వేదాంశ్చ ప్రహిణోతి తస్మై) என்றதில் யாவனொரு நாராயணன் ப்ரஹ்மாவைப் படைத்து அவனுக்கு வேதங்களை உபதேசித்தானென் றிருப்பதாலும், அந்த ப்ரஹ்மா தன்னால் படைக்கப்பட்டவர்களுக் குபதேசிக்க, அப்படிக்கே, இதுவரையில் ஒருவரைப்பற்றி ஒருவருக்கு உபதேசங் கிடைத்துக்கொண்டுவந்திருக்கின்றன. பூர்வத்தில்ஓரான் வழியா யுபதேசம்பெற்றுஅநந்தமஹிமைகளையுடையவர்களாய்ப் பகவானைச்சேவித்துஅவனை யடைந்ததாய் அநேகஶாஸ்த்ரங்களால் தெரியவருகிறதுமன்றி,இக்கலியுகத்தில்அநேகபக்தர்களுடையசரித்ரங்களாலும் அவர்க ளெழுந்தருளியிருந்த விடங்களில்நடந்துவரும் க்ரியைகளாலும், அவர்கள் செய்திருக்கும் கைங்கர்யங்களாலும், இன்னுமநேக மஹிமைகளாலும் அவர்க ளநுஷ்டித்த ப்ரகாரம் இப்போது அநுஷ்டிக்கும் மஹான்களாலும் சத்கதியடைந்துப்ரஸித்தமாய்த் தெரியவருகிறது. தாமரைக்கமலத்தின்ஸமீபமாய்வஸிக்கும் மண்டூகம் அத்தாமரையினது மஹிமையைஅறியாததுபோல் அவிவேகிகளானவர்கள், ஆர்யரையடுத்தடிமை செய்து அப்பிரஹ்மத்தி னானந்தமார்க்கம் சேர வழியறியாமல் ஆஹார,நித்திரை, மைதுனங்களி லாசைவைத்து, அல்பஸுகத்தை யாநந்தமென்

றெண்ணிச் சோம்பேறிகளாய்க் கெடுவதுமன்றி, வேதஶாஸ்த்ரங்களைப் பொய்யென்றும், தங்களுடைய யுக்திகளே நிஜமென்றும் நம்பி யிருக்கின்றார்களே, இவர்கள், ப்ரஹ்மத்தை எவ்விதமாயடைவார்களோ! அதைப் புத்திமான்களே யோசிக்கவேண்டும். ஸாதாரணமாய் உலகத்தின் பழமொழியாகிய "தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வாராது" என்றதை ஏன்யோசிக்கவில்லையோ! இதுவுமன்றிக்கே, இவர்கள் ஜன்மிக்கும்போதே, இவ்வளவு வாயாட்டத்துடன் ஜன்மித்தார்களா, பால்யதாரப்யா க்ரமக்ரமேண தாய்தந்தைகள் புருஷகாரிகளாய் வார்த்தைகளை கற்பித்தபின்பு வித்யாஶாலை யுபாத்யாயரொன்றும் புருஷகாரி வித்தை கற்பித்ததினாலல்லவா, இவ்வளவு வாயாடத்துணிந்தார்கள். இதையுணராமல், ஆசாரியன் வேண்டியதில்லையென்று சொல்லும் மந்தமதிகள் பக்ஷம் ஸூர்யனைக்கண்ட பனிபோல் நீங்கிவிட்டது.

ப்ரஹ்மாவைப் படைத்து வேதங்களை யுபதேஶித்த ஸ்ரீமந்நாராயணனே, த்வாபரயுகத்தில், விபவாவதாரமாகிய கண்ணபிரானாய்ப் பாரதத்தில் அர்ஜுனனுக்கு உபதேஶித்த ஸ்ரீ கீதையில் (ఏయథామాంప్రపద్యంతే । తాంస్తథైవభజామ్యహం) பஞ்சலோஹத்தால் ப்ரதிஷ்டைசெய்து எந்தப்ரகாரமாக என்னையாராதிக்கிறார்களோ அந்தப்ரகாரமாக நான்ஸேவை ஸாதிக்கிறேனென்று ஸாதித்திருக்கிறார், ஶ்ருதியில் (త్రేధాహిజ్ఞానినోభవంతి । అంతర్ద్రష్టారో । బహిర్ద్రష్టారోపరద్రష్టారశ్చేతి) அந்தர்முகமாச்சேவிக்கவும் பஹிர்முகமாய்ச் சேவிக்கவும் விபவ அர்ச்சாவதாரங்களை ஸேவிக்கவும்மூன்றுவித ஜ்ஞானிகளிருக்கின்றார்களென்றும்மற்றொரு வுபநிஷத்தில் (అంభస్యపారే, భువనస్యమధ్యే, నాకస్యపృష్ఠే, అణో రణీయాన్మహతోమహీయాన్) என்றதில், க்ஷீராப்தியில் அர்ச்சாவதாரங்களுள்ள பூமியின்மத்தியில் ஆகாஶத்தின்மீது பரமபதத்தில் அணுவான ஆத்மாக்களி லணுவாயும் மஹானென்கிற பூமியில் மஹத்தான ராமக்ருஷ்ணாதி அவதாரங்களாயு மெழுந்தருளிய அர்த்தத்தை ஆழ்வாரும் "விண்மீதிருப்பாய் மலைமேல்நிற்பாய் கடல் சேர்ப்பாய், மண்மீதுழல்வாய வற்றுளெங்கு மறைந்து

றைவாய்." என்று திருவாய் மலர்ந்தருளினார். ருக்வேதம் இரண்டா மஷ்டகம், இரண்டாமத்தியாயம், உச - உரு - ம். வர்க்கத்தில் (ప్రతి ... తం యస్య ... ) என்றதில் அதிஶாஶ்ரளு யிருக்கிற விஷ்ணுவை அர்ச்சனை செய்யென்றும், ருக்வேதம் விஷ்ணு ஸ்ப்ருகத்தில (... ) என்றதில் சித்ர விக்ரஹ ரூபமாயிருக்கிற அவதாரங்களை அர்ச்சனை செய்யவேண்டுமென்றும் சொல்லி யிருக்கிறது. அதனர்த்தம், தைத்திரீயோப நிஷத்தில் ஸ்பஷ்டமாயிருக்கின்றது, அதாவது (రుద్రంప్రపద్యే ... తంప్రపద్యే) என்று சொல்லியிருக்கிற விடத்தில் முதலிலே பரமபதநாதனை ப்ரபத்தி பண்ணுகிறேனென்று சொல்லி (అన్నమయంప్రపద్యే) என்றதில் ஶிலாரூபமாயிருக்கும் அர்ச்சாவதார எம்பெருமானை ப்ரபத்தி பண்ணுகிறேனென்றும், சொல்லியிருக்கிறது; இதுவுமன்றி, இராமோப நிஷத்தில் (క యం భగవానిహంత్యకాలేభవభయతారకతారకంప్రబోధమి) என்று இராமமந்திரத்தைக் காஶியிலிருக்கு மவர்களுக்குஉபதேசஞ் செய்யும்படி, சிவனுக்குப்பகவானுபதேசித்து (తత్రైవ) அதில் தானே (అపి ... క్షేత్రే సర్వేషాము ... సిద్ధయే । అహంసనిహిత స్తత్ర । పాషాణప్రతిమాదిషు । క్షేత్రేస్మిన్మోచయే దేత్ భక్త్యా । మంత్రేణానేనమాంశివ । బ్రహ్మహత్యాదిపాపేభ్యో । మోక్షయిష్యామిమాశుచః) உன்னுடைய காஶிக்ஷேத்ரத்தில் யாவருக்கு முக்தி கொடுக்கும்பொருட்டுச் சிலாரூபமாய் ஸமீபத்திலிருக்கிற என்னை மந்திரத்தினாலே பக்தியுடன் அர்ச்சிப்பவர்களுக்கு, ப்ரஹ்மஹத்யாதி பாபங்களில் நின்றும் விடுவித்து முன்னே சிவஸாயுஜ்யத்தையும், ப்ரஹ்மாவின் ஸாயுஜ்யத்தையுங் கொடுத்துக் கடைசியில் என்னுடைய மோக்ஷத்தைக் கொடுக்கிறேன் பயப்படாதே என்றருளிச் செய்தார். ஸ்ம்ருதியில் (భగవాన్ పవిత్రం భగవత్పాదోదకంపవిత్రం తత్పూతేనాన్యచమనం యథాహిహాస్మేషుతి) என்றதில் அர்ச்சாவதாரமான எம்பெருமான் பரிஶுத்தன். அவன் ஸ்ரீபாததீர்த்தம் பரிஶுத்தம் அம்ருதமயமான ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகரிக்கை பரிஶுத்தமென்றால், ஸ்வீகரிக்குமவன் பரிஶுத்தனென்பதுபொருள். இப்படிக்கு அநேக

ஶ்ருதி வசனங்களும் அவற்றின் விவரம் ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதிகளிலும் பரிஷ்காரமாயிருக்க, வேதத்தில் அர்ச்சையைப்பற்றிச் சொல்லவில்லை ஆகையா லர்ச்சாவதாரத்தை வணங்கப்போகாதென்றும், ஒருக்கால் மானஸிகமாய்த் தியானித்தால் போதுமென்றுஞ்சொல்லி அநேகரை மயங்கச்செய்யு மவர்கள் விஷயமாகப் புராணாந்தரத்தில் (విష్ణుపూజావిహీనస్య । దంతచేష్టంఫలతంస్మృతం । తపస్స్వాధ్యాయతాంవ్యాపి । ప్రేతాలంకారవద్ద్విజః) என்றதில் விஷ்ணுபூஜை செய்யாதவன் யஜ்ஞயாக தபோத்யானங்களைச் செய்வதெல்லாம் நிஷ்பலமென்றும், அது ப்ரேதத்துக்குச்செய்த அலங்காரம்போ லாகுமென்றுஞ் சொல்லியிருக்க, அர்ச்சாவதாரமா யிருக்கும் பகவானை ஆராதித்தால் ப்ரயோஜனமில்லை, நம்மைப் பரிஹாஸஞ்செய்கிறானென்று தண்டிக்கும் ப்ரஹ்மமென்று சொல்லு மவர்களைக் குறித்து வ்யஸனப் படலாயிற்று.

இஃது இப்படியிருக்க,இச்சகத்திற் செந்நிறத்தை யுடைய குன்றுமணி தன்னடியிலிருக்குங் கருமையை யறியாமற் பிறரைநோக்கித் தன்போலில்லையென்று புன்முறுவல்செய்து பரிஹாஸிப்பதுபோல் தான்தோன்றி மதவாதிகள், தங்குற்றத்தைச் சற்றேனும் யோசித்துப் பாராமல் (అసూయాసక్తేనదోషారోపి) என்கிறபடியே அஸூயாபிமானங்களால் தேவாலயங்களுக்குப் போகக்கூடாதென்றும்,அவ்விட மெழுந்தருளியிருக்கும்அர்ச்சாவதாரமானஎம்பெருமானுக்கும்,கல்முதலியவற்றுக்கும்பேதமென்னவென்றும், ஸர்வத்தையும் ஸமமாக எண்ணி ஸமதரிசநம் பண்ணுமவர்களுக்குக்கடவுளெங்கு மிருக்கிறானென்றும், சொல்லுகிறார்கள். இவர்கள், அன்னத்தையும்அமேத்யத்தையும்,பாலையும்,பாஷாணத்தையும்,கற்கண்டையும், வேம்பையும், சுகந்தத்தையும்,துர்க்கந்தத்தையும்,மாதாவையும், மனைவியையும், சமமாக எண்ணி நடக்கிறார்களா! அப்படிக்கில்லையே, அஜ்ஞானசம்பந்தத்தால் வர்ணாஶ்ரம தர்மங்கள் அழியமாறும்படி சரியான மதத்தைவிட்டுத் தங்களுக்குத் தோன்றினபடி துர்மதத்தில் ப்ரவேசிக்க அதிகஸுலபமாய் ஸாத்யப்பட்டிருப்பதால் இவைகளைச் சமமாகப் பார்க்கிறோமென்று வர்த்திக்க எண்ணங்கொண்டு தங்களுக்குச் சாத்யப்படாமலிருக்கு மவைகளை

ஸமமாக எண்ணங் கொள்ளாமல் வர்த்திக்கிறார்களல்லவா. மேல் கண்டவைகளைச் சமமாகவெண்ணி வர்த்தித்தால் இவர்கள் வாதம் உண்மையென்று நாமெல்லோரும் நம்பலாம், இதுவுமன்றிக்கடவுளெங்கு மிருக்கக் கோவிலுக்குப் போவானேன்! கடவுளை யெங்கும் தியானிக்கலாமென்று சொல்லுகிறார்கள். இப்படிசொல்லு மவர்கள் அசிங்கவிடத்திலும் ஜலதாரையண்டையிலும் மற்றும் அசுத்தமான இடத்திலும் சட்டமாய் உட்கார்ந்துகொண்டு தியானிக்கிறார்களா! அதற்கென்றோர் விலக்ஷணமான இடம் ஏற்படுத்தி நாலு இரண்டு பேர்களைக் கூட்டிக்கொண்டு ப்ரஸங்கஞ் செய்வானேன்! இவர்களுக்குக் கடவுளெங்கு மிருக்கிறாரென்ற நிச்சய ஜ்ஞானமிருக்குமேயாகில் தியானிக்க விலக்ஷண ஸ்தானங்களை யேற்படுத்தவுமாட்டார்களே! அந்நத்தையும் புசிக்கமாட்டார்களே! ஜலத்தையும் குடிக்கமாட்டார்களே! காலையுங் கழுவவும் நேரமிராதே! நடக்கவுமாட்டார்கள், படுக்கவு மாட்டார்கள், தம்மனைவியரிடத்திலுங் கூடமாட்டார்கள். ஏனெனில் ஒருவருங்காணதபடி புணர்ச்சி செய்பவர்கள்கடவுளெங்கு மிருக்கிறாரென்கிறநிச்சயஜ்ஞானம்தங்களுக்கிருப்பது உண்மையேயானால் காமம் தலைக்கேறி ஸ்திரீயைத் தழுவி இலச்சையில்லாமல் புணருவார்களோ? அந்தநிச்சயஜ்ஞானமிவர்களுக்கு வந்திருந்தால், இக்காரியங்களை இவர்கள் ஏன்செய்கிறார்கள், இவர்கள் சொல்வதெல்லாம் எப்படியிருக்கின்றதென்றால் "ஒருவன் புராணத்தை வாசிக்கும்போது அங்கிருந்து கேட்குமவர்களுக்கெல்லாம் சுரைக்காயின்பேரில் தோஷாரோபணஞ்செய்து சுரைக்காயைப் புசிக்கப்போகாதென்று போதித்து வீட்டில்தனக்குச் சமைத்துவையாமையால் தன்மனைவிக்கு நான் ஏட்டுச்சுரைக்காயைப்புஜிக்கப் போகாதென்று இதுவரையிலும் போதித்தேனே அல்லது ஓட்டுச்சுரைக்காயைப் புஜிக்கக்கூடாதென்று நான்சொல்லவில்லையே, ஓட்டின்மேலுள்ள சுரைக்காயைப் பறித்துவந்து சமைத்துவையடியென்று சொல்வதைப்போலிருக்கின்றது. (ஸர்வத்ர ஸமதர்சநஃ) என்றுநாங்கள் எல்லாவற்றையும் ஸமமாகப்பார்க்கிறவர்களாகையால் எங்களுக்குக்கடவுள் எங்குமிருக்கிறாரென்று சொல்லி அர்ச்சாவதாரங்களை வணங்கப்போகாதென்று தோஷா ரோப

ணம் செய்கிறார்களே. செய்தநன்றி மறவாதபுத்திரர்கள் தங்கள் தாய் தந்தையர்களைப்போலச் சித்திரப்படங்களை எழுதிவைத்துக் கொண்டு அப்படங்களைக் காணும்போதெல்லாம் அவர்கள் தங்களுக்குச் செய்துவந்த உபகாரங்களை நினைத்துக் கண்ணீர்பெருக, அத்தாய்தந்தையர்கள் செய்தமஹோபகாரத்துக்குப் ப்ரதியாது செய்தோமென்று ஏங்கி மனம் நைகின்றார்களே. ஒருவன்தன் கருத்துக்கிசைந்து நடந்துவந்த நல்லமனைவியினிடத்திலும் அப்படியே மனம் உருகுகின்றான். தன்னால்விரும்பப்பட்ட ஒரு யௌவன ஸ்திரீயினுடைய பந்துவர்க்கத்தாருக்கு எவ்வளவோ உபசாரஞ் செய்து வருகிறான், இம்மட்டோ! அவள் கூந்தலிலதரித்தமலர்மாலையையும், கொடுத்தனுப்பும்தாம்பூலாதிகளையும்எவ்வளவோபெருமையாக நினைத்துக்கொள்ளுகிறான். கர்மஸம்பந்தத்தால் வந்த உறவினர் விஷயத்தில் இவ்வளவுசெய்துவிட்டு, ஸர்வ விதத்தாலும் தாய் தந்தைமுதலிய பந்துவாயும், மஹோபகாரியாயுமுள்ள கடவுளின் விக்ரஹமுதலியவற்றைப் பூஜிப்பதோ குற்றமாய் முடிந்தது. தான்தோன்றிகள் ப்ரஹ்மத்துக்குச் சமம் ஆமென்னும் பொருள்படும் குத்திரமத்துக்கு மூலபுருஷனைப்போல் ஒருசித்திரபடத்தைத் தங்களுடைய சவக்கூடத்தில் தொங்கவிட்டுத்தியானம் பண்ணுவார்களானால் அதைக் கேள்விபட்ட மூலபுருஷனுக்குச் சந்தோஷமாயிருக்குமா! இராதா! அல்லது அப்படத்தைத் தொங்கவிட்டு அகௌரவஞ் செய்துவர அதைக்கேள்விப்பட்டு வெறுப்புண்டாகுமோ! இராதோ! பலலாயிரகோடி அண்டங்களுள் ஓரண்டத்தில் ஒருதேசத்தில் ஓரிடத்தில் கிஞ்சஜ்ஞனாகிய மனிதனுக்கு இப்படியிருக்குமானால் ஸர்வாண்டங்களையுஞ் ஸ்ருஷ்டித்து எங்கும் வியாபகமாயிருக்கிற சர்வஜ்ஞனாகிய கடவுளுக்கு விக்ரஹாராதனையினால் வெறுப்புண்டாகுமோ! விக்ரஹாராதனை கூடாதென்னும் பரங்கிமத வாதிகளும், (மன்றோ முதலிய சில்கனவான்களுடைய உருவங்களைச் செய்துவைத்து, ஒவ்வொருகாலத்தில் அவ்வுருவத்துக்கெதிரில் (ஜெனல்ஸாலியுட்) செய்துவருவது உபகாரஸ்மிருதியன்றோ. இந்த உபகாரஸ்மிருதி கடவுளுக்குமாத்திரந்தான் செய்யக்கூடாதோ! இந்த ஒருவிஷயத்தில்தானே இத்

தான்தோன்றிகளுடைய புத்திசாமர்த்தியத்தைச் ஸூக்ஷ்ம க்ராஹிகள் தெரிந்துகொள்ளலாம். இவர்கள் எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்கும் எங்களுக்குக் கடவுளொருவரிருக்கிறாரென்று சொல்லி அர்ச்சாவதாரத்தில் தோஷாரோபணஞ் செய்யும்போது கடவுள் அந்த அர்ச்சைகளில் இல்லையென்பதாகவே ஸ்பஷ்டமாய்த் தெரிகின்றது, அப்போது ஈச்வரனுக்கு ([illegible]) என்றிருக்கும் ப்ரமாணங்களுக்கு நேர்விரோதமாய் இருக்கின்றதல்லவா! ஐயோ! இத்தான்தோன்றிகளுக்கு ஏன்தோன்றவில்லையோ! ஆனால் ஈச்வரனுக்கு எல்லாஞ் சரீரமாயிருந்து அவன் ஸர்வாந்தர்யாமியா யிருக்க, அர்ச்சாவதாரங்களில் மாத்திரம் ப்ரதிபத்தி செய்வானேனென்றாலோ! ஸூர்யனுடைய சுடரெங்கும் வியாபித்திருந்தபோதிலும் அதனியற்கை ஸகலருக்கும் ஸூர்யகாந்தக்கல்லுகளில் அதிகமாகக் காணுகின்றது; அவ்விதமாகவே ஈச்வரனெங்கும் நிறைந்திருந்தபோதிலும் அறிய ஸாத்யப்படாமையால் அர்ச்சாவதாரத்தில் ப்ரணவமந்த்ரத்தை ஆவாஹனஞ்செய்து வணங்கும் பக்தர்களுக்கெல்லாம் அவ்விடத்தில் தானே ஈச்வரன் அதிகக்ருபையுடன் ஸேவைஸாதித்து ஸகல அபீஷ்டங்களையும் நிறைவேற்றுகிறான். ஆகையால் ஸகலரு மர்ச்சாவதாரத்தில் ப்ரதிபக்தி செய்துவருகிறார்கள். இப்படிப்ரதிபக்தி செய்யுமவர்களை ஆக்ஷேபித்து அர்ச்சாவதாரத்தில் தோஷாரோபணம் செய்வதை யோசிக்குமளவில் பால்பழஞ் ஸர்க்கரைமுதலானவைகள் தோஷரஹிதமாய் ஸகலருக்கும் போக்யமான வஸ்துக்களாயிருக்க, ஜ்வரபீடிதனுக்கு அவைகளெல்லாம் அபோக்யமாய்த் தோற்றி விஷமாயிருக்கின்றனவென்று தோஷாரோபணஞ் செய்வதைப்போலிருக்கின்றது. தான்தோன்றிகள் ஸகலரு மர்ச்சாவதாரத்தை வணங்கி ஸகல வனுபவங்களுடன் ஸுகித்துக்கொண் டிருக்க, மேற்கண்ட ஜ்வரபீடிதனைப் போல் ([illegible] த்ருஷ்ட்யநுஸாரிணீ)என்கிறபடியே தங்களின் கருமானுஸாரத்தால் தோஷா ரோபணஞ் செய் கிறார்களென்று புத்திமான் களுக்குத் தோன்றாமற் போகாது.

தர்ப்பணமானது முதல் ம்ருத்துவாயிருக்கையில் அதில்பரா—

பகுதி, வ்ருக்ஷஸ்வரூபங்களொன்றுந் தோன்றாமலிருக்க, அந்தம் ருத்தனை யெடுத்து உருக்கி நல்ல சதுர்ப்பலகையாகச் சாய்க்க ப்பின்பதில் பின்னஸ்வரூபங்களாகத் தோணுகையில அதற்குப்பி லிஷ்க்கம் ரஸத்தைச்சேர்க்கப் அதில் எவ்விதமாய் யாவத் ஸ்வரூ பங்களும்தோன்றுமோ அதுபோலவும், கடிகாரமானது முதலில லோஹமாயிருக்க அதைக்கொண்டுசிறியசக்கரங்களாகவும் பெரிய சக்கரங்களாகவுமின்னுமதற்கு வேண்டியஉபகரணங்க ளாகியஆணி முதலானவைக ளாகவுஞ்செய்து பின்பு அவைகளுக்கு எந்தெந் தச்சூத்திரங்களை யெந்தெந்த இடங்களில சேர்க்கவேண்டுமோ அ ந்தந்த விடங்களில் அந்தந்தச்சூத்திரங்களைச் சேர்த்தபின்பு தக்க காலங்களில் மணிகள் தவறாமல் எவ்விதமாய் அடித்துக் கொண்டு வருகிறதோ அவ்விதமாகவே முதலில கிரயவிற்கிரயங்களுக்கு அர ஹமான ஸ்வர்ண ரஜித தாம்ப்ராதிகளை யுருக்கி வேதப்ரமாணப் படி கேயூர மகரகுண்டல கிரீடாதி யுக்தமாய், ஸில்ப ஸாஸ்த்ரப் படி விக்ரஹரூபமாக அமைத்துத் தர்பணத்துக்குச் சத்தைச் சேர்ப்பதைப் போலும் கடிகாரத்துக்குச் சூத்திரங்களைச் சேர்ப் பதைப்போலும் செய்யுங் க்ரமங்களுடனதில் ப்ரணவமந்த்ரத்தை ஆவாஹனஞ்செய்து அர்ச்சித்து வணங்கிவர ஈஸ்வரஸ்வரூப ரூப குணவிஸேஷங்கள் அவ்விடத்தில்தானே அனுபவிக்கப்படும். இவ் விதமாகவே அனுப விக்கலாமென்று ருத்திர, பராசர, வ்யாஸ, ப்ராசேதஸ,வைஸம்பாயன,போதாயன, ஸுக, ஸௌனக, பார த்வாஜ, கர்க, ஸாண்டில்யாதி பரமரிஷிகளெல்லோரு மர்ச்சாவதா ரங்களை யர்ச்சித்து ஈஸ்வர ஸ்வரூப ரூபகுண விசேஷங்களை அனு பவஞ்செய்து ஸகலரையுந் தங்களைப்போலவே அர்ச்சாவதாரங்களை யர்ச்சித்து வணங்கி ஈஸ்வரானுபவஞ் செய்யும்படி அநேக ஸாஸ் திரங்களால் போதித் திருப்பதைப்போலவே யிதுவரையில் யாவத் மதஸ்தர்களினு மர்ச்சாவிதி நடந்தேறி வருகிறது.

இதுவுமன்றி அவரவர்களுடைய அபீஷ்டப்ரகாரம் அநேக மஹான்கள் அனுபவங்களாய்க் கொண்டுவர, (அப்ப மெப்ப டி சுட்டாளோ, அதில் தித்திப்பு எப்படி நுழைத்தாளோ)என் று ப்ரமிப்பாரைப்போல் ப்ரமித்தும், அகக்கண் புறக்கண் கெட்ட

புத்தி ஹீனர்களான இத்தான்தோன்றிக ளர்ச்சாவ தாரங்களில் தோஷா ரோபணஞ்செய்து அர்ச்சித்து வணங்கக் கூடாதென்பது எந்நூல் படித்தவிதமோ தெரிகிலேன். ஆனால் மேற்கண்ட [illegible] ர்களைக் காட்டிலும் இத்தான்தோன்றிகள் அதிகமோ! ஸாரதாபீடமோ! கல்விக்கடலோ! கற்பனைக்களஞ்சியமோ! ஞானமணிவிளக்கோ! ஆதித்யஅம்பமோ! அவதார புருஷரோ! என்றிப்படி நினைக்கலாமென்றாலோ இவர்க ளவர்களைப் போலல்லரே! ஏன் அவர்களைப்போ லல்லரென்றால் அவர்கள் ஸர்வகாலமும் (జిహ్వే కీర్తయ కేశవంమురరిపుం । చేతో భజ శ్రీధరం । పాణిద్వంద్వ సమర్చయాచ్యుతకథాం । శ్రోత్రద్వయంత్వంశృణు । కృష్ణంలోకయ లోచనద్వయహరేర్గచ్ఛాంఘ్రియుగ్మాలయం । జిఘ్రఘ్రాణముకుంద పాదతులసీం । మూర్ధన్నమాధోక్షజం) என்றும் (గోవిందేతి సదా స్నానం । గోవిందేతిసదాజపం । గోవిందేతిసదాధ్యానం । సదాగోవింద కీర్తనం) என்றும் ஸகலேந்த்ரியங்களையும் ஈச்வரன் விஷயத்தில் தானே வினியோகித்துத் தங்களுடைய காலத்தையெல்லாங் கழித்தார்கள்.

இத்தான்தோன்றிக ளிருப்பது எவ்விதமென்றாலோ தாரபுத்ராதிகள் விஷயமாய் ஹேயமான ஸேவைசெய்து பற்பலதீக் குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாய் "ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தாமடங்காப் பேதையிற்பேதையாரில்" என்பதுபோலப் பேதையராய்ப் பிறர்தம்மை மதிக்கும்படி ஜடலத்தைவளர்த்துக் காமாந்தகாரத்தி லகப்பட்டவர்களாய் (పెండ్లామేతి సదా స్నానం । పెండ్లామేతిసదాజపం । పెండ్లామేతిసదాధ్యానం । సదా పెండ్లామె కీర్తనం என்றுதாரபுத்ராதிகளே தெய்வமென்றிருந்து ஸகலேந்த்ரியங்களையுந் தங்களுக்காகவே வினியோகப்படுத்திக்காலத்தைப்போக்கப் பட்டவர்களாய் ஜிதேந்த்ரியர்களைப் போலவும் ப்ரஹ்மத்தைக்கண்டவர்களைப்போலவுங்குயுக்திவாதஞ்செய்பவர்களாயிருக்கிறார்கள். ஆகையாலிவர்கள் அந்தப்பரமரிஷிகளுக் கதிகமாகவும், ஸமானமாகவும் அவர்களுடைய த்வயாக்ஷரியி னுடைய த்ரியாக்ஷரிக்குஞ் சமமாகாமலிருக்க, எவ்விதமாய் ஸ்ரேஷ்டரெ

யீறு நினைக்கலாம். இப்படியிருக்க இத்தாஸ்தோன்றிகள் சொல்லுந் தூர்ப்போதனைக்குட் பட்டவர்கள் அவர்களைப்பார்க்கிலும் புத்தி மாஸ்யரென்றே நினைக்கிறோம். இதுவுமன்றிக் கோயில்களில் ந்ருத்ய கீதவாத்ய தாஸீஜன சமூஹங்களை வைத்திருப்பது அவ்விடத்திற்குப் போகும் ஜனங்களுடைய புத்திகளையெல்லாங் கெடுப்பதற்கென்று இத்தாஸ்தோன்றிகள் சொல்லுகிறார்கள். இப்படிசொல்வது எப்படி யிருக்கிறதென்றால் தனக்காகாத காரியத்துக்கு அறுபத்தெட்டு நாழிகையும் த்யாஜ்யமென்று சொல்லுவானைப்போ லிவர்களுடைய கருமானு சாரத்தால் அர்ச்சாவதாரத்தில் ப்ரதிபத்தி வாராததினாலிப்படி யுக்திகளைச் செய்துகொண்டு வெள்ளரிப் பழத்துக்கு வெங்கலப்பூணைக் கட்டுவார்போலேயும், மொட்டந் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுவார் போலவு மிந்த மூடர்கள் யுக்திகளால் ஸகலமதஸ்தர்களையுங் கண்டிக்கலாமென்றெண்ணி ஜயம்பெற இவ்விதமான வார்த்தைகளைச் சொல்லப் புறப்பட்டார்கள். ஆ! ஆ! ஆ! இதைப்பார்க்க மெத்த ஆச்சர்யமாயிருக்கின்றது.

இத்தான் தோன்றிகளுக்குப் புத்தி சமாதானஞ் சொல்லவேண்டிய அவஸ்ய மில்லாத போதிலு மடியேனைப்போல் சஞ்லசமதிகள் சிலரிருப்பார்களென்று பெரியோர்கள் திருவுள்ளத்தில் கருதித் திருவாய் மலர்ந் தருளினதை இங்கு உதஹரிக்கிறேன்.

கோயில்களில் ந்ருத்யகீதவாத்யங்களை வைத்திருக்குங் காரணமாவது இருள் தருமா ஞாலத்தி லிருக்கு மவர்களுக்கு ஈச்வரன் விஷயத்தில் ப்ரேமை ஜனித்து ஸேவிக்காமல் வீணாய் நசித்தழிகிறார்களே! ஐயோ? இவர்களை யெவ்விதமாய்த் திருத்தலாமென்னும் பரிதாபத்தால் ஆலோசித்துச் சிலருக்குச் சங்கீதத்தின் பேரிலுஞ் சிலருக்கு வாத்யங்ளின் பேரிலுஞ் சிலருக்குத் தாஸீஜனங்களின் பேரிலும் இப்படி யநேகவிதமாகச் சித்தங்கள் பேதித்திருப்பதா லதைத்தெரிந்து ரோகபீடிதன் ஔஷத ஸேவைபண்ணிக்கொண்டு ரோகத்தைப் போக்கிக்கொள்ள எள்ளளவும் நினையாமல் கண்டதைப்புசித்துஅதிகப்ரமை பட்டுக்கொண்டிருப்பதைக் கண்டு ஸஹிக்கமாட்டாமல் அந்த ரோகபீடிதனுக்கு அபிமத

மான வஸ்துக்களின்னவை யென்றறிந்து அதில் ஔஷதத்தை உள் வைத்துக்கொடுத்து வ்யாதியைப் போக்கும் மாதா பிதாக்களைப் போலேயும், மானைக்காட்டி மானைப்பிடிப்பாரைப் போலேயும், பாமரஜனங்கள் இவற்றைப்பற்றியாவது இங்குவந்து ஒருக்கால் பகவானையும் பாகவதர்களையும் ஸேவித்து உஜ்ஜீவிக்கட்டுமென்ற திருவுள்ளம்பற்றித் திருத்தும்பொருட்டுந்ருத்யகீதவாத்ய தாஸீஜனஸமூஹங்களை வைத்ததேயன்றி வேறன்று.

ஆறுவிதர விஷயங்களி லெண்ணங்கொண்டு வந்தவர்கள் வந்த காரியத்தின்பேரில் கண்ணாயிருப்பர்களே யொழிய அர்ச்சாவதாரத்தில் அவர்களுக்குப் புத்தியெப்படி ப்ரவேசிக்கு மென்றாலோ, அங்குவந்திருக்கும் யாவத்கோஷ்டிகளும் பகவானைச் சேவித்துக் கொண்டிருக்க இதர வெண்ணத்துடன் வந்தஇவர்கள் தாஸீஜன முதலானவைகளின்பேரில் மோஹம்வைத்து அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தால் யாராவது தம்மைக்கண்டு நகைத்துப்பரிஹஸிப்பார்களென்று தமக்குள்தோன்றி லஜ்ஜைஜனித்துஅங்குவந்திருக்கும் பத்துப்பேரைப்போலவே இவர்களும் ஸேவிப்பார்கள். இதுவுமன்றி அங்கு எழுந்தருளியிருக்கும்பாகவதர்களைச்சேவிக்கவும் அவர்களுடைய ஸ்ரீஸூக்திகளைக் கேட்கவுங் கூடும். அவைகளால் எறும்பூரக்கல்குழியுமா போல் இவர்களுடைய தோஷகுணம் நீங்கி ஸத்வகுணந் தலையெடுத்து எம்பெருமானைச் சேவிக்கும் படியாவார்கள்.

அந்தப் பாகவதர்களும் இவர்களைப் போலவே மானிடர்கள் தாமே; அவர்களுடைய ஸேவை முதலானவைக ளிவர்க ளுடைய துர்க்குணங்களைப்போக்கிச் சுகுணங்களைக் கொடுக்குமா வென்றுலோ! ஆ! ஆ! ஆ! கொடுப்பதற்கு ஐயமென்ன! பாகவதர்களைக் கண்டு அவகர்ளுடைய நற்குண நற்செயல்களை ஆலோசித்து இவர்கள் ஒருகாலத்திலாவது அநுதபித்துத் திரிவர்களன்றோ! அவ்வநுதாபமே இவர்களை நல்வழிக்குக்கொண்டுவரும். பூர்வபக்ஷிகள் கடவுளையர்ச்சாவதாரமாய்வணங்கினுல்கடவுள்நம்மைப்பரிஹாசஞ்செய்கிறார்களென்பதாய் ஸிக்ஷிப்பானென்றார்கள். ஒருமனித னொரு

அரசனைப்போல் ப்ரதிமைசெய்துகொண்டு ப்ரதிநித்யம் ப்ரஜைகள் சூழ்ந்துகொண்டு இருக்கும்படியான இடத்தில் வைத்துக்கொண்டு தானத்யந்த ப்ரயமுடன் பூஜித்துக்கொண்டாட ஸகலருமதைப்பார்த்து அவ்விதமாகவே பூஜித்துக் கொண்டாடினால் அவ்வரசனதைக் கேள்விப்பட்டு, பூஜித்துக்கொண்டாடு மவர்களை யென்னஸிக்ஷை செய்வானோ! அதையும், ஒருவன் பூஜித்துக் கொண்டாடுமவர்களையும் அப்ரதிமையையும் இழிவாய்ப்பேசி அவமானப்படுத்தினால் அதை யரசன்கேள்விப்பட்ட மாத்திரத்தில் அவமானப்படுத்தினவர்க்கு என்னவெகுமதி செய்வானோ! அதையும் புத்திமான்கள் யோசியாம லிருக்கமாட்டார்கள்.

கேவலமான ஒருராஜ்யத்தை ஆளும் அரசனை விக்ரஹரூபமாய்ச் செய்துவைத்துக்கொண்டாடினால் கேள்விப்பட்டமாத்திரத்தில் ராஜன் உகந்து பூமி, தன, தான்ய, வஸ்த்ராபரணாதிகளைக்கொண்டாடினவருக்கு வெகுமதிகள் செய்ய, ஸர்வாந்தர்யாமியான சர்வேச்வரனை விக்ரஹரூபமாய் வணங்கினாலவன் எவ்வளவு உகந்து எதைக்ருபை செய்வானோ அதைச்சற்றும் யோசியாமல் ஸர்வஜ்ஞன் நினைவறியாமல் நம்மைப்பரிஹாஸஞ் செய்கிறானென்ற வெண்ணத்துடன் ஶிக்ஷிக்கிறானென்றுசொல்வது அவிவேகமே தவிர வேறன்று. அவன் அர்ச்சிக்கு மவர்களுடைய நினைவறியாமல் ஶிக்ஷிக்கிறானென்று சொன்னால் அவன் ஸர்வஜ்ஞத்வத்துக்குக் கொத்தைநேரிடுமல்லவா! மூடமதிகளிதைத் தெரிந்துகொள்ளாமல் அர்ச்சாவதார எம்பெருமானை ஆராதிப்பது அக்ரமமென்று சொல்லும் பக்ஷம் ஷடி ப்ரமாணங்களாலும், யுக்திகளாலு நிரஸ்தம்.

அர்ச்சாவதாரத்தை ஆராதிக்கும்படி ஸாதித்தபகவானே (అష్టాక్షరాజప్యైవ। హ్యపవిత్రో ౯మదర్చకః।పాదహీనోర్ధ్వపుండ్రశ్చ।రౌరవం నరకంవ్రజేత్) அஷ்டாக்ஷரமந்த்ரத்தை, அர்த்தாநுஸந்தானத்துடன் ஒருகால் ஜபியாதவர்களும், பவித்ரமில்லாமலென்னை யர்ச்சிப்பவர்களும், பாதமில்லாத திருமண் தரிக்குமவர்களும் ரௌரவாதி நரகத்தையடைவார்களென்று திருவாய் மலர்ந்தருளினார். (స్కాంద

పుణ్డ్రాంకితఫాలదేశాః సుతప్తచక్రాంకితబాహుమూలాః। అష్టాక్షరద్వాదశమంత్రజప్యాః సుకృత్యపర్యాః ఖలువ్రాతదేవాః) பாத புண்ட்ரத்தினுலே அங்கிதமான நெற்றியை யுடையவர்களாயும், நன்ருகத் தப்தமானசக்ரங்களினுலே அங்கிதமான தோள்களையுடையவர்களாயும், அஷ்டாக்ஷரத்வாதஶ மந்த்ரங்களை ஜபிக்கின்றவர்கள் என்பக்தர்களில் ஶ்ரேஷ்டர்கள். பின்னும் சக்ராங்கிதத்தால் பவித்ரமான தேஹத்தையுடைவர்களென்று அருளிச்செய்தார். ருக்ஶாகை, ஏழாமஷ்டகம், நாலா மத்தியாயம் - எட்டாம் வர்க்கத்தில், ஶ்ருதி (పవిత్రం తేవితతం। బ్రహ్మణస్పతే। ప్రభుర్గాత్రాణిపర్యేషివిశ్వతః। అతప్తతనూర్నతదామో। అశ్నుతేతసద్వహంత్యస్త్రమానతః) என்றபடி தப்த சக்ராங்கிதமில்லாத ஶரீரத்தைப்பார்க்கக்கூடாதென்று நிஷேதித்திருக்கின்றது. மயித்ராவருணசாகையில், ஶ்ருதி (సామవేదేప్రతిపాద్యతే। తథాహిపవిత్రమిత్యగ్నిః। అగ్నిర్వైసహస్రారః। సహస్రారోనేమిః। నేమినాతప్తతనుః। బ్రాహ్మణస్సాయుజ్యంసలోకతామాప్నోతి) என்றபடி ஸமஸ்ததேவர்களும் ஸமஸ்த ப்ராஹ்மணர்களும் அக்னியில் தப்தமான சக்ராங்கிதமும் ஊர்த்வ புண்ட்ரங்களும் தரிக்கக்கடவர்களென்றும், காண்டவவேதத்தில் (దేవాసోయేనవిధృతేన బాహునాసుదర్శనేన। ప్రయాంతంస్వర్గమాయాంతి। తావల్లోకవిసృష్టపి। తస్యయంతి। బ్రహ్మణోవేస్సర్వం। సర్వావైదేవతానాం। సర్వావైవిప్రాణాం। సర్వావైక్షత్రియాణాం। సర్వావైవైశ్యానాం। సర్వావైశూద్రాణామిత్యగ్నినావైహుతాత్రి। తప్తంచక్రం। ద్విభుజేధార్యేతోర్ధ్వపుండ్రమాలిఖ। తస్మాద్విరేఖంభవతి। పునరాగమనన్నచేతి। బ్రహ్మణస్సాయుజ్యం। సలోకతామాప్నోతి) என்று ஸமஸ்த தேவர்களும், ஸமஸ்த ப்ராஹ்மணர்களும், ஸமஸ்த க்ஷத்ரியர்களும், ஸமஸ்தவைஶ்யர்களும், ஸமஸ்த ஶூத்ரர்களும் அக்னியினுலே தப்தமான சக்ராங்கிதத்தை இரண்டு புஜங்களினும் தரிக்கக்கடவர்கள். இடைவெளியோடு கூடின ஊர்த்வ புண்ட்ரங்களைத் தரிக்கக்கடவர்கள். அந்தப்ராஹ்மணர்கள் விஷ்ணு ஸாயுஜ்யத்தை யடை

ந்து, ஸ்வர்க்காதிகளில் நின்று மீள்வதுபோல் மறுபடியும்மீளு கிறார்களென்பதில்லை என்றும், பரமோபநிஷத்தில் (నేమినాత స్త తసుః । బ్రాహ్మణస్సాయుజ్యం సలోకతామాప్నోతి) என்றதில், அக்னியில் தப்தமான சக்ராங்கிதத்தோடு கூடின சரீரத்தை யுடையப்ராஹ்மணன், ஸாயுஜ்ய ஸாலோக்யமான பரமபதத்தை அடைகிறனென்றும், அதர்வண மஹோபநிஷத்தில் ப்ராஹ்மணஸுத்ரத்தில் (దక్షిణేతుభుజేవిప్రో । బిభ్రుయాద్వైసుదర్శనం । సవ్యేతుశంఖం బిభ్రుయాదితి బ్రహ్మవిదో విదుః) ப்ராஹ்மணர்கள் வலது புஜத்தில் சக்ரத்தையும், இடதுபுஜத்தில் சங்கத்தையும் தரிப்பதுதக்கதென்று ப்ரஹ்மவித்துக்க ளறிவார்களென்றும், இப்படிக்கே அமோகப்ரமாணங்கள் சக்ராங்கிதத்தைப்பற்றிக்கோஷிக்கின்றன. காத்தியாயன உபநிஷத்தில் (సహనావవతు । అథప్రాశపత్యకాత్యాయనో బ్రహాణమన్వయుజ్త । అధిహిభగవో మేకం పవిత్రాణాంపవిత్రం । కేనవాకర్మాణిసఫలాని। యద్దత్వాంతరంతపోమర్త్యానాం; కేనసుకరేణామృతత్వమేతి । సహోవాచ । సాధుతేనయోగీశృణు । భూపవిత్రంసులభంసుకరం । యద్విష్ణుక్షేత్రం తత్రమృత్సాంశ్వేతాముద్ధృత్యాసిత్యూర్ధ్వరేత్। అమృతమేవశ్వేతమృత్స్నభవతి । తాంశుద్ధజలేనప్రణవేణసంకర్షయేత్॥ దేవపితృకర్మాణ్యారభమాణః । తయానిత్యమూర్ధ్వపుణ్డ్రంబిభృయాత్ ।మంత్రైః కేశవాదీనాం। తద్రహితంకర్మవిఫలం।రక్షాంసిగృహ్ణీయుః । తదేవమభ్యుక్తంభవతి । నాసాదికేశాంతమూర్ధ్వపుణ్డ్రం । విష్ణోస్థితస్యచరణద్వయాకృతిః । ఏకాంగులంపాదతరోరస్యమూలం।తమధ్యస్నే ద్వేచశాఖే । తద్దైవచమధ్యావకాశో ద్వ్యంగులాదన్యూనః । సశ్రీప్రతిష్ఠాయై శ్రీహరిద్రాయతోహారిం ద్రావయతి విష్ణునాసహ । ఆదిత్యవర్ణే శ్రీఫలేధారయేత్ । తజ్జలేనశ్రీబీజేన సంమృజ్యత త్సూత్మ్యరేఖాంధారయేత్ సశ్రీమాన్భవతి । తద్వేశాఖేహంసవర్ణే । గాయత్రీత్రిష్టుప్ ఛందసే ఆత్మపరమాత్మదైవత్యే । దర్శపౌర్ణమాసికే ప్రావృత్తిక్రియే। భుక్తిముక్తిఫలే । సారేఖాశ్రీవర్ణా। గాయత్రీఛందః।

ఆనన్దక్రియాన్యానత్ఫలా । అయంపుణ్డ్రవిధిఃప్రపంచితో యోధా
రయతిసవైదికోభవతి । ససర్వకర్మార్హోభవతి । సాయుజ్యాత్పాతకా
త్ । పూతోభవతి । సవిష్ణుసాయుజ్యమవాప్నోతి । యఏవంవేదేత్యుప
నిషత్ । సహనావవతు । ) ஓய் ஸ்வாமி பவித்ரங்களுக்குள்ளே பவித்ரமா யிருக்கிறது எதுவோ, எந்தவநுஷ்டானங்களானவை பேற்றோடு, அல்லது பலத்தோடு கூடினதுகளோ, மநுஷியர்களுக்கு யாதொரு பரமபதம் ப்ரமத்தினு லடையத்தகாமல் எவ்வித ஸுலபத்தினு லடையலாமோ என, உடனே ப்ரஹ்மா சொன்னதாவது ஓய் ருஷீ, எதுபவித்ரமாயும், ஸுலபமாயும், ஸுபகரமாயும், நிச்சயமாயு மிருக்கின்றதோ, அதைச் சொல்லுகிறேன், ஸ்ரீரங்காதி க்ஷேத்திரங்களில் நின்றும், ப்வேத ம்ருத்திகை (உத்ருதாஸி) என்கிறமந்த்ரத்தாலே யெடுக்கத்தக்கது. அம்ருதமென்ற மோக்ஷஸ்வ்ரூபியான பகவானே ப்வேத ம்ருத்ஸ்வரூபமா யிருக்கின்றான். அந்த ப்வேத ம்ருத்தை பரிஸுத்தமான தீர்த்தத்தினுலே ப்ரணவமந்த்ரத்தைச் சொல்லிக் குழைக்கத் தகும், தேவகர்மமான ஸந்த்யா வந்தனம் பித்ருகர்மமான ப்ராார்த்தம், இதுகளினுடைய ஆரம்பத்தில் குழைத்த திருமண்ணுலே, ஊர்த்வபுண்ட்ரந் தரித்தே ஆரம்பிக்கக் கடவன். கேசவன்முதலிய பன்னிரு நாமத்தால் தரிக்கக்கடவன், ஊர்த்வபுண்ட்ரந் தரியாமல்செய்கிற ஸந்த்யாவந்தன ப்ராார்த்தகர்மங்கள் நிஷ்பலமாய் விடும். அந்தக்கர்மங்கள் ராக்ஷஸர்களாலே க்ரஹிக்கப்படும், அந்தப்புண்ட்ரமானது நாஸாதியாகத் தொடங்கி கேஸாந்தமாக நிற்கிற விஷ்ணுவின் இரண்டு திருவடிகளைப்போல் தரிக்கத்தக்கது, இந்தத் திருவடிகளாகிற வ்ருக்ஷத்துக்கு வேர்போல் ஒரு அங்குலம் பீடந் தரிக்கத் தக்கது, அந்தவேரில்நின்று உண்டாயிருக்கிற இரண்டுகிளைகள்போலஇருக்கத்தக்கது.மேலிரண்டுரேகைகளும்அதின்மத்யத்தின்வெளிஇரண்டங்கலத்தைக்காட்டிலுங்குறையாமலிருக்கத்தக்கது, அதில் ஸ்ரீயினுடைய ஸம்பந்தமா யிருக்கிறஹரித்ரா சூர்ணத்தை ப்ரதிஷ்டைபண்ணக் கடவன், அந்தஸ்ரீசூர்ணத்தைப் பாலஸூர்யனைப்போலிருக்கும் வில்வக்குடுக்கையில்தரிக்கத்தக்கது,அந்த ஸ்ரீசு

ரிணத்தை ஸாந்த ஜலத்தினாலே ஸ்ரீபீஜமந்த்ரத்துடனே குழைத்து அந்தத் திருமண்காப்புக்குச் சூக்ஷ்மமான ரேகையாகத் தரிக்கக் கடவன். இப்படி பாதபுண்ட்ரத்துடனே தரித்தவன் ஸ்ரீமானாகிறான், அந்த இரண்டுகிளைகள்போ லிருக்குந் திருவடிகள் ஹம்ஸ வர்ண மாயும் காயித்ரியின் பொருளாயு மிருக்கிறதுகள். ஆத்ம, பரமாத்ம, தேவதையை யுடைத்தான தர்ஸஸ்தாலீபாகமென்ன, பௌர்ணிமாஸ்ய ஸ்தாலீபாகமென்ன, இஷ்டிகளென்ன, வாபீ கூபதடா காதிப்ரதிஷ்டைக ளென்ன, இதுகளினுடைய பலத்தைக் கொடுக்கத்தக்கவையாயு மிருக்கிறதுகள், புக்தி முக்திகளைக் கொடுக்கின்றவையாயுமிருக்கிறதுகள் அந்த ஸ்ரீசூர்ணரேகையானது லக்ஷ்மீவர்ணமாயும் காயித்ரீ சந்தஸாயும் ஆநந்த க்ரியையாயும் அம்ருதமென்ற மோக்ஷபலமாயு மிருக்கிறது, இது தான் ஊர்த்வபுண்ட்ரவிதி. யாதொருவன் இந்தப்ரகாரம் பாதபுண்ட்ரமாகத்தரிக்கிறானோ அவன் வேதஸம்பந்தமுடைய வைதிகனா யிருக்கிறான், அவன் ஸர்வகர்மங்களுக்கும் யோக்யனாகிறான், காயகத்தால் செய்தபாபங்களும் போய்ப்பரிசுத்தனாகிறானென் றிரட்டித்து விஷ்ணுசாயுஜ்யத்தை யடைகிறானென்றுஞ் சொல்லுகின்றது.

## வராஹோபநிஷத்.

అథ శ్రీవరాహరూపిణం భగవంతం ప్రణమ్య సనత్కుమారః పప్రచ్ఛ।
అధీహి భగవన్నూర్ధ్వపుండ్ర విధిం కిం స్థానం। కిం ద్రవ్యం - కా రేఖా-
కే మంత్రాః। కః కర్తా - కిం ఫలమితి చ। శ్రీవరాహ ఉవాచ॥ క్షీరాబ్ధౌ శ్వేత
ద్వీపే క్షీరఖణ్డాన్నైవ తేయానియ్య। సటాంభిద్వివిధభూ శ్వేతమృత్తికా
ఖ్యాముక్తిసాధనంభవతి। విష్ణుపత్నీమహీం దేవి మితి శ్వేతమృత్తికానమ
స్కృత్య ఓమితిహస్తేనోద్ధృత్య। అశ్వక్రాంతే ఇత్యాది। పదేపదే ఇతి చ।
ఇమం మే ఇత్యాతిశ్రుణుయాసుక్తోమయా ఇతిజలమాధాయ। ఉద్ధృతా
సీత్యాది శ్రియమితిజలనిక్షిప్య। విష్ణోర్నుకమిత్యాది విష్ణువేత్యా ఇతిమర్ద
యేత్। తన్మధ్యే నృసింహబీజంలిఖిత్వా। అతోదేవా ఇత్యాదిపర్యం
పదం। ఇతి త్రివారమభిమంత్ర్య - ఓం నారాయణాయ ఇత్యాదిప్రచోద

திலால் பயனென்ன,இவையருளிச்செய்ய வேண்டுமென்று, ப்ரம்ம நம்பண்ணினார்,அதற்கு ஆதிபுருஷவாராஹப்பெருமாள் அருளிச் செய்ததாவது. திருப்பாற்கடலில் ம்வேதத்வீபமென்கிற ஸ்தான த்திலிருந்து பால்கட்டியையைவநதேயமொன்ற கருடபகவானவர் கொண்டுவந்து பிடரிச் செட்டைகளாலேபலநிலங்களிலும் புகட்ட அதினாலே ம்வேத ம்ருத்திகையென்று பேருள்ளதாய் அதுதானே மோக்ஷ காரண மாகின்ற, விஷ்ணு பத்நியாகிய பூதேவி யெ ன்றம்வேதம் ருத்திகையை நமஸ்கரித்து ஓம் என்கிறபீஜமந்த்ரத் தைச்சொல்லிக் கையினாலெடுத்து "அம்வக்ராந்தே" என்ற ம்ருதி தொடங்கி "பதேபதே" என்பதினளவும், "இமம்மே" தொடங்கி இவ்வளவு மானமந்த்ரங்களைச் சொல்லித் தீர்த்தத்தை யெடுத்துக் கொண்டு "உத்ருதாஸீ" தொடங்கி, ஸ்ரீயமளவாகச் சொல்லி, அந் தத்திருமண்காப்பில் தீர்த்தத்தைச் சேர்த்து,"விஷ்ணோர்நுக" மெ ன்ற ம்ருதிதொடங்கி,"விஷ்ணவேத்வா" என்னுமளவுஞ்சொல்லிக் குழைக்கவேண்டும், குழைத்ததிருமண் நடுவே நரசிம்ஹபீஜமந்த் ரத்தையெழுதி, அதோதேவாஎன்ற ம்ருதிதொடங்கி, பரமபத மென்னுமளவும் மூன்றுதரம் மந்த்ரித்து, விஷ்ணு காயித்ரியா லே ஒருதரம்மந்த்ரித்து, ஞானபிரானுக்குத்தேவியாய்த் திருமண் தரித்தவர்களுடைய பாபங்களைக் களையுமவளாய், ம்வேத வரா ஹரூபியான விஷ்ணுவின் திருமேனியில் பிறந்தவளாய் எம்பெ ருமானாலே, பஞ்ச ஸம்ஸ்காரம் பெற்றவளா யிருக்கின்ற ம்வே த ம்ருத்திகாஸ்வரூபியாய்ப்பூதேவி யம்மமானவளே உனக்கு வந் தனஞ்செய்கிறேன், உன்னைநெற்றியில் தரித்ததினாலே மோக்ஷங் கொடுக்கிறவளாகவேண்டும்,பிராட்டியை இருத்துமவராய், ஸ்ரீயும் என்ற வும்மையாலே திருமண்காப்பை விஷ்ணுவின் திருமேனியி ல் நின்றும் உண்டானதாய்ச் சொன்னதுபோல் ஸ்ரீசூர்ணமும் அ ப்படி என்றதாய், அந்த விஷ்ணுவின் திருமார்பில்வஸிக்கின்ற பி ராட்டியினுடைய திருமேனியிலுண்டானதா யிருக்கின்ற ஹரித்ரா சூர்ணமானது, இரண்டு திருவடிகளின் நடுவில்மோக்ஷத்தி லிச்சை யுடையவர்கள் தரிக்கத்தக்கது என்று நம்மால் ஸங்கல்பித்து நிம் சயிக்கப் பட்டது. இருபுறமும், திருமண்ரேகை இரண்டி னடுவில்

ஸ்ரீசூர்ணரேகை ஆகமூன்றுரேகைகளாக இடவேண்டும். விஷ்ணுசம்பந்தமுள்ள யாவனொருவன் இந்தத் திருமண்காப்பை வயணத்துடன் அறிவானோ அவன், ஸ்ரீமந்நாராயணனுடைய ஸாயுஜ்யத்தை யடைகிறானென்று திருவாய்மலர்ந்தருள, மறுபடியும் ஸநத்குமாரர்புண்ட்ரம் எங்கெங்கே தரிக்கக்கடவதென்று விண்ணப்பஞ்செய்ய, அப்போது வராஹமூர்த்தியானவர் என்னுடைய பாதங்களைப்போலே ஊர்த்வபுண்ட்ரம் நாஸாதிகேஶபரியந்தமாகத் தரிக்கக்கடவதென்று அருளிச்செய்தார். யாவனொருவன் இதன்வைபவத்தை அறிவானோ அவன் ஸுகிப்பானென்றும், இரண்டாவது கண்டத்தில் அந்தப்புண்ட்ரங்களுக்கிடம் பனிரண்டென்கிறார். அந்தப்பனிரண்டின் ஸ்தானங்களாவன, முதலாவது லலாடத்திலும், இரண்டாவது நாபியிலும், மூன்றாவது மார்பிலும், நான்காவது கழுத்திலும், ஐந்தாவது நாபிக்குவலத்திலும், ஆறாவது வலப்புஜத்திலும், ஏழாவது அதின்மேலிடத்திலும், எட்டாவது நாபியின் இடத்திலும், ஒன்பதாவது இடதுபுஜத்திலும், பத்தாவது அதின்மேலிடத்திலும், பதினொன்றாவது முதுகிலும், பனிரண்டாவது பிடரியிலும், தரித்து நின்ற ஶேஷத்தை மோக்ஷங்கொடுவென்று உருவமெழுதாமல் மஹாப்ரசாதமென்று ஶிரஸிலே தரிக்கவேண்டியது. ஷை இடங்கள்தோறும், கேஶவாதி பனிரண்டு திருநாமங்களைச்சொல்லித் தரிக்கக்கடவன், தரிக்குமவனுக்குத் திருநாராயணனாகிற என்னிடத்தில் நித்யமான சலியாதபக்த்தி வ்ருத்தியாவதுந்தவிர, அவன் நல்லஸ்வரூபஜ்ஞானத்துடன் பரமபதத்தையுமடைவான். கேஶவனாதியாகப் பனிரண்டு புண்ட்ரங்களின் தாரணத்தினாலே ப்ரஹ்மசாரிவைகலிய பாபங்களும்க்ருஹஸ்தாஶ்ரம வானப்ரஸ்த எதிகள்முதலானஸமஸ்தமான பேர்களும் தங்களுடைய பாபங்களும் நீங்கிப்போய் முக்தராகிறார்கள். ஸகலபுண்யதீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணவராகிறார்கள். தானம்வாங்கின பாபங்களெல்லாவற்றில் நின்றும் பரிஶுத்தராவார்கள். ஶ்ருதி, ஸ்ம்ருதி, அநுஷ்டானமில்லாத அவைதிகன் எல்லாமநுஷ்டித்தவனாகிறான், உபநயனமில்லாதவன்

உபநயனம்பண்ணினவனாகிறான். உபநயனமானவன் இருந்த பந்தியைப்பாவனம்பண்ணினவனாகிறான். இந்த அதிகாரி ஒருபந்தியிலிருந்தானாகில் அவன்கண்ணுக்குத் தெரிகிறவரையில் மத்தியிலபரிஶுத்தரிருந்தாலும், அந்தப்பந்தியைப்பாவனம் பண்ணுகிறவனாகிறான். அப்படிப்பட்டவன் நித்யவிபூதியையடைகிறான் நித்யவிபூதிக்குச்சென்றவன் மீளுதலில்லை என்று வராஹபகவான் மூன்றுதரமருளிச்செய்தார்.

இப்படிக்கு ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸ, பகவத்வாக்யங்களும், அவற்றினுடைய விவரங்களாகிய புராணங்களும் ஏககண்டமாய்க்கோஷிக்க, ஈஶ்வரன் ஸர்வஶரண்யனென்றும், ஆசார்யனை, நம்மைப்போல்மனிதர் அவருக்கும் நமக்குப்பேதமில்லை, அவனை ஆஶ்ரயிப்பது அப்ரயோஜனமென்றும், பகல்வேஷக்காரனைப்போல், மேல்கண்டதைப் பூசிக்கொண்டுதிரிவது அக்ரமமென்றும், அவனுக்கு நல்லகதி கிடையாதென்றும்; சொல்லும் புத்திஶாலிகளின் விவேகத்தைப்பார்க்க அத்யாச்சர்யகரமாயிருக்கிறது. ஒருமனிதனுக்கு ஒரு வ்யாதிவந்தால் வைத்யனுக்குக்கைகாட்டினால் அந்தவைத்யன் ஒரு ஔஷதத்தைத் தேனிலாவது இஞ்சிரஸத்திலாவது அனுபானமாகச்சேர்த்துத்தந்து; தந்த ஔஷதத்துக்கு ஒருகெடுதிவாராமலிருக்கக் கெடுதியானகறியமுது முதலானவற்றைத்தள்ளி, ஷை ஔஷதத்துக்கு உபயோகப்படும் கறியமுதுகளைச் சாப்பிடும்படி பத்தியங்கெடாமல் இத்தனைநாளைக்கிருந்தால் ஷை வ்யாதி ஸ்வஸ்தப்படுமென்று சொல்லுவன். வைத்யன் வார்த்தையின்படி அபத்யஞ்செய்யாமல் பத்யத்துடனிருந்தவனுக்கு நாலுநாள் ஏறக்குறைய வ்யாதி ஸ்வஸ்தமாவது ஸகலருக்கும் ஸாதாரணமாய்த் தெரிந்திருக்குமல்லவா ? அவன்வார்த்தைப்படிக்கு நடவாமல் அபத்தியஞ்செய்தவர்களுக்கு ஔஷதத்தின்வேகம் கைகால் எடுக்கவொட்டாமல் ஶ்ரமப்படுத்துவது, நாமெல்லோரும் பார்த்திருக்கிறோமல்லவா, அதுபோல், ஓ, நேசர்களே ! நமக்கு ஜனனமரணமென்பதே ஒருவ்யாதியென்றும் அதற்கு ஆசார்யனேவைத்யனென்றும், அவரால் தாப, புண்ட்ர, தாஸ்யநாம

முதலானவைகளெல்லாவற்றையும் அனுபானமாக்கி ப்ரஸாதிக்கிற திருமந்த்ரமே, ஔஷதமென்றும், ஸ்வஸ்வரூப, பரஸ்வரூப, புருஷார்த்தஸ்வரூப, உபாயஸ்வரூப, விரோதிஸ்வரூபங்களையறிந்து, நிஷேத அநுஷ்டானங்களைச்செய்யாமல் பரமதர்மமானவிசேஷ அநுஷ்டானங்களைச்செய்து ஸ்ரீவசனபூஷண அதிகாரிகளாகும்படி நேமிக்கிறதே பத்யங்களென்றும், அப்படிக்கு அநுஷ்டித்தபின்பு அநுபவிக்கும், ஏகமேவைக்கியமென்றும், அப்படிக்கு அனுஷ்டியாமல் மந்த்ரத்தை மாத்ரம்நினைத்து மற்றகிருத்யங்களை நிக்ரஹித்தலால் ஜனனமரணமென்னும் வ்யாதிநீங்காதென உணராமல், ஆசார்யநேமநத்தை உல்லங்கனஞ்செய்த அபசாரமாகிற அபத்தியஞ்செய்தால், மந்த்ரமென்னும் ஔஷதங்குணஞ்செய்யாமல் ஶாஸ்த்ரஞ்சொன்னபடி க்ரியாலோபத்தால்வரும் பைஶாசகதியை யடையச்செய்து ஶ்ரமப்படுத்துமென்றும் என்நெஞ்சில்தோன்றவில்லை, புத்திமான்களுக் கிதின்ஸாரம் நன்றாய் ஸ்பஷ்டமாகும்.

ஐயா ? இதுவுமன்றிக்கே ஒரு ஸ்வல்பத்ருஷ்டாந்தத்தைப்பாருங்கள், வித்தையில் விசேஷ ஸாமர்த்ய முடையனான ஒருமனிதன் ஒருராஜனிடத்தில் உத்யோகஞ்செய்ய ப்ரவேசித்தால், உடுப்பு யோக்யதை முதலானவைகளெல்லாம் கிரமமாயிருந்தாலல்லவா உத்தியோகத்தைக் கொடுத்துக் காப்பாற்றுவான். அப்படிக்கில்லாமல் உனக்குவேண்டியவேலைகளெல்லாம் க்ரமமாக நான்செய்துவிடுகிறேன் யான் நிர்வாணமாய் இங்குவருகிறேன் அதைப்பற்றி நீர்கேட்கப்படாது என்று, ராஜனிடத்தில் சொன்னால் ராஜன் உத்யோகங் கொடுப்பானு ? இதையோசியாமல் செய்கிறகாரியமெல்லாம் வேதவிருத்தமாய்ச்செய்து, நாங்கள் ப்ரஹ்மத்தை மனத்தில்நினைத்து, ப்ரஹ்மத்தைச் சேருகிறோமென்று சொன்னால் ஒருக்காலும் அது நடக்குமோ ? ஐயா ! பூர்வத்தில் நமதாழ்வாராசார்யர்கள் விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிலைநிறுத்த இன்னவருஷம், இன்னமாதம், இன்ன நக்ஷத்ரம், இன்னவூர், இன்னநாளில், அவதரிக்கப் போகிறார்களென்று பவிஷ்யத்புராண முதலானவை

களில் அவதாரத்துக்கு முன்னிட்டே சொல்லி யிருக்கிறப்ரகாரம் அவதரித்து ஸித்தாந்தத்தை நிலைநிறுத்தினார்கள். அப்படிநிலைநிறுத்த அவதாரஞ்செய்தவர்களென்று யாவருக்கும் நம்பிக்கைவரும்பொருட்டு அநேக மஹிமைகளைக்காட்டியும் அவருடைய அம்ஸங்களின்னின்னதென்று ப்ரத்யக்ஷத்தில் அக்காலத்திலிருந்தயாவருக்கும் காட்டியிருக்கிறார்கள். அப்படிக்குக்காட்டினவர்களிலொருவராகிய ஸ்ரீராமாநுஜர் ஊமையைப்பேசும்படிசெய்து திருவடிஸாதித்தார். செல்வப்பிள்ளையென்னு மர்ச்சாவதாரத்தை டில்லிஸுல்தானுக்கெதிரில்நடக்கும்படி செய்தார். ஜைநமதஸ்தரிடத்தில் வாதிக்க அநேகாயிரஞ்சிரஸையுடையராய் நிஜஸ்வரூபத்துடன் வாதித்து ஜயித்தார். தேவராஜன்மகளுக்கண்டினப்ரஹ்மரக்ஷஸைப் பால்யத்தில் திருவடியின் ஸ்பர்ஶத்தினால்போக்கி அவர்களையும் யாதவப்ரகாஶன்முதலானவர்களையும் திருவடியாக்கிக்கொண்டார். இப்படிக்கு அநேகத்ருஷ்டாந்தங்களைக்காட்டிச் ஸித்தாந்தத்தை நிலைநிறுத்தினார். புராணத்தில்சொன்ன ஸ்தலங்களில் அவதாரஞ்செய்ததினாலேயும் குருபரம்பராப்ரபாவத்தில் மேல்கண்டமஹிமைகளை ப்ரஸித்தமாகயாவரும் அறியச்செய்தாரென்றவிடங்களையுஞ் சொல்லியிருப்பதினாலேயும் அந்தவிடங்களைச் சேவித்து விசாரிக்குமளவில் நிஶ்சயமாகக்காணப்படும். அநேகத்ருஷ்டாந்தங்களினாலேயும் நம்பிக்கொண்டிருக்கும் நமது ஸித்தாந்தம் பொய்யென்றும் நாம் வைத்திருக்கும் க்ரந்தங்களைக் கட்டுக்கதைகளென்றும், நமது ஆழ்வாராசார்யர்களுக்காவது விஶேஷமாய் வாசித்துக்கொண்டதினால், நாங்கள் விஶேஷ ஜ்ஞானத்தை யுடையார்களென்றும் நாங்கள் செய்யுஞ் ஸித்தாந்தமே ஸத்யமென்றும், இப்படிக்கநேகமாகக் கற்றமுட்டக்கல்வியெல்லாம் பேசுகிறார்களே! ஐயா! கிஞ்சித்து யோசனைசெய்து பாருங்கள் அவர்களைப்போலிவர்கள் ஆவர்களா; அப்படிக்காகும்படி யிருந்தால் இவர்களைக்குறித்து எந்த ஶாஸ்த்ர புராணங்களிலாவது சொல்லியிருக்கின்றதா. ஐயா! அப்படி சொல்லாமற்போனாலும் போகட்டும். அவர்களைப்போலேதாவது த்ரு

ஷிடாந்த்ர மிப்போது ப்ரத்யக்ஷத்தில்காட்டி ஸித்தாந்தஞ் செய்ய ஶக்தியுண்டா! அப்படிக்கு உண்டாயிருந்து காட்டினால் இந்தக்ஷணத்தில் இவர்கள் ஸித்தாந்தத்தில் ப்ரவேஶிக்க யாங்கள் ஸித்தமாயிருக்கின்றோம்; அதைவிட்டு இவர்கள்கற்ற வன்மையை எங்களிடத்திலுங்காட்டி யுலகத்திலநேகர்புத்தியைக்கெடுத்ததைப்போலெங்கள் புத்தியையும்சபலஞ்செய்ய வாதிக்கவந்த இவர்களாபரமபதமடையவர்கள், (ஆய்ந்தோய்ந்து பாராதவன் தான்சாவக்கடவன்) என்றபழமொழியைப்போல் முந்தியனுஸரித்திருந்த நன்மார்க்கத்தின் ஶாஸ்த்ரங்களைச்செவ்வையா யாராய்ந்து பாராமல் இந்த நூதனமதத்தைப்பற்றிக்கரைசேர எண்ணங்கொள்ளுமவர்கள், இந்தவிரண்டுவிஷயங்களிலொன்றுவது உறுதிப்படாமல் உபயப்ரஷ்டத்வத்தை யடைந்து நாளையதினம் நமன் நன்முக உதைக்கையிலிஞ்சி தின்றகுரங்குகளைப்போல் பல்லிளிப்பர்கள். (వేషభాషాస్వరూపేణనిరాపేక్షనిగర్వణః।ప్రబంధోభక్తిశీలశ్చవైష్ణవోష్టాంగలక్షణః) என்கிறபடியே எட்டுவித லக்ஷணங்களுடனே இருக்கும் பாகவதோத்தமர்களே பரமபதத்தையடைவர்கள். தத்வ்யதிரிக்தமாய்த் தூஷித்தபசாரப்பட்டு, யுக்திகளே வேதமென்றும் ப்ரஹ்மத்துக்கு ரூபமில்லை, ஸர்வஶூந்யனென்றும், சொல்லிவாதிக்கும் வேதபாஹ்யரான தான்தோன்றி மதஸ்தர்களும்பௌத்தமதஸ்தர்களும் ஹிரண்யராவண ராக்ஷஸர்களைத் தெய்வமென்று வணங்குமவர்களும் வேதகுத்ருஷ்டிகள். இனிப்ரபந்தகுத்ருஷ்டிகளாரெனில்!

---

## ப்ரபந்தகுத்ருஷ்டி க்ருத்யதீபம்.

---

తాంప్రపన్నాస్యుత్తరతటే। శఠగోపంజనిష్యతి। మద్భక్తోహంభవిష్యామి। నేతుంద్రామిడతాంశ్రుతిం,) என்று பவிஷ்யத்புராணத்தில் பகவத்வாக்யமிருக்கிறபடியால் உபயவேதங்களையும் துதிசெய்கிற வேதபுருஷனும், ப்ரதமத்தில் த்ராவிடவேதத்தை, துதிசெய்து, பின்பு கீர்வாணவேதத்தைத்துதிசெய்ததாய் எசுர்வேதம்

ஏழாம்ப்ரஶ்னம் முதல் பஞ்சாதியில் (నమోనమో వాచే) என்று உபயவேதங்களையும் நமஸ்கரிக்கிறேனென்றும் (యాచోదితా యాచానుదిత తస్యై వాచే నమో నమో వాచే) என்று யாதொருத்ராவிடவேதமானது யுகங்கள்தோறும், ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்போல் அவதரிக்கின்றதோ யாதொரு கீர்வாணவேதமானது பரமபதநாதனைப்போல் அவதரியாமல் நித்யமாயிருக்கின்றதோ, அந்த இரண்டுவேதங்களையும், நமஸ்கரிக்கிறேனென்றும், ப்ரஹ்மாவுக்கு ஸ்ரீமந்நாராயணன் உபதேஶம்பண்ணினது(యో బ్రహ్మాణం విదధాతి పూర్వం। యో వై వేదాంశ్చ ప్రహిణోతి తస్మై) என்றதில் யாவனொருவன் ப்ரஹ்மாவைப்படைத்து அவனுக்கு வேதங்களையுபதேசித்தானோ என்றதில், இருக்கு, எசுர், ஸாமம், அதர்வணங்களாய்ப் பிரிந்திருக்குமாபோல், த்ராவிடவேதத்தையும் உபதேஶித்தானென்பது நிஶ்சிதம், இப்படிக்கிருக்கத் தூப்புற்பிள்ளை பூர்வதஶையில், அநுஷ்டித்தப்ரகாரம் அநுஷ்டித்துப், த்ராவிடவேதத்தைக் கநிஷ்டமாகப்பேசுவது மன்றிக்கே தூப்புற்பிள்ளை உத்ரதசையில் அநுஷ்டித்தப்ரகாரம் அநுஷ்டியாமல் பாகவதர்களுற்பத்தி சிந்தனைசெய்து பகவத்பாகவதாசார்ய விக்ரஹங்களைப் பின்னஞ்செய்யுமவர்கள் தாம் ப்ரபந்தகுத்ருஷ்டிகள். இனி ரஹஸ்யகுத்ருஷ்டிகள் யாரெனில்!

---

## சண்டிப்ரசண்டிமதவாதகிரிகண்டனவஜ்ரதண்டம்.

சண்டிப்ரசண்டிமதஸ்தர்கள் ஶிஷ்டாசார ஶ்ரேஷ்டரான ஸ்ரீவைஷ்ணவஸ்வாமிகளெல்லோரையும் ப்ராக்ருதர்களென்றும் தூஷித்துத் தாங்களே ஸ்ரீவைஷ்ணவஶ்ரேஷ்டரென்றும் வாதிப்பதின்றும் தாங்கள் செய்துவரும் துராநுஷ்டானங்களை ஆழ்வாராசார்யர்களெல்லோரும் அநுஷ்டித்தார்களென்றும்பிதற்ற அநேகர் நிஜமென்று நம்பி வடவாமுகாக்னியிலே விழுந்தகொசுருகளைப்போல் அம்மதத்திலவிழுந்து நஶிப்பதினாலும் இவர்கள்செய்துவரும் துராசார அநுஷ்டானங்களை ஸகலமதஸ்தர்

களுங் கண்டு ராமாநுஜஸித்தாந்தம் துராநுஷ்டானங்களோடிருக்கப்பட்டதென்று நினைத்து ஸகலஸ்ரீவைஷ்ணவர்களும் அவ்விததுராநுஷ்டானங்களைச்செய்கிறார்களென்று தூஷித்து அபசாரப்படுவதினாலும், கிரீஸ்தவர்கள் சிலபுஸ்தகங்களில்இவ்விதவைஷ்ணவப்போலிகளைத்தூஷித்து அச்சடிப்பித்து வருவதினாலும் வைஷ்ணவாவைஷ்ணவஸித்தாந்த நடக்கைகளின்னவென்று கண்டு உணரும்பொருட்டு இதனடியில் சிலஉதஹரிக்கிறோம்.

## இஃது - ஸத்ஸம்ப்ரதாயஸித்தாந்தவிளக்கம்.

ஸ்ரீமத்பராங்குஶ பரகாலர் முதலான பதின்மராழ்வார்களும் மதுரகவி ஸ்ரீமந்நாதயாமுன எதிவராதி தத்ஸம்பந்த பூர்வாசாரியர்கள் முதல் அஸ்மதாசார்யபர்யந்தம் ஓரான்வழியாய் உபதேஶிக்க அநுஷ்டித்துவந்த ஸத்ஸம்ப்ரதாய விலக்ஷண ஶரணாகதிமார்க்கத்தை விவரிக்கின்றோம்.

ஸ்ரீபராங்குஶர் "சரணாகக்கொண்டகுருகூர்ச்சடகோபன்" என்றும், "நின்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்றும், திருமங்கைமன்னன். "வம்புலாங்கூந்தல் மனைவியைத்துறந்து பிறர்பொருள் தாரமென்றிவற்றை, நம்பினாரிறந்தால் நமன்றமர்பற்றியெற்றுவித்தெரியெழுகின்ற, செம்பினாலியன்றபாவையைப்பாவிதழுவெனமொழிவதற்கஞ்சி, நம்பினேன்வந்துன் திருவடியடைந்தேனைமிசாரணியத்துளெந்தாய்" என்றும், குலசேகராழ்வார். "கண்டாரிகழ்வனவேகாதலன்தான்செய்திடினும், கொண்டானையல்லாலறியாக்குலமகள்போல், விண்டோய்மதிள்புடைசூழ்வித்துவக்கோட்டம்மானீ, கொண்டாளாயாகிலுமுன்குரைகழலேகூறுவனே." என்றும், பெரியாழ்வார். "துப்புடையாரையடைவதெல்லாம் சோர்விடத்துத்துணையாவனென்றே, ஒப்பிலேனாகிலுநின்னடைந்தேன் யானைக்குநீயருள்செய்தமையால், எய்ப்பென்னைவந்து நலியும்போதங்கேதுநானின்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தேனரங்கத்தரவணைப்பள்ளியானே" என்றும், இப்படியே பதின்மர்களும் அநந்ய ஶரணாகதிசெய்திருக்கின்றார்கள். பூர்வாசார்ய

ர்களில் மதுரகவிகள். "திரிதந்தாகிலும் தேவபிரானுடைக்கரிய கோலத்திருவுருக்காண்பனுன், பெரியவண்குருகூர்நகர்நம்பிக் காளுரியனுயடியேன்பெற்றநன்மையே." என்றும், "அன்னையா யத்தனு யென்னையாண்டிடுந், தன்மையான்சடகோப னென்ன ம்பியே" என்றும், இவ்வாறே ஸ்ரீமந்நாதமுனிகளும், ஸ்ரீஉய்ய க்கொண்டாரும், அனுஷ்டித் திருக்கின்றனர்கள், ஸ்ரீராமமி ஶ்ரர் ஷை உய்யக்கொண்டார் திருவடிகளிலாஶ்ரயித்து அவ ருக்கு ஸர்வவித கைங்கர்யங்களையும், நடத்திவர ஒருகாலவி ஶேஷத்தில் தம்முடைய ஆசார்யருடைய திருக்குமாரத்திகளி ருவர் அதிபால்யராயிருக்க அவர்களை நீராட்டத்துக்கு இட்டுக் கொண்டு போகையில் மத்யையில் ஒருகால்வாயைக்கண்டு அக் குழந்தைகள் அதைத்தாண்ட ஶக்தியில்லா தவர்களாய்த் திய ங்க அதைக்கண்ட ஸ்ரீராமமிஶ்ரர் அவ்வாய்க்காலின் பேரில் கவி ழ்ந்துகொண்டு அக்குழந்தைகளைத் தம்முதுகின்மேல்நடத்தி அ க்கரைப்படுத்தின காரணத்தால் அவர்க்குமணற்கால் நம்பியெ ன்று திருநாமம்வந்தது, லோகப்ரஸித்தம். இப்படியே ஸ்ரீ ஆள வந்தார் பெரியநம்பிகளும் அனுஷ்டித்தார்கள். பெரியநம்பிமு தலான பஞ்சாசார்யர்களுடைய திருவடிகளை ஆஶ்ரயித்தஸ்ரீபா ஷ்யகாரரும்யாவத்காலமும் திருப்பாவை யநுஸந்தானம் பண் ணிக்கொண்டு வருகையில் ஒருநாள், "உந்துமதக்களிற்று" என் கிறபாசுரத்தை அநுஸந்தானம் பண்ணிக்கொண்டு பெரியநம் பிகளின் திருமாளிகைக்கு எழுந்தருளுகையில், "செந்தாமரைக் கையால் சீரார்வளையொலிப்பவந்து திறவாய்" என்று மநுஸ ந்தானத்துடன் நம்பிகள் திருமாளிகைக்கதவைத்தட்ட நம்பிகள் திருக்குமாரத்திதிருக்காப்பை நீக்கினவளவில் உடையவர்க்கு அ க்குழந்தை நப்பின்னைப் பிராட்டியாகத் தோன்றினமையால், அவர்தண்டம்ஸமர்ப்பிக்க அக்குழந்தை திடுக்கிட்டுத் தம் திருத் தகப்பனுரிடஞ்சென்று தனக்கு ஜீயர்தண்டம் ஸமர்ப்பித்ததா ய் விண்ணப்பஞ்செய்ய, அப்போது பெரியநம்பிகள் உடைய வரைக் கடாக்ஷித்து அநுஸந்தானம் உந்தோ! வென்று கேட்ட ருள, உடையவரும் ஆமென்ன, அதற்கு அவர் தம் திருக்குமார

த்திக்கு அவ்வர்த்தங்களை ஸாதித்து ஸமர்த்தித்து ஸ்ரீஉடையவருக்குத்திருப்பாவை ஜீயரென்கிற திருநாமமுஞ்சாற்றியருளினர். பின்பு அஸ்மதாசார்யபர்யந்தம் யாவதாசார்யபுருஷர்களும் ஓரான்வழியாய் இந்த ஸத்ஸம்ப்ரதாயத்தின்படி அநுஷ்டானம்நடத்திவருகின்றனர்கள். ஆனல்ஸ்ரீஉடையவர்பால்யதசையில்யாதவப்ரகாசனிடம் வேதாத்யயனஞ்செய்யும்போது ஸ்ரீஉடையவருடையதிருவடிகளிலே அவனபசாரப்பட்டுத்தியங்கி, இந்த அபசாரத்தையெவ்விதத்தில் தீர்த்துக்கொள்ளுவோமென்று வ்யாகூலாந்தக்கரணனயிருக்கச்செய்தே, பேரருளாளன், ஸ்வப்நமுகேனவாயும், திருக்கச்சிநம்பி த்வாராவாயும், நம்மிராமாநுஜனுக்கு ஏகாவர்த்திப்ரதக்ஷிணஞ்செய்வீராகில் அந்த அபசாரம்நசித்துவிடுமென்று அருளிச்செய்ய, அப்படியே யாதவப்ரகாசனும் செய்து ஸ்ரீஉடையவர் திருவடிகளில் தம்சிஷ்யபுத்ரபுத்ரிகளுடன் சரணம்புகுத, ஸ்ரீஉடையவர் அவனுக்கு ப்ராயச்சித்தவிதிபூர்வகமாக; சிகா, யஜ்ஞோபவீதகாஷாய த்ருதண்டங்களை ப்ரஸாதித்து, கோவிந்தஜீயரென்னுந் திருநாமமுஞ்சாற்றி, திவ்யப்ரபந்தவ்யாக்யான ரஹஸ்யாதி ஸகலக்ரந்தங்களையு முபதேசித்துவந்தனர். அந்த யாதவப்ரகாசரும் ததாசார்ய ரபிமானநிஷ்டனாய் அந்தஸம்ப்ரதாய பரமவைதிக ஸித்தாந்த விலக்ஷணயுக்தனாய் நடத்திவந்தனர்.

## அஸத்ஸம்ப்ரதாயபள்ளமடைஸித்தாந்த உத்பத்திவிவரம்.

இப்படி யாதவப்ரகாசன் நடந்துவர, ஸ்ரீஉடையவருடைய பரமவைதிக ஸித்தாந்தாநுஷ்டானத்துக்குப் புறம்பாய் ஜிஹ்வாசாபல்ய குஹ்யாசாபல்யத்தால் ஸ்ரீமத் ஆழ்வாராசார்யர்கள் ஸித்தாந்தத்துக்கு இழிவுநேரிடும்படி. பெண்ணைக்கொண்டு, நாமரூபங்களைத்தரித்து ஸ்வரூபாநுரூப வ்ருத்தி விசேஷங்களொன்றுமில்லாமல் ஸ்வரூபவிரோதிகளை த்யஜிக்கமாட்டாமல் தேஹாத்மாபிமானிகளாய், அஹங்காரக்ரஸ்தராய், க்ருஷ்ணசின்ஹங்களைத்தரித்து அந்தக்ருஷ்ணனோடே எதிரிட்ட பௌண்ட்ரீக வாசுதேவனைப்போலேயும், அம்ருதார்த்திகளாய்த்

தேவதாகோஷ்டியுள்புக்கராஹுகேதுக்களைப்போலேயும், ஸ்வ காரியபரராய் வாநராகாரங்களைத்தரித்தஸகலாரணைப்போ லேயும், திரிகிற பாஹ்ம்ஸாபரபுருஷ பரிக்ரஹ பரத்ரவ்யாப ஹாரதத்பரராய், சிலதேசங்களில் சண்டிப்ரசண்டியென்றும் சிலதேசங்களில் கொத்தம்மை கோதம்மையென்றும், சிலதே சங்களில் கூசிமாசியென்றும், சிலதேசங்களில் ஆண்டாளம் மை சாண்டில்யம்மையென்றும், வழங்குகின்ற யாதவப்ரகாச ன் குமாரத்திகளான இரண்டு விதவஸ்த்ரீகள் அதிகாமிகளாய்ப் புருஷாலிங்கனஞ்செய்ய எண்ணங்கொண்டு ஸ்ரீவைஷ்ண வர்களிடத்தில் பரிஹஸித்து, அநேகக்ருஷிகள்செய்ய அவர் களொருவரும் இவர்களை லக்ஷியஞ்செய்யாமலிருக்க, ராமாநுஜ ஸித்தாந்தத்தி லிருக்குமவர்கள் நம்முடைய எண்ணத்துக்கிசை யவில்லையாதலால் அவர்களிருக்கும் ஸித்தாந்தத்தைஜகத்தில் இ கழ்ச்சிசெய்விக்க விரோதமானநடத்தைகளையுண்டாக்கி நம்மு டைய இஷ்டப்ரகாரம் நடத்தலாமென்ற எண்ணங்கொண்டு இ ருவரும் ஆழ்வாராசார்யர்கள் ஸ்ரீஸூக்திகளுக்குத் தப்பர்த்தங் களைக்கற்பித்து துர்மார்க்கநடத்தைகளுக்குச் சந்தோபங்கமாயு ம், அர்த்தங்கள் பொருந்தாமலும், சில ச்லோகங்களைக்கற்பனை செய்தும்,இவைபூர்வாசார்யர்கள் அநுஷ்டித்துஸாதித்தவையெ ன்றும்சொல்லி, தாங்கள்செய்த அபார்த்தங்களைப் பூர்வாசார்ய ர்கள் ஸ்ரீஸூக்திகளுடன்சேர்த்துக்கொண்டு இராவணன்ஸந்யா ஸியானற்போ லிந்த ஸ்த்ரீகள் பாதகமலத்துடன் ஊர்த்வபுண் ட்ரங்களும் துலஸி நளினாக்ஷமாலைகளும்தரித்துக் காஷாயத்தா ல் ப்ரபன்னபாகை, அங்கி, சாாய், போர்வை யென்னுமிவை களையுடுத்தி, விசிறிக்கு த்ருதண்டமென்றும், அக்ஷயபாத்ரத்தி ற்குக் கமண்டலமென்றும் பிடித்து; யதிகளென்றவேஷம்பூண் டு, ராமாநுஜ விக்ரஹத்தைத் திருவாராதனமாக எளச்செய்து கொண்டு, சண்டியென்றவள் ஏகாக்ஷரீமதமென்றும், ப்ரசண்டி யென்றவள் சதுராக்ஷரீமதமென்றும், வடதேசம்போய் ஸித் தாந்தப்படுத்த, தத்பூர்வம் எம்பெருமானார் தரிசனம்நிர்வஹித் துக்கொண்டு போருகிறகாலத்தில், யாதவப்ரகாசன் இவருடை

ய வைபவமெல்லாங் கண்டிருந்தும், மாத்ருவசனத்தாலும்,பக வதாஜ்ஞையாலும், அவரையாஶ்ரயித்து, ஸ்ரீவைஷ்ணவஸித்தா ந்தத்திலே ப்ரவர்த்திக்கக்கண்டு, தத்புத்ரஶிஷ்யர்கள் ஸஹிக்க மாட்டாமல் அந்தத்தரிஶனத்திலே அபதேப்ரவர்த்தியுண்டாக் கும்படி தூஷிக்கவேண்டுமென்று நினைத்து, பூர்வாசார்யர்கள், (భక్తిరష్టవిధా హ్యేషా। యస్మిన్ మ్లేచ్ఛేపి వర్తతే। స విప్రేంద్రో మునిశ్శ్రీమాన్) என்று, அருளிச்செய்த பகவதாஜ்ஞையாலே விலக்ஷண ஸம்பந்த ஸ்வீகாரத்தை அங்கீகரிக்க அதுவே ஹேதுவாக்கி ஸர் வவர்ணஸாங்கர்யமுண்டாக்கிச் சரமஶ்லோகத்தில் ஸர்வதர்மப ரித்யாகத்தை விதித்ததே ஹேதுவாக்கி அநேகஞ் செய்யத்த காத காரியங்களுடன் கொரிவிமதமொன்று ஏற்பாடு செய்து (ఐకంఠ్యజరంమాకాషేణః।) என்கிற இரண்டும் த்யஜிக்கவேண்டு மென்று நிஷித்தானுஷ்டானத்தையும் ப்ரவேஶிப்பித்து, இது சரமதர்மமென்று சிலக்ரந்தங்களைக்கற்பித்தனர்கள். மேற்படி சண்டிப்ரசண்டிகள்செய்த மதங்கள் நம்முடைய அபிப்ராயத் துக்குத்தகுந்தனவாயிருக்கின்றனவென்று அவர்களுடன்கலந்து தத்காலவர்த்திகளான சில அஸாரப்ரக்ருதிகளை மோஹிப்பித்த னர். அர்த்தகாமபரவஶருக்கு ஸஹகாரமாகையாலே, அக்கால த்திலும் இக்காலத்திலும் ஜிஹ்வாசாபல்ய குஹ்யாசாபல்யத்து டன் ப்ரவேஶித்தவர்களுக்குப் பள்ளமடையாரென்றும் ரஹ ஸ்ய குத்ருஷ்டிகளென்றும்பேர். மேற்கண்ட சண்டிப்ரசண்டி கள் தரித்த வேஷத்தை இப்போ தநேகவிடங்களில் ஸ்த்ரீகள் தரித்திருப்பதைக்காணலாம். ப்ரத்யக்ஷத்தில் பள்ளமடையாரி ல்யாதவப்ரகாஶன் புத்ரஶிஷ்யர்கள் தரித்தவேஷத்தைப் புருஷ ர்கள்விசிறியும், கையில்புத்தகமும், அக்ஷயபாத்ரமும் எடுத்துக் கொண்டு வருகிறதையுங் காணலாம். ஷை சண்டி ப்ரசண்டிகள் யாதவப்ரகாஶனது புத்ரஶிஷ்யர்களுடன்கூடி வ்ருத்திசெய்த விதமும், அநுஷ்டித்துக்காட்ட நடந்துவரும் விவரமும் எவ்வி தமெனில், சிலவருஷத்துக்குமுன் ஸ்ரீஜநார்த்தனத்தில் ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸராமாநுஜதாஸருக்கும் பள்ளமடையானாகிய ரங்கை யனென்பவனுக்கும் ஸித்தாந்த விஷயமாய் விவாதம் நேரிட்டு

சிலமத்யஸ்தர்களைச்சேர்க்க, அந்தமத்யஸ்தர் எல்லோரும் ஸம்ப்ரதாயந் தெரியாதவர்களாகையால் பள்ளமடையான்பக்ஷம் அநுகூலமாய்ச் சிலவார்த்தைகளைச்சொல்ல, அவர்களில் காந்தோபயந்த்ர ப்ரபன்னனென்னும் ஓர்ஸ்வாமி பள்ளமடையார் செய்துவரும் துஷ்க்ருத்யங்களை நன்றாக அறிந்தவர். அவர்களுடைய துர்நடக்கையை அங்கிருக்கும் மத்யஸ்தர்களுக்கு நன்றாய்த்தெரியும்படி விவரிக்க, மத்யஸ்தர்கள் யாவரும்வியப்படைந்து பள்ளமடையானை அவமானப்படுத்தி ஸ்ரீமான், ஸ்ரீநிவாஸராமாநுஜதாஸரது கக்ஷியே பூர்வாசார்யர்கள் ஸ்ரீஸூக்திகளுக்கு ஒத்திருக்கிறபடியா லதுவே நியாயமானதென்றும், ஸத்யமென்றும், ஸ்திரப்படுத்தினதை அடியில் சுருக்கமாய் விவரிப்பதால் புத்திமான்கள் செவ்வையா யூஹித்துப் பார்த்தால் வைஷ்ணவர்க ளின்னாரென்றும், அவைஷ்ணவர்க ளின்னாரென்றும்விசதமாகும்.

## பள்ளமடைத்துரா நுஷ்டானப்ரகடனஸங்க்ரஹம்.

சண்டப்ரசண்டக ளிருவருந்தொண்டநாட்டைவிட்டு ஆந்த்ரதேசப்ராஹ்மண அக்ரஹாரத்தில் சேர்ந்து தங்கள்மனத்துக்கு ரம்யமாயும் வித்யையி லதிகராயுமிருக்கிற இரண்டுவிடபுருஷர்களைக் கைவசஞ்செய்துகொண்டு தங்களுடைய அபிப்ராயங்களை வ்ருத்திசெய்யும்பொருட்டுத் தாங்க ளேற்பாடுசெய்த துஷ்க்ருத்யங்களுக்குத்தகுந்த அபார்த்தங்களைப்போதிக்க, அவர்கள் யாதவப்ரகாசனுடையபூர்வாச்ரமபுத்ரசிஷ்யர்களானதாலும் ராமாநுஜஸித்தாந்தத்தைத் தூஷிக்க எண்ணங்கொண்டவர்களானதாலும், யவ்வனதசையோடிருந்ததாலுமிந்தமதங்கள் நமக்கநுகூலமானவையென்றெண்ணி, தம்முடையவித்யாசாதுர்யத்தால்ஸகலரும் ப்ரமிக்கும்படி ஷையார்செய்த அபார்த்தங்களுடன் தங்களுடைய கற்பனையுஞ்சேர்த்து ஜனங்களுக்குப் போதிக்கத்தொடங்கின தெவ்விதமெனில், அவர்கள்தேசத்தில் ஒரு மடங்கட்டிவைத்து, அதில்ராமாநுஜ விக்ரஹத்தைஸ்தாபித்து, சிலரை மடசிஷ்யர்களாகச்சேர்த்து, இந்தமதங்கள் பூர்வாசார்யர்களால் ஸ்தாபிக்கப்பட்டு அவர்களனுஷ்டித்துக்காட்டினவை

களென்றும், ராமாநுஜருடைய திவ்யாஜ்ஞையென்றும், நம்பிக்கை யுண்டாகும்படி ப்ரஸங்கித்து, நாமனுஷ்டித்தால் ப்ரஹ்மருத்திராதிகளுக்கெட்டாதபரமபதத்தை அடையலாமென்றும் ஸத்யத்துடன் நம்பிக்கையுண்டாகும்படி புளுக, அதை நம்பி யேமாந்தவர்கள்சிலரும், குஹ்யாசாபல்யத்தால் சிலரும், ஜிஹ்வாசாபல்யத்தால் சிலரும், நமக்கனுகூல மிதுவென்றும், திருட்டுத்தனமில்லாமல் ராஜபாட்டையாய் நமதிஷ்டப்படி ப்ரவர்த்தித்துப் பரபுருஷர்களைப்புணரலாமென்றும், சில விதவை ஸ்த்ரீகளும், காமாந்தகாரத்துடன் விபசாரத்தொழிலே ஆபரணமாகத்தரித்திருக்கும் சிலமாங்கல்ய ஸ்த்ரீகளும், இப்படிக்கநேகஜனங்கள் ஏகாக்ஷரி, சதுராக்ஷரி, கொரிவியென்னும்மூன்றுமதங்களில் அவரவர்களுக்கு எது எது உத்தேசப்பட்டதோ அதுகளில்ப்ரவேசித்து அம்மதங்களை நாலுபக்கங்களிலும்போய் ப்ரசித்தப்படுத்த, கொரிவிமதமொன்றும்நசித்து மற்றவிரண்டும் வ்ருத்தியாய்வருகின்றன. கொரிவிமதம் நசித்தகாரணம் அடியில்காணலாம், இம்மூன்று மதங்களில் ஏகாக்ஷரிக்குச் சதுராக்ஷரி ஸ்ரேஷ்டமென்றும், சதுராக்ஷரிக்குக் கொரிவிமதம் ஸ்ரேஷ்டமென்றும், குழறுவர்கள். இம்மூன்றுமதஸ்தர்களுக்குமேல்வேஷமும், பாஷையும் ஒக்க, சொல்லத்தகாதகேட்கத்தகாத துஷ்க்ருத்யங்களே, சரணுகதியென்று பேர்வைத்து நடத்தப்பட்டு வருகின்ற துராசாரம் ஒரேவிதமாகவுஞ்சிலபாவங்களுக்குத்தக்கநூல்கள் வெவ்வேறுவிதமாயிருக்கின்றன. அந்தநூல்களையும் மற்றநடத்தைகளையும்விஸ்தரிக்கவேண்டுமென்றால்ஆயிரமுகமிருந்தாலும்முடியாது. இம்மதங்கள் தாவாநலம்போலே வ்யாபித்து வாராநிற்க, அக்காலத்திலேயே, எம்பெருமானர் அநேகரைப்பிடித்துசிக்ஷித்து அவர்கள்கிரந்தங்களைவாங்கிமுறித்துத்தக்தமாக்கி யிருந்தும், கலிதோஷத்தால் மீளவும் அன்றைக்கன்று அபிவிருத்தியாய் ஸிஷ்டர்கள்ஹிப் பொன்று வெளியிடாதே ஸ்வகோஷ்டிக்கனுகூலமானர்க்கே இதுஸிஷ்டாசாரமென்றுசொல்லி, தக்தமானக்ரந்தங்கள்போக மற்றக்ரந்தங்களையுபதேசித்துவர, அத்துடன்பின்னேர்கள்சிலக்ரந்தங்களைச்

செய்து உபதேஶிக்க,இப்போதெங்கும் வ்யாபித்திருக்கின்றன. அதின்விவரங்கள், சிலவற்றைஸங்க்ரஹமாய்த்தெரிவிப்பது யாதெனில், உபதேஶம்பெறுவதற்கு ஶரணாகதிநிஷ்டையென்றும், சரமநிஷ்டையென்றும் நிர்ப்பரத்வநிஷ்டையென்றும், பஞ்சமோபாயநிஷ்டையென்றும், த்வயானுபவநிஷ்டையென்றும், இப்படி சிலபேர்களைச்சொல்லுகிறார்கள்; ஶரணாகதியாகுங்காலத்தில் கல்யாணத்தில் நடக்குஞ்சடங்குகளைப்போல் அநேகசடங்குகள் நடப்பிக்கிறார்களாகையால் அதற்கு வேண்டிய ஹோமக்கிரியைகளைச் சித்தப்படுத்தி ஆசார்யனிடத்தில் விண்ணப்பஞ்செய்து, அவரது நேமனப்படிமுன் சரணாகதியான ஸ்த்ரீபுருஷர்களுக்கு த்வஜாரோஹண உத்ஸவத்திற்கும், மற்றதிருக்கல்யாண உத்ஸவங்களுக்கும், எழுந்தருளவேண்டுமென்று ஆசார்யன்நேமித்தபடி விண்ணப்பஞ்செய்வர்கள். ஏகாக்ஷரிகள் இரண்டுநாளுத்ஸவமும், மற்றஇருதிறத்தாராகிய சதுராக்ஷரி கொரிவிமதஸ்தர்கள் மூன்றுநாளுத்ஸவமும் நடத்துவர்கள். ஷை ஏகாக்ஷரிகளில் சிலர் ஒருநாளுத்ஸவமும் மற்ற இருதிறத்தாரில் சிலர் இரண்டுநாளுத்ஸவமும் நடத்துவர்கள். அந்த உத்ஸவமாவது, ஆசார்யன்க்ருஹத்தில் அல்லது ராமாநுஜகூடமென்னும் பொதுவிடத்தில் ஆசார்யன்நேமனத்தின்பேரில் அக்கூட்டத்திலொருவன் ஆசார்யன். அவனதுமனைவி நூதனஶிஷ்யருக்காக, இவர்கள் அநந்தகோடி ஜன்மங்களெடுத்து இப்போது நம்மையறிந்து ஶரணென்று வந்தார்கள். ஆகையால், இவர்களை ஆட்கொள்ளவேண்டுமென்று புருஷகாரஞ்செய்யஷையானங்கீகரித்து ஆராதனைக்குநியமிக்கக்கோஷ்டியிலொருவன் பதங்களுக்குப் பரிமளத்ரவ்யங்களைச் சேர்த்த தீர்த்தத்துடன்திருவாராதனக்ரமம்போல் தொடங்கி, நலுங்கிட்டு அந்தமலினத்தை மாத்திரைப்ரமாணமாயுருட்டி வினியோகஞ்செய்தபின் மஞ்சனமாட்டித் தூபதீப நைவேத்யங்களைக் கொடுத்தபின் திருப்பல்லாண்டுதொடங்கி நித்யானுஸந்தானமெல்லாம் முன்பின்பாகக்கூட்டத்தார்ஸேவிக்கப்பதங்களைக்கழுவினஜலத்தைஆசார்யன்தனதுகூட்டத்தாருக்குகொடுத்து, நூதனமாய் ஆஶ்ரயிக்கும் ஶிஷ்

யர்களுக்குத் தேஹஸுத்திசெய்கிறதென்று ஆசார்யன்தன் மூத்திர வஸ்துவை வாயில்விட்டு மேலேயும்தெளிப்பன். அந்த அஸஹ்யமான வஸ்துவுக்குச் சித்தஸாரமென்றும் இன்னுஞ் சிலமாறுபெயர்களையுஞ்சொல்லுகிறார்கள். அனந்தரம்மாகுனத்திற்குமதுரகவியென்றுபேரிட்டுச் சிஷ்யர்களுக்கு விசேஷமாகக் கொடுத்துக் கள்ளுசாராய மாம்ஸாதிகளை அக்கூட்டத்திலொருவன் விநியோகஞ்செய்தவனந்தரம், தரையில்ஸர்ப்பாக்ருதியாயமுதுபடியினுல்மொக்கிட்டுச் சண்டிப்ரசண்டிகளை உடையவராகப் பாவித்தவிக்ரஹத்தை அலங்காரங்கள்செய்து ஒருபக்கம் ஆராதித்தவனந்தரம் கள்ளுசாராய மாம்ஸாதிகளைவிசேஷமாய்ச்சித்தப்படுத்தி அவ்வாசார்யனும் கூட்டத்தாரும் விநியோகங்கொண்டபின் ஆசார்யன்திகம்பரனாய்,வந்திருக்கும் ஸ்த்ரீபுருஷர்களெல்லோரும்திகம்பரர்களாய் அஞ்சலிஹஸ்தராய்நின்றுகொள்வர். அதற்குமாறுபாடானபேர்நாரபதமென்பர்கள், அத்தன்மையான நாரபதத்தோடேயிருக்க ஆசார்யனையும் அவனதுமனைவியையும் மேற்கண்டசேஷபனன்பின்பேரில்கோடிப்புடைவை முதலானதுகளை விரித்து, அதின்பேரில் அஷ்டதளபத்மமொன்றெழுதி இருத்தி ஷெ பான்பின்பேரில் ஆசார்யன் ஸ்த்ரீயுடன் கிரீடாஸல்லாபஞ் செய்யும்போது தன்மனைவியின்றலையை ஸிஷ்யன் தொடையின்பேரில் பொருந்தப்பிடிக்கச்செய்து அவளது உச்சி, கண், காது, மூக்கு, வாய்உதடு, ஸ்தனங்கள், நாபி, உபஸ்தமுதலான விடங்களை அட்டபூர்த்திகளென்று பேரிட்டு அவ்வவ்விடங்களை ஆசார்யன் நாவினுல் சுவைத்தபின்பு ஸ்த்ரீயைப் பெரியபிராட்டியாரென்றும், புருஷனைப் பெரியபெருமாளென்றும் பாவித்திருக்க, அனந்தரம் நாதவிந்துகளை அவ்வாசார்யன்வாயினுல் க்ரஹித்து பாலமுதில்சேர்த்து மற்றெல்லார்க்கும் உத்ரணியால் விநியோகஞ்செய்யுமுன்பு தனுத்பத்திஸ்தானங்களை யெல்லாரையும் நாவினுல்சுவைக்கப்பண்ணும்துஷ்க்ருத்தியத்தை நடத்தும்போது மறுபடியும் அபரிமிதமாய் கள்ளுசாராயமாம்ஸாதிகளை விநியோகங்கொண்டு சாராயபுட்டியை ஸடகோபமென்று எல்லார் தலைகளிலும் தோ

ன்களிலும் வைத்து, அந்தப்புட்டிகளையும் கட்குடங்களையும் த லைமீதில்வைத்துக்கொண்டிருக்கும் ஸமயத்தில்திருநாமங்களெ ன்றுசிலபாட்டுகளைப்பாடுவர்கள். அதாவது (பட்டுச்சாத்தரோ) எ ன்றும், (மறவஜாலநம்மா) என்றும் (மிஞ்சிஞக்ரூராத்மூனிநன் னு பொஞ்சியேவிரோ) என்றும் இப்படிக்குச் சிலபாட்டுகளைப் பாடிக்கொண்டு,மலத்தைத்தின்னும் புழுத்தநாய்கள் வேதமந்தி ர யுக்தமாகவைத்த புரோடாசத்தில்வாய்வைத்தாப்போல் பெரி யாழ்வாருடையதிவ்யபாசுரமாகிய "குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே" என்கிறபாசுரத்தைஇவர்கள் துர்நட த்தைகளுக்குத் தகுதியாய்த் தப்பர்த்தஞ்செய்துகொண்டு பே ய்களைப்போலக்கூத்தாடுவர்கள், இதுவரையில்சொன்னதை, மு தல் நாளுத்ஸவமென்று சொல்லுவர்கள். இரண்டாநாள் ஆசா ர்யன் அவன்மனைவி இவர்களை ஸ்ரீ ஸ்ரீயஃபதிகளென்று பாவித் து நலங்கிட்டு மஞ்சனமாட்டிவைத்து மத்தத்ரவியங்களை வினி யோகங்கொண்ட வனந்தரம் ஆசார்யனை முன்புபோலாராதித் து அவன்பதங்களில் காவிக்கல்சேற்றையப்பிச் சித்தப்படுத்தி யிருக்கும் சித்தான்துண்டில்கால்களை ஒத்தி ஆஶ்ரயித்தவர்க்கு அதைத் திருவாராதனமாகக்கொடுத்து மீதியாயிருக்குங் காவிக் கல்சேற்றில்மலமூத்ராதிகளைச்சேர்த்துத் தீர்த்தவடியென்றுதிர ட்டிக்கொடுப்பன். அனந்தரம்மூன்றும் நாளுத்ஸவத்தில் அ ங்கிருக்குந்தங்கள் கூட்டத்தாரெல்லோரும் "கங்குலும்பகலு ம்" முதலானபாசுரங்களைச் சொல்லிக்கொண்டிருக்கையில்ஷை ஆசார்யன் ஶிஷ்யஸ்த்ரீயுடன் ஶிஷ்யனை அங்கீகரிக்கிற தென்று ம் கேட்கஸஹிக்கக்கூடாத க்ருத்யங்களைஅஸங்கேயமாகநடத்தி நாத, விந்து, மல, மூத்திராதிகளுக்கு மாஸானுஷ்டானமென் றும், காலாகால அனுஷ்டானமென்றும், நித்யானுஷ்டானமெ ன்றும், இன்னம் இவைகளுக்கு ஆழ்வார் ஆசார்யர்களென்றும் பேர்வைத்து, அவைசாமார்த்தங்களென்று, ஸர்வோபாய, ஸர் வோபேயங்களாக அக்கூட்டத்தர்களெல்லாரும் புஜிக்கிறார்கள்.

இவர்கள்ஶரணகதி உத்ஸவங்களில் நடத்துங்க்ருத்யங்களை ஷை க்ரந்தத்திலிருக்கிற ப்ரகாரம் விவரமாய் எழுதலாமென்

றுயோசித்தால் ...ரந்தம் விஸ்தாரமாவதன்றிக்கே, வாக்கினல் சொல்லவ ... ல்கேட்கவும் மனத்திருலெண்ணவும் தகாத க்ருத்திய ... யிருப்பதால், இவ்விதமான அவஸஹ்யங்களைலஜ்ஜையி ... றுதாமல்விடலாயிற்று. ஸத்ஸம்ப்ரதாய ஶரணாகதிக்குப்ரமாணம். (ఆనుకూల్యస్యసంకల్పః। ప్రాతికూల్యస్యవర్జనం। రక్షిష్యతీతివిశ్వాసో గోప్తృత్వవరణంతథా। ఆత్మనిక్షేపకార్పణ్యం।షడ్విధాశరణాగతిః।) என்றிப்படி, விஶேஷார்த்தமாயிருக்கும். கம்பீரமானவிலக்ஷணவார்த்தையை இவர்கள் நடத்திவரும் துர்மார்க்க க்ருத்யங்களுக்கு உபயோகிக்கிறார்கள். புத்திமான்கள் தீர்க்கயோசனையுடன் பூஹித்தால் இதன்தீமை அவரவர்கள் மனத்துக்கே ஸ்பஷ்டமாகும்.

இப்போதுபஹிரங்கத்திலிவர்களுடையமாறுபாடானகபடங்களையாவத்ரர்களும் ஸர்வஸாதாரணமாயறியும்படி தெரிவிப்பதுயாதெனில், ஷை உத்ஸவத்தில் மூன்றாம்நாள், ஷை கூட்டத்தார் வரிசையெடுப்பதென்றும், மொய்யிடுகிறதென்றும், கள்சாராய மாம்ஸாதிகளைக்கொண்டுபோவார்கள், ஐயோ! அவைகளுக்குக்கம்பீரமானபேர்களை உபயோகிக்கின்றார்கள். அது எப்படியென்றால்! கள்ளுக்குஆகாஶப்பாலென்றும்,மோரமுதென்றும், வாருணீமதுவென்றும், சாராயத்துக்குவஸ்துவென்றும், எண்ணெய்க்காப்பென்றும்,மங்களவஸ்துவென்றும், மோக்ஷத்ரவ்யமென்றும்; ஸுஜ்ஞானரஸமென்றும்; மாம்ஸத்துக்குக்கணபதார்த்தமென்றும்; மங்களத்ரவ்யமென்றும்; அலரிப்புஷ்பங்களென்றும், தண்டுஎன்றும், மோக்ஷத்ரவ்யமென்றும்; ஆட்டின்காலுக்குத் திருவடித்ரவ்யமென்றும், ஶிரஸுக்குத் திருமுடித்ரவ்யமென்றும், குடலுக்குப்-புஷ்பமாலையென்றும், குடல்பைக்குத் - திருப்பொஜ்ஜஎன்றும், ஈரலுக்கு-கொலஎன்றும்.தாழைப்புஷ்பமென்றும், ரக்தத்திற்கு-ஶ்ரீசூர்ணமென்றும், பகடமென்றும், பன்றிக்கறிக்கு-நடைக்கும்மடியென்றும், கும்மடித்ரவ்யமென்றும், கோழிமுட்டைக்கு-திருமணிஉண்டையென்றும், கோழிக்குக் - கிளிக்கட்டையென்றும், கருவாட்டுக்கு - ஶ்ரீதாளமென்றும், திருச்சுள்ளிகளென்றும், செக்கப்பொடியென்றும்,

மீனுக்கு - நீர்வாழையென்றும், கதம்பபக்ஷிபங்களென்றும், இறாலுக்கு - ரோமரிஷிகள் என்றும், ரங்காலு என்றும், உங்கராலென்றும், சின்னக்கூனிக்குத் - திருவரங்கப்பொடியென்றும், இவ்விதமாய் மாறுபாடானபேர்கள் அநேகஞ்சொல்லிக்கொண்டு தின்பர்கள். இதைப்போலவே ரஹஸ்யத்ரயம் அர்த்தபஞ்சகமுதலான ரஹஸ்யங்களுக்கு மாறுபாடான அர்த்தங்களைச் செய்துகொண்டு சொல்லத்தகாத அக்ரமங்கள்செய்துவருகிறார்கள்.

இப்படி மாறுபாடான அர்த்தங்களைத் திருநாமங்களென்னும் பாட்டுகளாற்பாடியிருக்கிறார்கள், புத்திமான்கள் அவைகளைக்கேட்டு பூஷித்துப்பார்க்க விஶதமாகும், அவர்களை, ஶரணாகதியென்று நீங்கள்நடத்தும் க்ருத்யங்களுக்கு ஆதாரமென்னவென்றுகேட்டால் மந்த்ரராஜரத்ன ஶாஸ்த்ரத்தின் இரண்டாம் ப்ரகரணத்தில் சரணாகதி வைபவஞ்சொல்லு மிடத்தில்(అష్టాక్షరే ణాష్టదళేచపద్మం। భూరేఖను ధ్యాంతరచక్రవర్తీ। అనంతకోటి ప్రభ సూర్యరూపం। ధ్యాయేశివం శాంతమఖండతేజం।) என்றும், (సహశేన ప్రయుక్తేన। పంచకాన్యుత్తరానిచ। లిఖ్యం తేష్టదళేపద్మం। పరబ్రహ్మనితీరథం।) என்றுமிருப்பதால் பீஜாக்ஷரங்களுடன் எழுதின அஷ்டதளபத்மமென்னும் ரதத்தில்பாப்ரஹ்மமான ஸ்ரீமந்நாராயணன் வஸிக்கிறான் அவ்விடத்திலேயே அஷ்டாக்ஷரங்களும் அஷ்டாக்ஷரிமந்த்ரமும், அஷ்டவிக்ரஹங்களும், தீர்த்தப்ரஸாதங்களும், மிதுனகைங்கர்யமும், ஸ்வபாவமாக இருக்கின்றனவென்றும், ஜாக்ரத ஸ்வப்ன ஸுஷுப்திகளில் ப்ரமையடைந்த ஜீவனுக்கும், ஈஶ்வரனுக்கும் அங்கக்ரமம், (స్థూలంచసూక్ష్మకంచైవ। కారణంనిర్మలాంగకం। ఆనందచిన్మయంచైవ। చిద్రూపంశుద్ధమేవచ। అష్టాంగసర్వదేహానాం। అష్టాక్షరమిశ్రితంభవేత్) என்றிருப்பதாலிந்தரஹஸ்யங்களை அறிந்த தேஶிகராலே உபதேஶம்பெற்று அந்த அஷ்டாக்ஷரி மந்த்ரத்தை மேல்சொன்ன பத்மகுஹராந்த்ரத்தில் ஸ்தாபித்து அதின்மேல் பரமபாரனை ஸ்ரீ அச்சுதனென்னும் ஆசார்யனை ப்ரதிஷ்டிப்பித்து ஸித்தஸாரமென்னு மூத்ரத்தைமே

கரித்து ஸ்வீகரித்தபின் (పృథ్వీబీజంతథామాంసం। ఆపోద్రవ్యసురా మయం।ఆత్మజీవసమాయుక్తం।జీవజీవేనభక్షితం) என்றதில் மோக்ஷ த்ரவ்யங்களென்னு மதுமாம்ஸங்களிரண்டும் ததாசார்யனுக்கு ஸமர்ப்பித்து, தத்சேஷம் மிதுனகைங்கர்யமென்னும் ஸ்த்ரீபுருஷஸம்யோக ஸாரத்தை யநுபவிப்பவர்களே வைஷ்ணவர்களென்றும், ததநுஷ்டானத்துடன் அஷ்டபூர்த்தி மிதுனஸாரம் ஒங்காரமென்னும் குஹையில் ப்ரகாசிக்கும் குருவுக்கர்ப்பிதஞ்செய்து, தன்மயானந்தமான தத்சேஷத்தைப்புஜிக்கிறவர்களே வீரவைஷ்ணவர்களென்றும், ஸ்ரீராமமிஸ்ரர் முன்பே திருவாய்மலர்ந்தருளினுரென்று சொல்லுகிருர்கள். இப்படிப்பட்ட அநுஷ்டானங்களைப் பூர்வாசார்யர்களெல்லோருமநுஷ்டித்தார்களென்றும், இப்போதிருக்கப்பட்டவர்களில் சிலஸ்வாமிகள் அநுஷ்டிக்கிருர்களென்றும், நூல்போட்டுக்கொண்டிருக்குமவர்களில் சிலப்ராக்ருதர்கள் தள்ளிவிட்டார்களென்றும், இப்போது, ஸிம்ஹாஸநாதிபதிகளென்றிருக்கும், ப்ராஹ்மணர்களாகிய ப்ராக்ருதர்களிடத்திலும், மற்றமாயாவாதிகளிடத்திலும், ஜலபானஞ்செய்யப்போகாதென்றும் சுண்ணும்புதோஷஞ்சுட்டுப்போட்டாலும்போகாது, அந்ததோஷம்ஞானவிரோதி யென்றுமிருப்பதால் யாரிடத்திலும் தீர்த்தப்ரஸாதங்கள் பெற்றுக்கொள்ளப்படாதென்றும், பெற்றுக்கொண்டால் உங்களுடைய ஆத்மாவனர்த்தப்பட்டுப் போகுமென்றும் தங்களையாஸ்ரயித்தவர்களுக்கு உபதேசிப்பது மன்றிக்கே இந்தச்சரமாநுஷ்டானங்களை இப்போது திருமலையில் பெரியஜீயர்மடத்திலும், கோயிலில் உடையவர் மடத்திலும், வானமாமலைமடத்திலும், அகோபிலமடமுதலான இடங்களிலும், இந்தமதத்துக்குப்புறம்பான தத்தாத்ரேயமடத்தாரிலும், இன்னுமநேகர்களிலும், அதிகரஹஸ்யமாய் மதுமாம்ஸ முதலானவைகளுடன் அநுஷ்டித்து வருகிருர்களென்றும்; உடையவர்மடமுதலானவிடங்களிலிருக்கும், ஆர்யாநுஷ்டானத்துக்கும் எங்களநுஷ்டானத்துக்கும் பேதமில்லையென்று ஸகலரும் அறிய ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கோயில்முதலான திவ்யதேசங்களில் மர்

யாதை நடந்தவுடன் எங்களுக்கு விசேஷமர்யாதை செய்யும்படி ஸ்ரீஉடையவர் நியமித்திருக்கிறாரென்றும்; நால்போட்டுக்கொண்டு ஆசார்யர்களென்றிருப்பவர்கள் கர்மத்தையவலம்பித்துத் திவ்யமான ௭௪ அநுஷ்டானத்தைக் கைவிட்டார்களென்று எங்களை க்ஞானுநுஷ்டானபரர்களாக்கி சாத்தாத ஸ்வாமிகளென்றும் விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் தாஸநம்பிகளென்றும் விசேஷித்திருநாமங்களைச்சாத்தி ஸகலருக்கும்ஜ்ஞானோபதேசம் செய்யும்படி ஸுதர்சன பாஞ்சஜன்யங்களை நேமனத்துடன் உடையவர்ப்ரஸாதித்தாரென்றும், இதற்குத்திருஷ்டாந்த்ரம் ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசாரத்தில் எங்களை ஶ்ரேஷ்டப்படுத்தியிருப்பதைப் பார்த்துக்கொள்ளலாமென்றும் சொல்லிவர, மூடஜனங்களதைநம்பி ஆசார்யபுருஷர்களைத் துச்சமாக எண்ணி அவர்களைஜ்ஞானஹீனர்களென்றும்,ஸ்ரீஉடையவர்மஹிமைகளையறியார்களென்றும், தூஷித்து, நம்முடைய சாத்தாதஸ்வாமிகளேவிசேஷஜ்ஞர்களென்றும் சிலர்ஆஶ்ரயித்தும், ப்ரேமைவைத்துஞ்சிலர் வடவாக்னியில் விழுந்தகொதுகுகளைப்போல் அபசாரத்தால்நஶித்தழிகிறார்கள். துர்மார்க்கப்பள்ளமடையாரென்றும், ஆழ்வாராசார்யர்கள்திருவுள்ளக்கருத்துக்கு விரோதிகளென்றும், ஸ்ரீஉடையவர்நேமனப்படியிருக்கும் சாத்தாதஸ்வாமிகளின்னுரென்றும் எங்கள்பூர்வாசார்யரானபிள்ளைலோகஞ்ஜீயர் அருளிச்செய்த ஸ்ரீவைஷ்ணவ சமயாசாரத்தில் ஶ்ரேஷ்டபடுத்தியிருக்கும் விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவர்களின்னுரென்றும் ஸகலருமிதனடியில்வரும் ஸங்கதிகளாலறியலாகும். ப்ரத்யக்ஷபரமபதமான கோயிலிலெழுந்தருளி ஸந்நிதி கைங்கர்யங்களைக்குறையறநடத்திவரும் தாஸநம்பிகள், ஏறக்குறைய ஐம்பதுதிருமாளிகையார் ஸ்ரீராமாநுஜர்திவ்யாஜ்ஞையின்படிசதாசாரத்தை அநுஷ்டித்துவருகிறார்கள். இவர்களிடத்தில் தாமஸ ஆஹாரங்களும் துஷ்டநடத்தை முதலான துராசாரங்கள்யாதொன்றுமில்லாமல் மஹா ஆசாரஶீலமும் உண்மையானப்ரதிபத்தியும் ஶ்ரத்தையுடன்செய்யுங் கைங்கர்யங்களும் காணலாம். இவர்கள் திருமாளிகையில் ஶாஸ்த்ராப்யாஸங்களில் அத்யாபகஸ்வாமிகளை

ழுந்தருளி ஸகலகைங்கர்யங்களையும் நடத்தவேண்டுமென்று ஸ்ரீஉடையவர் அருளிச்செய்த ப்ரகாரம் ஸ்வாமிகள் நடத்திக்கொண்டு வருகிறார்கள். இன்னமிவர்கள் ஸ்வரூபவிலக்ஷண ஸீலகுணங்களைக்கடாக்ஷித்துக் ஸேவாகாலகோஷ்டியில் பின்னடிஸேவை செய்யும்படி திருவாய்மலர்ந்தருளி ஸ்தானீகரிலொருவராகச் செய்து விஸேஷமர்யாதைகளை எப்போதும் நடத்திவரும்படி ஸ்ரீஉடையவர் நேமித்தருளினபடியே பின்னிட்ட மடஜீயர்களும் நியமித்திருப்பதால் இப்போதும் நடந்தேறிவருகின்றது. இன்னமும் ஸ்ரீஉடையவர் நேமனப்படியிருக்கும் விலக்ஷணஸ்வாமிகள் ஸ்ரீவில்லிபுத்தூரில் எறக்குறைய இருபது திருமாளிகையாரும், வானமாமலையிலிருபது திருமாளிகையாரும், அவர்கள் திருமாளிகையின் ஸம்பந்தஸ்தர்கள் சுற்றுப்பக்கக் கிராமங்களிலிருக்குஞ் சிலசாத்தாதமுதலிகளும், தென்குருகூர்ப்பக்கங்களிலிருக்கும் சிலரும், திருக்குடந்தையில் இருபது திருமாளிகையாரும், நாச்சியார்கோயிலில் முப்பதுதிருமாளிகையாரும், திருவாலித்திருநகரியிலுஞ் சுற்றுப்பக்கமிருக்கும் திவ்யதேஸங்களிலும், இன்னுஞ்சில திவ்யதேஸங்களிலும், உடையவராஜ்ஞைக்குக் குறைவின்றித் தொண்டக்குலத்துட்புகுந்து ஸ்ரீவசனபூஷணாதிகாரிகளா யெழுந்தருளியிருக்கும் விலக்ஷண சாத்தாதஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் ஸத்ஸம்ப்ரதாயவநுஷ்டானம் நடத்திவருகிறார்கள்.

ஷை துஷ்க்ருத்யங்களைச்செய்துவரும் பள்ளமடையார் கோயில் தாஸநம்பிகளை எங்களுடைய சுற்றத்தாரென்றும் அவர்களுக்குண்டான ஸகலபெருமைகளும் எங்களுக்குண்டென்றும், ஸ்ரீவசனபூஷணாதிகாரிகளான ஸ்ரீசாத்தாதஸ்வாமிகள் நாங்களென்றும் சொல்லிவருகிறார்கள். இவர்களின் தாரதம்யங்களையறிந்து ராக்ஷஸர்களிலும் ஹீனர்கள் பள்ளமடையாரோ என்றும், சைதானிகளென்றும் புத்திமான்கள் நினையாமலிரார்கள், இப்பள்ளமடையாரில் ஜன்மித்தவர்களில் சிலர் இவர்கள்செய்வது துர்மார்க்க க்ருத்யங்களென்றறிந்திருந்தும் பந்துஜனநிர்ப்பந்தத்தால் த்யஜிக்கக்கூடாமல் ஷை துர்மார்க்க ஸாஞ்ஞைகிசெய்

துகொள்ளுகிறார்கள். அநேகர் சண்டாளக்ருத்யங்களென்றறி
ந்து அதில்ப்ரவேஶியாமல் மதுமாம்ஸாதிகளைமாத்திரம் பக்ஷி
க்கிறார்கள், இப்படி யிருப்பவர்களை லோகவைஷ்ணவர்களென்
று தங்கள்கூட்டங்களில் சேர்த்துக்கொள்ளாமல் போஜனப்ரதி
போஜனங்களுக்குத் தூரப்படுத்தி, மற்ற ஶ—பாஶ—பங்களுக்
குக்கலந்துகொள்வர்கள். இந்தப்பள்ளமடையாரில் ஒருவான்மா
விறந்தால் அந்தப்பிரேதத்தைச்சரமவிக்ரஹமென்றுபேரிட்டுச்
சுவரினிடத்தில் ஆணியடித்து ஷை பிரேதத்தைச்சாத்தி உட்கா
ரப்பிணைத்துக்கட்டித் திருமண்காப்பைத் தரித்தவனந்தரஞ் சே
வாகாலஞ்செய்து சரமப்பொங்கலென்று சோறாக்கி மதுமாம்
ஸாதிகளை அப்பிரேதத்திற்குப் படைத்தபின்பு அவைகளை அக்கூ
ட்டத்தரெல்லாரும் மஹாப்ரஸாதமென்றுகொண்டு பன்றிகளை
ப்போலும் கழுகுக்கூட்டங்களைப்போலும் புஜித்துங் குடித்து
ம்வெறியினால்கூத்தாடிக்கொண்டு திருநாமங்களென்கிற பேய்ப்
பாட்டுகளைப்பாடிக்கொண்டு ஆதிவாஹிகர்களென்று நாலுபே
ரையேற்படுத்தி அவர்கள்பாடைசுமக்க ஸ்மஶானத்திற்குக்கொ
ண்டுபோனவனந்தரமு மதுமாம்ஸாதிகளைத்திரைகட்டி அப்பிரே
தத்திற்குப்படைத்து அங்குமண்டபப்படி விநியோகமென்று
புஜிப்பர்கள். இரண்டாநாள்அல்லது அஞ்சாநாள் அஸ்திகிரியெ
ன்று கள்ளுசாராய மாம்ஸாதிகளையும், பால்முதலானவையுடன்
ஸ்மஶானத்திற்குக்கொண்டுபோய்ச் சிலசடங்குகளைச்செய்து
ஒருபக்கம் மதுமாம்ஸாதிகளைவைத்துத்தாங்கள் கொண்டுபோ
ன விக்ரஹத்துக்குப்பூஜித்து அவைகளைப்புஜித்தும் குடித்து
ம் கூத்தாடுவர்கள், இவைகளை யெல்லாத்தேஶங்களிலுஞ் சிலர்
ராத்திரிகாலங்களிலும், சிலர் பகலிலும், நடத்திவருவதைக்
காணலாம். முதல்நாள்தொடங்கி அத்யயன உத்ஸவமென்று
பேரிட்டு மிதமில்லாமல் ஜீவஹிம்ஸைகளைச்செய்து பிணஞ்சு
மந்த ஆதிவாஹிகர்கள் நால்வருக்கும் மரியாதைசெய்கிறதெ
ன்றுசொல்லி மற்றகூட்டத்தாரிலு மிவர்களுக்கதிகமாக மத்
தத்ரவியங்களை இரண்டாவர்த்தி விநியோகங் கொடுப்பர்கள்.
இப்படி பத்துநாள் நடந்தபின்பு பதினொன்றுநாள் தஶாவ

ஸ்ஸு — என்று பேரிட்டு அன்றைக்கும் மதுமாம்ஸாதிகளை விசேஷமாய்ச் சித்தப்படுத்தி அக்கூட்டத்தாரில் தங்கள் துராசாரத்தில் பூர்ணனான ஒருவனை ஆசார்யனாகப் பாவித்து அவனை ஸ்ரீபாததீர்த்ததளிகைப் பிரஸாதங்களைத்தந்து ரக்ஷித்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்து அவனையொரு ஆஸனத்திலிருந்து கால்வைத்திருக்கவுங் கைகளைக்கூப்பிக்கொள்ளவுஞ்செய்து அவனதுகாலின்கீழ் ஒருவாழையிலையைப்போட்டு அதின்மேலொருதளுவத்தைச்சுற்றிவைத்து அதின்மே லவனிரண்டுகால்களையுஞ்சேர்த்துவைத்து அஷ்டபூர்த்தி ஸ்தானங்களென்று சொல்லுகிற உச்சி, கண், காது, மூக்கு, வாய் முதலான வெட்டிடங்களிலும், தூபத்தை யிரண்டுகையாலும் ஒற்றி, கிரமக்ரமமாக மூன்றுவர்த்தி ஸ்பரிசிக்கிற ஒருவன் தன்கையை மூக்கிலாக்ராணஞ் செய்துகொண்டபின், திருத்துழாயைப் பவித்திரவிரற்சந்தி லிருத்திக்கொண்டு அவனது கால்களிற் பெருவிரல்தொடங்கிச் சுற்றி மூன்றுதரங் கழுவினபின்பு தூபதீப மதுமாம்ஸ நைவேத்தியங்களைக்கொடுத்து அனந்தரம், வந்திருக்குமவர்களெல்லோரும் அவ்வாசார்யன் பெருவிரலைவாயினுல் மூன்றுவர்த்தி சுவைத்தபின்பு அவ்வெச்சிற்காலை அவனிரண்டு கைகளினுலும் ஸ்பர்சித்து ஆக்ராணஞ்செய்துகொண்ட பின்பு தீர்த்தஞ்சேர்த்தவன்காலில் அவ்வாசார்யன்தண்டஞ்சமர்ப்பித்து அவனிடமாய்த் தீர்த்தங்கொண்டபின்பு அவ்வாசார்யனந்தத்தீர்த்தபாத்ரம் வாங்கிக்கொண்டு கூட்டத்தார்க்கெல்லாருக்குங் கொடுத்துக்கொண்டுவருகையில், அவனதுகாலின்கீழிருந்த தளுவத்தை யொருவனெடுத்து ஸ்ரீ சடகோபமென்று (కదాపునశ్శంఖరథాంగకల్పక ధ్వజారవిందాంకుశవజ్రలాంఛనం) என்கிற ஸ்லோகத்தைச்சொல்லிக்கொண்டு எல்லார்தலைகளிலும் வைத்து அவ்வாசாரியன் தலையிலும்வைப்பன். அதனோடு அவன்காலிலர்ச்சித்திருந்த திருத்துழாயை ஒருவன் எடுத்துக்கொண்டு அதற்கு ஸ்ரீபாதரேணுவென்று பேரிட்டு ஆசார்யனுக்குமுன்பு கொடுத்தபின் எல்லார்க்குங்கொடுக்க, அவனது நியமனமான பிறகெல்லாருமதை வாயிற்போட்டுக்கொண்டு பங்க்தியாயுட்கா

ர்ந்தபிறகு அக்கூட்டத்தாரிலொருவன் "ஸ்ரீபாஷ்யகாரனென்கிற பேரிட்டுக்கொண்டு சாராயபுட்டியை யொருகையிலும், அவ்வஸ்துவைக்குடிக்கும்வட்டிலை மற்றொருகையிலுமெடுத்துக்கொண்டு அவ்வாசாரியன்கையினால் ஸ்பர்ஶிக்கச்செய்து இரண்டுதரணிதீர்த்தமுங்கொண்டு பிறகுவட்டிலில்சாராயத்தைநிரப்பிமுன்னதாயவ்வாசாரியனுக்கு இடதுகையினால்கொடுத்துவலதுகையினால் மாம்ஸத்தையெடுத்துக்கொடுக்க அவ்வாசாரியன்தேவராஜகோவையென்னுங் கக்ஷியிற்சேர்ந்தவனாகவிருந்தால் முன்னதாய் மூன்றுவட்டில்நிறையசாராயமூன்றுவர்த்தி விநியோகங்கொண்டு இஃதெங்கள் ஶிஷ்டாசாரமென்பான். பல்லேரிமுடிசிங்கரதேசிகன் கோவையென்னுங் கக்ஷியிற்சேர்ந்தவனாக விருந்தால் முன்னதாய்க் கூட்டத்தாரெல்லாரையும் வட்டிலிலிருக்குஞ் சாராயத்தை நாவினால் அடியேன்தாசி, அடியேன்தாசியென்று ஒருவனைஸ்பர்ஶிப்பிக்கச்செய்தபின் இஃதுஎங்கள் ஶிஷ்டாசாரமென்றுஞ்சொல்லி இப்படிக்கிரமொரு கௌரவங்கற்பித்துவழக்காடிக்குடித்தவனந்தரமெல்லார்க்குங் கொடுப்பர்கள். பின்புபன்னிரண்டாநாளுமிப்படிக்கேசெய்துதிருவத்யயனசாத்துமுறையென்றுபேரிடும் நாய்களுக்கு, ஸ்ரீஉடையவரால்நியமிக்கப்பட்டுவரும் ஸத்ஸம்பிரதாய ஶிஷ்டாசாரமுடையசாத்தாதமுதலிகளின் கௌரவமிவர்களுக்கெப்படி ஸித்திக்குமென்பதைப் புத்திமான்கள்எளிதில்க்ரஹிக்கலாம். இப்படிக்குச்செய்யுமவர்களுடைய அநுஷ்டானங்கள்ப்ரகாஶிக்கும்பொருட்டுச்செய்துவைத்துக்கொண்டிருக்கும் மஹாகூடமான ரஹஸ்யங்களில்ஒன்று.

## துர்மார்க்கபள்ளமடைஏகாக்ஷரிரஹஸ்யம்.

தனியன்.—(సర్వార్థే స్థితి సమాధానాయ। సదసద్వ్యాప్తి సమేతః। శాంతో దాంతో జలధే। వందే శ్రీమతి జగద్గురుం) அக்ஷரங்களில் நிரூப்யபரப்ரஹ்மமான ஏகாக்ஷரம் அகாரத்திற்கு ப்ரதேஶமாய் அகாரார்த்தம், உகாரத்திற்கு ப்ரதேஶமாய் உகாரார்த்தம், மகாரத்திற்கு ப்ரதேஶமாயிருக்கும், (మకారో జీవవాచకః) என்கிறபடியே மகாரஶப்தார்த்தம் ஜீவஸ்தானம். ஜீவாத்மாநார என்று

ம், ப்ரவர்த்திக்கிறது. அது எங்ஙனேயெனில் அநேகதேஹங்களைத் தரிக்கையாலே ஜீவமென்றும் பேராகக்கடவது. மரணமில்லாமையாலே நாதமென்றும் பேராகக்கடவது, அந்தநாதத்தில் அயனமாயிருக்கிறவன் நாராயணன். அந்த ஸ்ரீமந்நாராயணன் ப்ரதிபிம்பமானது அநுபவமென்னென்றிருக்கிறபடியே, க்ரமமென்னெனில், (త్ర్యక్షరం స్ఫుటసంయుక్తం। తజ్జీవాక్షర స్థితః। తచ్ఛిష్యశిష్యసంయుక్తం। త్ర్యాణాననువర్తతే) என்கிறபடியே வேதத்திலெடுத்த மூன்று திருவக்ஷரத்திற்கு ஏகாக்ஷரம் அந்தர்யாமியானாற்போலே ஆசார்யனுக்குத் திருமேனியான ஆகாரத்ரயஸம்பன்னரோடேகூடி அநுபவிக்கை, (లక్ష్మీనాథాయ సూత్రాయ। వతీనాథాయ భుజంగః। చతుర్థైక్యానుసంధానం। అనుష్ఠిత్యా యనిభఙ్గరః) என்கிறபடியே நித்யவிபூதியில் எழுந்தருளியிருக்கிற ஆசார்யன் ஈஶ்வரன், ததீஶ்வர ஸ்ரீபாததீர்த்த ஸமாராமம்ஸ ஸ்திரீஸல்லாபத்தாலுண்டான மிதுனைக்ய ஶேஷமங்கீகாரமென்னும் சதுரைக்யாநுஸந்தான மநுஷ்டித்து, ஆநந்தநிர்ப்பரராய் லக்ஷ்மீநாதனை ஸேவித்துக்கொண்டிருக்கும் நித்யஸூரிகளநுஷ்டானமறிந்து அநுஷ்டிக்குமவர்கள் நிர்ப்பரத்வாநுஸந்தான பரரான பூர்ணாதிகாரிகள். ததநுஷ்டானமறிந்து அநுபவிக்கும் மஹாபாகவதரானவர்களுக்கும் நாட்டார்காண்கிற மதுமாம்ஸாதிகளிரண்டும் உத்க்ருஷ்டமாய், ததநுஷ்டானத்திற்கு யோக்யமாயிருக்கும். விபரீதமான துர்க்குணங்கள் வரக்கடவதன்றோவென்னில், (సానుప్రతిబింబస్ధసుస్థానం సర్వపుష్పఫలం। సర్వజీవశుభ ఖాంశియద్భావంతద్భవేత్) என்கிறபடியே, ஸர்வேஶ்வரன் ஸர்வரிலும் அந்தர்யாமியாய்க் கொண்டு ஸர்வகுணஶாந்தி சுகங்களை வ்ருத்திசெய்யுமாபோலே, மதுவும், மதுவின்குணத்தையுடைத்தான தாருணிமது முதலான த்ரவ்யங்கள், ஸஜ்ஜனருக்கு ஸத்குணங்களையும் துர்ஜனருக்குத் துர்க்குணங்களையும் ஸாம்ப்ரதாயர்க்கு ஜ்ஞாநாநுஷ்டானங்களையும் பெருகுவிக்கும். இந்தஸமஸ்தகுணங்களையும்பிறப்பிக்கும் ஶ்ரேஷ்டத்ரவ்யமும் ததநுஷ்டானமும். பாரப்ரியத்தோடே யநுபவிக்கையும் பாராநுபவம் ஸ்வப்ரியத்தோடே

யனுபவிக்கையும் நரகப்ராப்தி. இவ்விதம் ஶ்ருதியிலிருக்குமோவென்னில், இருக்கும். (మధువాతోఋతాయతే।మధుక్షరంతిసింధవః।యెవోసధాన్యరాజోహ।వారణామధుసంయుతి) மற்றொருஶ்ருதியில், (అథఽజ్వలతిజ్ఞాతిరహ మస్విజ్ఞాతిజ్ఞలతిబ్రహ్మైసపరిహాస్త్రైబ్రహ్మైహామస్మిరహామేహ । హదూజ్యోభోమిస్వాహాఆపోజ్యోతిరకంమమధఽం) மற்றொருஶ்ருதியில் (హిరణ్యపాత్రంమధోఃపూర్ణంతధాతిమధుమధుసంపన్నంసుసంపన్నంమధుమాన్నవః।పతిరాంధేఘఽవోభవంతుసమధుమధుం) என்றும், ஸ்மிருதியில், (పితృపైతృకకాలేషుమధుమాంససమన్వితః।రహితోమానుషోయాంతి।తత్రస్యనరకంధ్రువం) என்பவற்றில் மாத்ருபித்ருமுதலானவர்களின் ஶ்ராத்தங்களை செய்யும்போது மதுமாம்ஸாதிகளுடன்கூடியிருக்கவேண்டும், அப்படிக்குச்செய்யாத மானிடர்நரகத்தை யடைவர்களென்றிப்படி ஶ்ருதி ஸ்மிருதி வசனங்களில் சொல்லியிருக்கிறது. பூர்வருடைய அத்திய வஸாயத்திலிருக்குமோ வென்னில்; இருக்கும். அது எங்ஙனெனில், எதிராஜர்திருமலையினின்றுகோயிலுக்கு எழுந்தருளினகாலத்தில் அத்திகிரிக்குத் தக்ஷணமாக வீரகாஞ்சீபுரத்தில் நீசக்ருஹத்தில்நின்று எம்பெருமானுருக்குத் தந்நீசத்ரவ்யங்களிரண்டும் ஶேகரித்து மோக்ஷப்ரதானஶ்ரேஷ்ட த்ரவ்யங்களும் பெரியநம்பிதம் ஶிஷ்யரான எம்பெருமானுருக்கு ப்ரஸாதித்துச் சிவருக்குச்சாதித்துக் கோயிலுக்கெழுந்தருளினபின், ஒருவன்மூர்க்கன், எம்பெருமானுருக்கு ஶேகரித்த த்ரவ்யங்களெல்லாம் ஸ்வீகரித்ததில்லோமேயென்று நெஞ்சில் அஹங்காரத்தோடிருந்தான், அவன் நெஞ்சில் தோன்றியிருந்த அஹங்காரத்தை நிரஸிக்கவேணுமென்று முன்னிருந்த திறவு நீசக்ருஹத்தில் தாமிருந்து தந்நீசத்ரவ்யத்துடன் மற்ற த்ரவ்யங்களையும் ப்ரத்யக்ஷமாகக்கொண்டு காட்டுகிறார். பூர்வத்தில் அநுபவித்து, (తింత్రిణీమందిరావాయ। సిద్ధసారశ్చసంయమి।దివ్యప్రబంధద్వయంగోష్ఠం।తత్సమయేన్యజగచ్ఛతి) வித்தஸாரமுனியான நம்மாழ்வார் திந்த்ரிணீமந்திரத்தில் வாஸராய்த் திவ்யப்ரபந்த கோஷ்டித்வயஞ்செய்ய, தத்ஸமயத்தில் ஒருவன் அந்த்யஜனு

னமனுஷ்யன், தூரத்தில்நின்று நன்றாகக் கேட்டு ஸமீபத்துக்கு
வந்தடைந்து ஸேவித்து ஸ்வாமி பஹூபாதகபாஜனமாயிருக்
கிற எனக்குக்கதியேதென்று விண்ணப்பஞ்செய்கையாலே (శ్రు
త్వాచసుజ్ఞానోత్పత్తిం।యత్ఫలంభవతిచ్ఛయా। కృత్వావారుణితృప్తి
స్మై।తద్గతించావలోకయే) என்று ஸஜ்ஞானகாரணமான கீதைக
ளின்முதலானவை ஶ்ரவணஞ்செய்ய எந்தப்பலம்லபிக்குமோ அ
ந்தப்பலம்வாருணீதிருப்தியால் லபித்து ஸேவிக்கலாயிற்று. இவ்
வர்த்தங்களுக்கு யோக்யமான வாருணீமதுகொண்டுவந்து அ
நுபவித்தால் நம்முடைய நித்யவிபூதியடையத் தடையில்லை, எ
ன்றருளிச்செய்தாரென்று ஸ்ரீமந்நாதமுனிகள் குருகைக்காவல
ப்பனுக்கு ஶ்லோகரூபமாக வருளிச்செய்தார், (ప్రథమంసిద్ధసా
రంచ।ద్వితీయ్యంసురసేవయా।తృతీయ్యంద్రవ్యభక్షుంచ। స్త్రీసల్లాపమ
నంతరం) ஆகச்சொன்ன ஸ்ரீஸூக்தி குப்தமாகவும், (ప్రకటోభ్ర
ష్టః) என்றருளிச்செய்தார். ஸ்ரீஜகத்குரவே நம:

இந்தரஹஸ்யத்தினுடைய கருத்தை பரோபதேசமாகத்தி
ருநாமமென் றருளிச்செய்திருக்கிறார்களென்பதாய் ஒருபாட்
டைச்சொல்லுகிறார்கள். அதாவது!(పల్లవి)పట్టుచాతరెఅష్టాక్షరిపద్మ
మురాయరె-పట్టుమీదఅలంకరించిప్రపత్తిపట్టరే (అ)పుట్టుభోగితిరువా
రాధనపూజశాయరే - పట్టభద్రునిశ్రీపాదతీర్థముపానముశాయరే॥
పట్టు॥ సన్నిధినిల్వరే మిగులసందడిశాయకురే - మన్ననతోనువుడ
యవరులమహిమదెలియరే । అన్నివిడచినారదపదముయమరియుండరే-
కన్నులారసేవించిమిథునకైంకర్యముగోరరే॥పట్టు॥కనకపాత్రలోనమం
చిఘనపదార్థముంచరే-యొనశియొణ్ణెకాపుగిన్నెకేలబూనరే। చనువుమీ
రయతీంద్రులకుసమర్పించరే - యాఘనునిశేషమందరికినియొనసిపంచరే॥
పట్టు॥ పంచకమలములోనిమిథునముపొంచియుందరే - యొంచిఅక్కరవు
కరమకరమెటిగిబ్రతకరే । ఇంచుకైనకోదువల్యాకవిరజదాటరే-అంచి
తముగపరమపదమునందుజేరరే॥పట్టు॥ என்றஇப்பாட்டிலிருக்கும் அ
ர்த்தத்தின்படி பூர்வர்களெல்லோரும் அநுஷ்டித்துப் பரோப
தேசமாக ப்ரவாதித்தார்களென்றுஞ் சொல்லிச் சந்தோஷிப்
பார்கள். இவர்களியிதில்சொல்லியிருக்கின்றபடி துஷ்க்ருத்ய

ங்களை ப்ரபன்னாதிகாரிகள் செய்யலாமோவென்று கேட்குமிட த்தி லதற்குச்சில மந்தமதிகள், அவிவேகத்தால்சில கர்மாநு ஷ்டானங்களைக் கைங்கர்யபுத்தியாய்ச் செய்யலாமென்றுசொ ல்லுவர்கள். அது எவ்வளவுஞ் சரியன்றென்றும், பிரபன்னர் கள் யாவத்கிருத்யங்களுங் கைங்கர்யபுத்தியாகவே செய்யவே ண்டுமென்றும், அப்படிக்குச்செய்வதே ஸ்ரூபாநுரூபமென் றும், அப்படியநுஷ்டிக்குமவர்களே பூர்ணாதிகாரிகளென்றும், தத்வ்யதிரிக்தமாயநுஷ்டிக்குமவர்கள் அநாதிகாரிகளேயன்றி ஸ் ரூபஜ்ஞர்களன்றென்றுஞ்சொல்லுகிறார்கள். இப்படிச்சொல்லு மவர்கள் அபிப்ராயத்தை யோசிக்குமளவில்மலத்தில்வாய்வைக் கும்ஸூகரங்களுக்குப் பன்றிஸ்ரேஷ்டமென்னும் பழமொழி க்கு ஒத்திருக்கிற தென்பதற்கு யாதொருஸந்தேஹமுமில்லை.

பரமவைதிகஸத்ஸம்ப்ரதாயப்ரமணார்த்தஸங்க்ரஹம்

(సన్నిధానాత్ భూతపుర్యాంఅహీనామీశ్వరఃకలౌ। శ్రీరామానుజరూపేణజనిష్యతిసతాంముదే) என்றதில், என்னுடையநியோக த்தால் ஸ்ரீபெரும்பூதூரில் ஸர்ப்பங்களுக்கெல்லாம்ராஜனான தி ருவனந்தாழ்வான் கலியுகத்தில் ஸ்ரீராமாநுஜரென்றரூபத்தாலே ஸாதுக்களை ஸந்தோஷிப்பிக்க அவதரிக்கப்போகிறாரென்றும், (పునశ్చవిభవేచ్ఛాయీమాఃసన్నిధానాన్మహితలేజనిష్యతి శ్రీనగర్యాంయతీంద్ర ప్రవణాత్మకః) என்கிறபடியே அந்தஸ்ரீமத்தான ராமா நுஜரானவர் என்னுடையநியோகத்தினாலே இந்தப்பூமியின்கண் ஸ்ரீநகரியில் எதீந்த்ரராகிய ராமாநுஜரிடத்தில்பக்தியுடையவரா யிருப்பாரென்றும் ப்ரமாணமிருப்பதால், "எதீந்த்ரப்ரவணர்" என்கிற ஸ்ரீமணவாளமஹாமுனிகளவதரிக்கப்போகின்றாரென்று ம், (యత్పద్యం ద్రావిడామ్నాయస్యారంభాంతేభవిష్యతి । సభవస్యాజ్ఞామాతాయతి శ్రేష్ఠోభవిష్యతి) என்கிறபடியே த்ராவிடவேதத் தினுடைய ஆரம்பத்திலும், அந்த்யத்திலும், எந்தத்தனியனைச் சொல்லவேண்டியிருக்கின்றதோ அதற்குரியவர் கலியுகத்தில் அ வதரிக்கப்போகின்றார், அவர்யாரெனில்; எதிராஜர்தானேவெள ம்யஜாமா த்ருயோகீந்த்ரரென்ற திருநாமத்துடன் யதிஸ்ரேஷ் டராய்க்கொண்டு அவதரிக்கப்போகின்றாரென்றும், பகவத்ஸ்ரீ

ஸூக்தி ப்ரஹ்மாண்டபுராணம் பதரிகாஶ்ரமமாஹாத்மியம் நரநாராயண ஸம்வாதத்தில் இருக்கிறபடியே, ஸ்ரீபராங்குஶர் அவதரித்தருளின ஸ்ரீநகரியில் ஸ்ரீமணவாளமாமுனிகளவதரித்துச் சிக்கில்கடாரத்தில் வளர்ந்தருளித் திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளில் ஆஶ்ரயித்து ஸகலார்த்தங்களுங் கேட்டருளி ஆஶ்ரமஸ்வீகாரம்பெற்றுப் பெரியஜீயரென்கிற திருநாமத்தைவஹித்திருக்க, ஒருகாலவிஶேஷத்தில் பெருமாளை மங்களாஶாஸனஞ்செய்ய வெழுந்தருள, அப்போது பெருமாளும் முன்கண்டப்ரமாணங்களின் ப்ரகாரம் தனியனை யிவருக்கு ஸமர்ப்பிக்கத் திருவுள்ளங்கொண்டு, அருளப்பாடுஇட்டு, நமக்குஈடுஸாதிக்கவேண்டுமென்றுபெருமாள், ஜீயலாக்கேட்கையில், ஜீயரும் நம் ஆசார்யன் நேமனமில்லையென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்குப்பெருமாளும் உம்முடைய ஆசார்யர் ஒருவருக்குஞ் சொல்லப்போகாதென்று உமக்குநேமித்திருக்கின்றாரோவென்ன, கேட்குந்திறமாய்க்கேட்கில், சொல்லச்சொன்னாரென்ன, அதெப்படியென்றுபெருமாள்கேட்டருள, தேவரீர்தாமே ஆசார்யனுமாய், ஶிஷ்யனுமாய்ப் பதரிகாஶ்ரமத்தில் திருமந்த்ரத்தையுபதேஶித்து ஆசார்யஶிஷ்யக்ரமத்தை நாட்டாரறிகைக்காய்வெளியிட்ட ஶிஷ்யக்ரமத்துடன் ஆஶ்ரயிக்குமவர்களுக்குச் சாதிக்கும்படி அடியேனுக்கு நேமித்திருக்கிறாரென்ன, அதற்குப்பெருமாளுமுகந்து உன்னதாஸனத்தின்பேரில்ஜீயரையெழுந்தருளப்பண்ணிப் பெருமாள் ஶிஷ்யக்ரமத்துடன் ஈடுகேட்டருளி, ததாசார்யஸம்பாவனையாக, "ஸ்ரீஶைலேஶ" தனியனைஸமர்ப்பித்துக் கோஷ்டியாருடன்நித்தியமாய் அகிலதிவ்யதேஶங்களிலும் அகிலஸ்ரீவைஷ்ணவர்கள்திருமாளிகைகளிலும்த்ராவிடவேத ஆரம்பஅந்த்யத்திலும், இந்தத்தனியனைமுன்தொடங்கிப்பின் "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" என்னுந்தனியனை அநுஸந்திக்கவேண்டுமென்றும் நியமித்தருள, அவ்வாறே அத்யாபி அநுஷ்டானம் நடந்தேறிவருகின்றது. இஃதிப்படியிருக்க, பள்ளமடையார் சொல்லுகின்றதாவது.—

## பள்ளமடையார்துர்ஸம்ப்ரதாயார்த்தசுருக்கம்.

மணவாளமாமுனிகளை சரமார்த்தங்களைப்ரஸாதித் தருள

வேண்டுமென்றுபெருமாள்கேட்க அதற்குநீர்கேட்குந்திறமாய்க்கேட்டால் நாம்ஸாதிக்கிறோமென்றருள, பெருமாள்அரவணைவிட்டிறங்கி ஸ்ரீமணவாளமாமுனிகளை அரவணைமேலெழுந்தருளப்பண்ணித் திருமந்த்ரார்த்தத்தைஸாதித்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்கக்ஷமித்தோமென்று ப்ரபத்திசெய்தால் ஸாதிக்கிறோமென்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்ததாயும் அப்படியேபெருமாள்ப்ரபத்தியுடன்நிற்க,அப்போது இப்பள்ளமடையார்செய்துவரும் துஷ்க்ருத்யங்களின்படிகோயிலிலேதேதோ நடந்ததாகவும், என்னமோஸாதித்ததாகவும்கல்பித்துவிபரீதமாகச்சொல்லுகிறது மன்றிக்கே, திருமலையில்திருவேங்கடமுடையான் தொண்டமான் சக்ரவர்த்திக்குத் தம்முடையதிருவாழி திருச்சங்கைஸாதித்தபின்பு பெருமாளுக்கு ஸ்ரீஉடையவர் வேறு திருவாழி திருச்சங்கு ஸமர்ப்பித்தகாலத்தில் அவ்விடத்திலே தேதோ சிலவிபரீதங்கள் நடந்தனவென்றும், ஸ்ரீ உடையவர் திருக்கோட்டியூர்நம்பி திருவடிகளில் ஆஶ்ரயித்தகாலையில் சரமார்த்தங்களை லபித்துக் கொள்ளும்போதுஇவர்கள் க்ருத்தியத்தின்படி யேதேதோ நாவினுலுச்சரிக்கத்தகாத சிலவிபரீதங்கள் நடந்தனவாகவும் கல்பித்து அஸஹ்யமான வார்த்தைகளைக்குழறிவழிகிறார்கள். இதுவுமன்றிக்கே, ஸ்ரீஉடையவர் திருநாமமாகிய ராமாநுஜசதுராக்ஷரியென்கிற மஹாமந்த்ரத்துக்கு விலக்ஷணஸம்ப்ரதாய ஶாஸ்த்ரோக்தமான மஹதர்த்தங்களிருக்க, அதற்குமாறனவபார்த்தங்களைக் கல்பித்திருக்கிறார்கள்.

## ராமாநுஜமஹாமந்த்ரத்துக்கு மஹதர்த்தங்களாவன.

ரா - என்ற அக்ஷரமானது (ரிங்) க்ஷயே என்ற தாதுவின் அர்த்தம் அஜ்ஞானநிவர்த்தி, ஆகையால் - ரா - என்கிற அக்ஷரமானது ஆசார்யனைச் சொல்லக்கடவதாயிருக்கும், இதற்கு ப்ரமாணம்; (గుశబ్దస్త్వంధకారస్స్యాత్ రుశబ్దస్తన్నిరోధకః। అంధకారనిరోధిత్వాత్ గురురిత్యభిధీయతే।) என்றதில் (గు-கு) என்றபதம் அந்தகாரத்தையும்-ர-என்பது அதின்நிவர்த்தியையுஞ் சொல்லிற்று. எவராலே அந்தகாரம்போக்கப்பட்டதோ அவரைக்குருவென்றுசொல்லப்படும் என்றதில்-ர-என்று குருவைச்சொல்லிற்று,

அதன்றிஏகாக்ஷரநிகண்டில், (రా-(స్త్రీ)యాం। హేమ్ని-శాలాయాం। మాలాయాంచ-గురావపి) என்றதில்-ரா-என்பது, தங்கத்துக்கும், சாலைக்கும், மாலைக்கும், குருவுக்கும், பேராயிருந்தபோதினும் குருவென்றவர்த்தத்தையே காட்டக்கடவதாயிருக்கும். ம-ம்-என்ற உடலெழுத்தில் அகாரமாகிய உயிரொழுத்தேறி-ம-என்று சப்திக்கிறதாய் ஶ்ருதி (అకారోవై సర్వావాక్) என்றும் (సమస్త శబ్దమూలత్వాత్ ।అకారస్యస్వభావతః) என்றும், ஸமஸ்த ஶப்தங்களுக்கும் அகாரம் காரணமாயிருக்கை, அகாரத்திற்குக்காரணத்வம் ஸ்வபாவமாயிருக்குமென்று ஶ்ருதிசொன்னதை, குறளில் வள்ளுவனார், "அகரமுதலவெழுத்தெல்லாம்" என்றகுறளுக்குப்பரிமேலழகர்உரையில், "எழுத்துகளெல்லாம் அகரமாகியமுதலையுடையன" என்றும், எழுத்தெல்லாமென்றதற்குக்கருத்து; "தமிழ்எழுத்துக்கேயன்றி வடவெழுத்துக்கும் முதலாதல்நோக்கி யெழுத்தெல்லாமென்றார்" என்றுமிருக்கிறபடியே இயல்பால், அகரம்-ம்-என்றவுடலெழுத்திலேறி மகாரமாய்விட்டது, முடிவில். (మకారోజీవవాచకః) என்கிறநியாயத்தாலேமகாரத்தால் ஆத்மாவைச்சொல்லிற்று. இனி, (ம்) என்ற அக்ஷரத்தின்மேலேறியிருக்கும் அகரத்திற்கு அர்த்தம், ஶ்ருதி(అఇతిభగవతో నారాయణస్యప్రథమాభిధానం) என்றும், (అకారోవిష్ణుః ప్రథమ నామోచ్యతేః) என்றும், அகாரம் விஷ்ணுவுக்கு ப்ரதானதிருநாமமென்றும், கீதையில் (అక్షరాణాంఅకారోస్మి) அக்ஷரங்களில் அகாரம்நானேயாகிறேனென்றும், சொல்லியிருக்கையால் அகாரத்திற்குப்பொருளாகிய ஸ்ரீமந்நாராயணன், மகாரவாச்யனான ஆதிஶேஷன் ஹ்ருதயத்தில் ப்ரவேஶித்து-ரா-என்றபதத்திலே குருவாய், நு-என்ற அக்ஷரமானது நகாரமென்ற உடலெழுத்தில் உகாரமென்ற உயிரொழுத்துச்சேர்ந்து நுகாரமாய்ஶப்திக்கையால் (నకారోద్దిష్టఃపంథాః) என்று நகாரமானது மார்க்கத்தைச்சொன்னதாய் அத்தாலேதான் மோக்ஷத்திற்கு உபாயமாயும், உகாரத்திற்கு ஏவகார அர்த்தமென்று பாத்மோத்தரத்தில் சிவனும் (ரஹஸ்யத்ரயத்தில்) ஸ்ரீபிள்ளைலோகாசாரியரும் அருளிச்செய்தார். உகாரம், "கடகத்வத்தை" சொன்னதாய்

அதாவது - நீ - ஸர்வேஶ்வரனுக்கே அடிமையா யிருப்பவ னென்று போதிக்கும்படி (జాయమానః)-என்கிறவித்பத்தியினு லேசேதனனுடைய இருள்நீங்க அவதரித்தவராகையால்ராமாநு ஜனென்றஇந்தத்திருநாமம்ப்ரகாஶிக்கும்படியாயும் அத்தாலிஞு ப்ரபன்னர்களுக்குக் காயத்ரிமந்த்ரமாயிற்றென்றும், பதரிநா ராயணன்நரனுக்கு அருளிச்செய்தான்,புராணத்தில் (సాక్షాన్నా రాయణో దేవః। కృత్వా మర్త్యమయీం తనుం। మగ్నానుద్ధరతే లోకా న్। కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా,ஸாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணனுனவன் பூமியில் மனுஷ்யஶரீரத்தை வஹித்து ஸம்ஸாரநரகமென்கிற ஸமுத்ரத்தில் முழுகிக்கிடக்கிறவர்களைத் தாண்டுவிக்கும்பொரு ட்டுத் தம்முடைய நிர்ஹேதுக க்ருபையினுலே ஶாஸ்த்ரத்தை க் கையிலுடையவனுய் அவதரிக்கிறுனென்று சொன்ன ப்ர மாணமானது ராமாநுஜ என்ற பதத்திற்கு அர்த்தமாயிருக்கி ன்றது. இப்படிமஹதர்த்தமாயிருக்க ஷெ துன்மார்க்கப்பள்ள மடையார் சதுராக்ஷரிகளென்றபேர் வஹித்துச்சதுராக்ஷரிரஹ ஸ்யமென்றும் பெரியதிருமந்த்ரமென்றும் ராமாநுஜவஷ்டபூர் த்திரஹஸ்யமென்றுஞ்சிலநூல்களை வைத்துக்கொண்டு ராமாநு ஜஸித்தாந்தத்தைக் கெடுக்கத்துணிந்து ராமாநுஜதிருநாமத்துக் கு அபார்த்தங்கல்பித்திருக்கின்றதுயாதெனில்!

துராநுஷ்டானசதுராக்ஷரிதனியன்கள்

முதலெழுத்துக்குச்செய்திருக்குமபார்த்தமாவது (రకారో౽ గ్నివర్ణంతు।రక్తో నామాక్షరో భవేత్।రాశబ్దోచ్చారణాదేవ। మాంసానుష్ఠానవాన్భవేత్।లోహితం తత్ర మాతుశ్చ।రకారేషు ప్రతిష్ఠితం।శ్రీమన్నారాయణో దేవః।శ్రియా సార్ధం జగత్పతిః।నిత్యముక్తైస్సేవ్యమానః।సతతం మయి తిష్ఠతు)இதற்கு ஸ்ரீமந்நாராயணுநுஷ்டானமென்றும்,மாஸா நுஷ்டானமென்றுஞ்சொல்லுவர்கள். மாஸாநுஷ்டானமென்ப து,ஸ்த்ரீகள் மாஸத்திலொருதரம்வீட்டிற்குத்தூரமாகும் ரக்தத் தை, இதற்குத் திருவஷ்டாக்ஷரத்தையுந் த்வயத்தையும், சரம ஶ்லோகத்தையும் மந்த்ரமாகச்சொல்லிக் குடிப்பர்கள், இரண் டாமெழுத்திற்குச்செய்திருக்கும் அபார்த்தமாவது (మకారో౽ పీతవర్ణంతు।ఆత్మా నామాక్షరో భవేత్। తత్రాచార్యస్య మలజమంతరం గే

ఘుసంస్థితః । పరాంకుశమునిర్దేవో । తింత్రిణీమూలసంస్థితః। శ్రీమన్నా
థోఽఘధురకః। పార్శ్వద్వయసుసంస్థితః। పాదుకే యతిరాజస్య। పారి
షద్యైః పరిశ్రితః। శఠకోపమునిం వందే। సతతం మయి తిష్ఠతు) இதற்கு ந
ம்மாழ்வாரனுஷ்டானமென்றும், நித்யானுஷ்டானமென்றுஞ்
சொல்லுவர்கள். நம்மாழ்வாரனுஷ்டானமென்பது,மலம் இதற்
குமந்திரம், (ఓం నమశ్శఠకోపాయ) இதற்குத்வயம், శ్రీమచ్ఛఠ
కోపచరణౌ శరణం ప్రపద్యే। శ్రీమతే శఠకోపాయ నమః) இதற்குச்சரம
ஸ்லோகம், (సర్వసాధనసంత్యజ్య । శఠకోపయతిస్మరః। విభూతిం సర్వ
భూతేభ్యో। దదామ్యేతద్వ్రతం మమ) என்று அநுஸந்தித்து மேற்
சொன்னமலத்தை நித்யமுந் திண்பார்கள். மூன்றுமெழுத்திற்கு
அபார்த்தஞ்செய்திருப்பதாவது, (సుకారో శ్వేతవర్ణం తు। శుద్ధసత్త్వ
సముద్భవం। శాంతరూపం సుసంపీడ్యం। లక్ష్మీనారాయణాత్మకం। ఆనందా
మలవృద్ధ్యం చ। జ్ఞానానందమయం ప్రభుం। సుకారస్యాధిదేవేశో । యతిరా
జో జగద్గురుః। సూరేశకురుకేశద్యైః। చతుస్సప్తతిదేశికైః । సంసేవ్యమా
నో దేవేశః। సర్వలోకపరిశ్రితః। విభూతిం ద్వయసంపన్న। సతతం మయి
తిష్ఠతు) இதற்கு,உடையவரநுஷ்டானமென்றும்,காலாகாலவநுஷ்
டானமென்றுஞ் சொல்லுகிறார்கள். உடையவரநுஷ்டானமெ
ன்பது ஸ்திரீபுருஷ ஸம்யோகத்தாலுண்டாகும் பிந்து. இத
ற்குமந்திரம், (ఓం నమో రామానుజాయ) இதற்குத்வயம், (శ్రీమ
ద్రామానుజచరణౌ శరణం ప్రపద్యే । శ్రీమతే రామానుజాయ నమః)
இதற்குச்சரமஸ்லோகம் (సర్వధర్మాన్ సంత్యజ్య । రామానుజయతిస్మ
రః। విభూతిం సర్వభూతేభ్యో। దదామ్యేతద్వ్రతం మమ) என்று அநுஸ
ந்தித்து மேற்சொன்னபிந்துவை உபஸ்தஸ்தானத்தில் நின்றும்
நாவினால் க்ரஹித்துக்குடிப்பார்கள். ஸ்திரீகளும், அப்படியே பு
ருஷனுடையலிங்கத்தை நாவினால்சுவைப்பார்கள். அப்புணர்ச்சி
யால்உதிக்கும்ஹீனவஸ்துக்களையேபரமபுருஷார்த்தத்ரவ்யமெ
ன்பதுமன்றிக்கே, இந்தச்சண்டாளர்கள் ஆண்குறிக்கு உடையவ
ரென்றும்,பெண்குறிக்குப்பூதூரென்றும்பிதற்றுவர்கள். அதுமா
த்திரமன்றிக்கே, இவர்களுடைய துஷ்க்ருத்ய ஶரணாகதியைப்
பரகதஸ்வீகாரமென்றும், ஶிஷ்யன்மனைவியை ஆசார்யன் புண
ருகையே ஸ்வகதஸ்வீகாரமென்றும்விபரீதமாய்ச்சொல்லுவர்க

ள். நாலாமெழுத்துக்குச்செய்யும்அபார்த்தமாவது,(జకారోనీలవ
ర్ణంతుజగజ్జననసంభవం।జలానామాకరోభూత్వాజనానాంచసురక్షకం।
తత్రదేవోవరమునిః సర్వచేతనరక్షకం।అష్టదిగ్గజసంపన్నస్సతతంమయి
తిష్ఠతు)இதற்குவரயோகி அனுஷ்டானமென்றும், நித்யாநுஷ்டா
னமென்றும் பிதற்றுவர்கள். நித்யாநுஷ்டானமென்பதில் வர
யோகி யநுஷ்டானமென்பது, மூத்ரம். இதற்குமந்த்ரம்,
(ఓంనమోవరవరాయ) இதற்குத்வயம், (శ్రీమద్వరవరచరణౌశరణం
ప్రపద్యే।శ్రీమతేవరవరాయనమః) இதற்குச்சரமஶ்லோகம், (సర్వో
పాయాంత్యసంత్యజ్య।వరవరయతిస్మరః।విభూతింసర్వభూతేభ్యో।దదా
మ్యేతద్వ్రతంమమ) என்று அநுஸந்தித்து மூத்ரத்தைக்கையிற்பி
டித்துக்குடிப்பர்கள். இந்தநாலுதுராநுஷ்டானங்களையுமுபதே
சித்துப் பிறரை நசிப்பித்தழியுமவன்றானே ஸதாசார்யனென்
பதற்குமந்த்ரம், ఓంనమోసదాచార్యాయ)இதற்குத்வயம், (శ్రీమ
త్సదాచార్యచరణౌశరణంప్రపద్యే।శ్రీమతేసదాచార్యాయనమః)இதற்
குச்சரமஶ்லோகம், (సర్వపుణ్యానిసంత్యజ్య। సదాచార్యయతిస్మరః।
విభూతింసర్వభూతేభ్యో।దదామ్యేతద్వ్రతంమమ) என்று அநுஸந்தி
த்துத்தம்தம் ஆசார்யர்களுடையகால்களைக்கழுவி ஸ்ரீபாததீர்த்
தமென்றுபேரிட்டுக் குடிப்பர்கள். இந்தத்துராஷ்டானங்களுக்
குப்ரமாதாக்களாரென்றுகேட்குங்காலையில் இஃது பரமபதத்தி
ல் ஸ்ரீ ஸ்ரீய:பதிகளுபயரு மநுஷ்டித்து நித்திய ஸூரிகளுக்கும்
உபதேசித்து, அங்குநின்றும் சேனைமுதலியார் முகேன ஆழ்வா
ர்களுக்கும், ஓரான்வழியாய் அஸ்மதாசார்யர்கள்பர்யந்தமாயுப
தேசித்து வந்தமஹாதநுஷ்டானங்களென்கிறார்கள். அப்படிக்கு
மூறுவதை யோசிக்குமளவில் ஆளில்லா ஊரில் இருப்பைப்பூ
வைச்சர்க்கரையென்றுசொல்லும் அண்டப்புரட்டைப்போல
ப்ராக்ருதஸம்பந்தமற்றிருக்கும்அப்ராக்ருதஉலகத்தில்பஞ்சோ
பநிஷன்மயமானதிவ்யதிருமேனியையுடைய ஸ்ரீ ஸ்ரீய:பதிகளு
ம் நித்தியஸூரிவர்க்கத்தாரு மநுஷ்டித்துவந்த வநுஷ்டானமெ
ன்றுஞ்சொல்லுகிற சொல்லில் இருக்குங்குற்றமும் தங்கள்தன்
மதிக்குத்தோற்றாமல் பிதற்றுகிறதைப் புத்திமான்கள் தெரிந்து

சண்டப்ரசண்டமதவாதகிரிகண்டனவஜ்ரதண்டம். கூகூ

கொள்ளலாம். இப்படிவிபரீதமாய்ச் சொல்லுமவர்களுடைய பக்ஷத்திற்கு ஒத்தமங்களார்த்தியை ஜெயார்பாடுவதை இதனடியில்காணலாம்.



శ్రీధర శ్రీమద్భూశేనేశశఠకోపనాథార్యులకుపద్మనయనులకునూ। మేధానిధులు రామమిశ్రయామునమునీంద్రాధీనులైనపూర్ణార్యులకునూ ॥ జయమంగళంమహాత్మవమంగళం ॥ ఫణినాథగోవిందభట్టవేదాంతి బోధనులైనకలివైరిదాసులకును। అనయంబుకృష్ణద్వయాఖ్యానక శ్రీశైలఘునరమ్యజామాతృమునులకిపుడూ॥జ॥ గరిమెతోనష్టదిగ్గజములకుసరియైన।పరవస్తువేంకటప్రభువునకును । సరసులగురామసోదరగురోత్తముమనో।హరులైనదేవరాజార్యులకునూ॥జయమంగళం॥ஜெயாராநுஷ்டானங்களையுபதேசம் க்ரமக்ரமமாய்ப்பெற்றவர்கள்வங்க்ரமமாய்மாறுபாடாகஒருபாட்டில் உதஹரித்திருப்பதுயாதெனில்!

ప॥ శ్రీపద్మనాభగురుచరితంబులుచెప్పనలవిగాదమ్మా॥అ॥ ప్రాపకులైచేతనులనేలుటకు-పరమపదమునుండీవేంచేశిన॥శ్రీ॥ చ॥ నాతిరోరమ్మానిచారదీసినను ప్రీతితో నాదరించిరమ్మా- భూతపురీశునిమహిమలన్నియుబోధజేశెగదవమ్మా । ఖ్యాతిలాభములుకోరకయనివరతీర్థమొసగిరేకొమ్మా-పాతకములొబడియుండినచరమోపాయములేదనిరమ్మా ॥ శ్రీ ॥ దయతోనారపదముగాకయీదాస్యముదక్కదనిరమ్మ - ద్వయవస్తువులనుదాసులకొసగినాస్వయముమానుమనిరమ్మా।అయనపదార్థముదలవకతనువందాశవదలదనిరమ్మా-నయముగఆయపదార్థముమరువకనమ్మునిననన్నేలెనమ్మా॥శ్రీ॥చతురాక్షరిమంత్రమునకుసరియీక్షితిలోలేదనిరమ్మా-చతుర్విధపదవులజెందనియ్యదనిచెవినిచాటెగదవమ్మా। చతుర్విధమగుఅనుష్ఠానములోనీవతిశయించుమనిరమ్మా-సతతముపంచామృతమువలేనాకితవుజేసెగదవమ్మా॥ శ్రీ ॥ అష్టవిగ్రహాములెరుగనట్టియానిష్ఠయాలననిరమ్మా-అష్టప్రణవములుఅష్టజ్యోతులష్టాక్షరిదెల్పెగదమ్మా। అష్టపూర్తులనుభవములునామదికిష్టపరచెగదవమ్మ - అష్టత్రయములనమరుఆర్యులాధీనమగుమనెనమ్మా ॥ శ్రీ ॥పంచతత్వములుతెలియకమోక్షోపాయములేదనిరమ్మ-పంచచరమములుపఠియించమని బాగదెల్పిరోయమ్మా।అంచితముగతాళూరిమఠమునమించివెలశిరిగదమ్మ-అంచయాన పద్మనాభగురునెంచి

𑌯𑌾𑌵𑌦𑍍𑌦𑍇𑌹𑌪𑌾𑌤𑌮𑌸𑍍𑌤𑍁॥ ஸ்ரீ ॥ இவ்விதமாய் உபதேஶமானவர்களில் சிலர் உபதேஶ மாகும்போது மேற்சொல்லியநான்கையும் ஆசார்யன் மூலமாய்ப்பெற்றுக்கொண்டு, பின்பு அநுஷ்டியாமலிருப்பவர்களை, லோகவைஷ்ணவர்க ளென்றவர்களைப்பார்க்கிலும் இவர்கள் ஶ்ரேஷ்டர்களென்றும் நிர்பரத்வாநுஷ்டான பரரென்றுஞ் சொல்லுகிறார்கள். சிலர் ஶாபாஶாபங்களில் விசேஷகாலமென்று ஆழ்வாராசார்யர்கள் திருநக்ஷத்திரங்களில் மாஸாநுஷ்டானமென்பது தங்கள் கூட்டத்தாரில் அகப்பட்டால் அத்துடன் மற்றவையும் சேர்த்துப்பானஞ்செய்வர்கள். அகப்படாவிடில் மற்றவைகளைச்சேர்த்துப் பானஞ்செய்வர்கள். மேற்கண்டவர்களிலும் இவர்களைஶ்ரேஷ்டர்களென்கிறார்கள், சிலர் ஆசார்யனுரைத்தபடி அந்தந்தக்காலங்கள் தவிராமல் மேற்கண்ட அந்நான்கையும் அநுஷ்டிக்கிறார்கள். இதற்குமுன் கண்டவர்களிலு மிவர்களை ஶ்ரேஷ்டரென்பர்கள், சிலர் ஆசார்யன்சொன்னபடி இந்நான்கையும் அநுஷ்டித்துத் தங்களாசார்யனிடத்திலும் ஆசார்யனுக்குச்சமானமானவர்களிடத்திலும் அஷ்டபூர்த்தி மிதுனஸாரங்களென்று மேற்கண்டிருக்கிறபடியே சேர்த்து ஸ்வீகரிப்பர்கள். இதற்குமேற்கண்டவர்களிலுமிவர்களைஶ்ரேஷ்டரென்பர்கள். இதுவரையிற்சொன்ன நாலுதிறத்தாரும் மேற்கண்ட, ஜகாரத்துக்குச்சொன்ன அபார்த்தமானநித்யாநுஷ்டானமென்னும் மூத்ரத்தை மேல்தெளித்துக்கொண்டு மடியென்று சொல்லுகிறார்கள். இவ்விதமானமடியுடன்சமைத்து விக்ரஹமுதலானவைகளுக்குக் கைகாட்டிச்சாப்பிடுவர்கள். சிலர்மேற்கண்டநாலுதிறத்தார் அநுஷ்டிக்குமவைகளில் ஒன்றாகிலும்விடாமல் அந்தந்தக்காலங்களில் அநுஷ்டித்தும் விஶேஷமாக நாரபதவநுஷ்டானமென்றதிகம்பரத்துடன்; கோமாம்ஸத்திற்குப்பெரியக்றியமுதென்றுபேரிட்டுச்சமைத்துஜகாரத்திற்குச்செய்திருக்கும் அபார்த்தமான மூத்ரத்தைப் பூஜாபாத்ரங்களின்பேரிலும் விக்ரஹங்கள் முதலானவைகளிருக்குமிடத்திலும்தெளித்து ஸ்தலசுத்தி என்றும், பாத்ரசுத்திஎன்றுஞ்சொல்லி, விக்ரஹமுதலானவைகளுக்குமேற்கண்டவைகளைவைத்துச்சாப்பிடுவர்கள். இத

ற்கு முன்கண்டவர்களிலும் இவர்கள் ஶ்ரேஷ்டரென்றும், (యం యం స్పృశతి పాణిభ్యాం । యం యం పశ్యతి చక్షుషా । స్థావరాణ్యపి ముచ్యంతే) என்கிற ப்ரமாணத்தைத் தங்களுக்காதாரமாகக்கொண்டு இவர்களாலே எது எது தொடப்படுகிறதோ எது எது பார்க்கப்படுகிறதோ அவைகள் ஸ்தாவரஜங்கமங்களாயினும் பரமபதத்தை யடையுமென்றுசொல்லி, விஶேஷமாய்க்கொண்டாடுவர்கள். இதற்குமுன்கண்ட எல்லாரிலு மிவர்களைவிஶேஷஜ்ஞர்களென்று அக்கூட்டத்தார் ஸகலரும்பூஜிப்பர்கள். இவர்களில் இதுவுமல்லாமல் உடையவர் திருக்கோட்டியூர்க் கோபுரத்திலிருந்து திருமந்த்ரத்தைப் பூரிதானஞ்செய்த ஐதிஹ்ய உத்ஸவமென்று ஒருதினத்தில் இவர்கள்கூட்டத்தா ரெல்லாரும் ஓரிடத்தில் சேர்ந்து, திருக்கோட்டியூர்க் கோபுரமென்று ஒரு கட்டிலைஶ்ருங்காரித்து அதின்பேரில் இவர்களுக்குத் தலைவனையேறச்செய்து; ரவிகல உத்ஸவமென்று கள்ளுசாராயங்களைக் குடித்துப் புட்டிகளால் தலையிலிடித்துக்கொண்டு கேட்கத்தகாத காரியங்களை மர்க்கடங்களைப்போல நடத்துகிறார்கள். இப்படிக்கு ஆந்த்ரதேஶங்களில் விஶேஷமாயிவர்கள் கூட்டத்தில் ஸகலவர்ணத்தாரும் சேர்ந்து ப்ரபலமாயிருக்கின்ற, நெல்லூர், பந்தர், தானூர், குண்டூர், மங்களகிரி, ராஜமஹேந்த்ரவரம், ஶாமர்லகோட்டை, கஶிங்கோட்டை, காகிநாட, விஶாகபட்டணம்; ஒட்ரதேஶம் முதலானவிடங்களிலும் இன்னுமநேகவிடங்களிலும் நாளதுவரையில் இவர்கள் துஷ்க்ருத்யங்களை நடத்தி வருகிறதைக்காணலாம். மேற்கண்ட மாஸாநுஷ்டான காலாகாலவநுஷ்டான நித்யாநுஷ்டானங்களென்பவற்றை ஆசார்யன்பக்கல் உபதேஶம்பெறுகையில் அங்கீகரித்தப்ரகாரம்* உங்களிடத்தில் நீங்களே அங்கீகரித்துக்கொள்ளும் விதமென்னவென்றுகேட்டால், பரமாத்மாவுக்கு ஜீவாத்மா திருமேனியானாற்போலேயும், ஜீவாத்மாவுக்கு ஸ்தூலம் திருமேனியானாற்போலேயும், ஆசார்யனுக்குத் திருமேனியாக எங்களைச்செய்துகொண்டு, அவர்திருமேனியில் உத்பத்தியாகும் மேற்கண்ட நான்கு அநுஷ்டானங்களை அநுஷ்டித்துக்காட்டினபடி எங்களை ஆசார்

யன் அநுஷ்டிக்கும்படி நியமித்தாராகையால் ஸாமாநுஷ்டான நித்யாநுஷ்டான காலாகாலவநுஷ்டானங்களை ஸர்வோபாய ஸர்வோபேயங்களென்றும் பிதற்றுகிறதுமல்லாமல், ஸிஷ்டாசாரஸம்ப்ரதாயோக்த அஸ்மதாசார்யர்களான எழுபத்துநான்கு ஸிங்காஸநாதிபதிகளையும், தத்ஸம்பந்தமுடைய விலக்ஷணயாகவதோத்தமர்களையும் அஸிஷ்டர்களென்றும், அநதிகாரிகளென்றும், பஞ்சமோபாயமென்று மாறுபேரிட்டு அநுஷ்டிக்குந்தங்கள் துராநுஷ்டானங்களில்மாத்திரம் நம்மகோபாயமென்று சொல்லுகிறநம்பிக்கை வைத்திருக்குமவர்களே ஸ்வரூபோபாயபுருஷார்த்தவுண்மைகளை யறிந்த சரமாதிகாரிகளென்றும், அதொழிந்து மற்றதிவ்ய ப்ரபந்தரஹஸ்யாதி க்ரந்தகாலக்ஷேபங்களிலுமொருபுருஷார்த்தஸித்தியு மில்லையென்றும்பிதற்றி, "தானுசெடினகோதிவனமந்தாசெரிபினதி" என்றுதெலுங்கர்சொல்லும் பழமொழிபோல், தாங்கள்நஸிப்பதோடு பிறரையுநஸிப்பிக்கத்துர்ப்போதனைசெய்யும் புலையர்களுடையயோக்யதைகளை யோசிக்குங்காலையில், (కర్మపూరిత దేహీనాం।ధర్మశాస్త్రమరోచకం। చర్మఖండనభక్ష్యాణాం।శ్వాసంఘృతమరోచకం) என்றதில் திரிவிதகர்மவாஸநாஸஞ்சித ப்ராரப்தமுடையசேதனர்களுக்குத் தர்மஸாஸ்திரங்கள் அருசியாமாபோலும், ஹீனசர்மமாம்ஸகண்டங்களைத்தின்றுகக்கும் நாய்க்குடலுக்கு நறுநெய்தங்காமல் அருசி ஜனிக்குமாபோலும், மஹாத்மாக்களாகிய அஸ்மதாசாரியர்களுடைய ஸம்பந்தமும், அவர்கள் ஸ்ரீபாததீர்த்த தளிகைப்ரஸாதங்களும் இந்தப்பள்ளமடையாராகிய மஹாபாபிகளுக்குப்பெறுதற்கரியனவாயும் விலக்காயுமிருப்பனஎன்றுதோற்றுகின்றன. துராசார சதுராக்ஷரிகளிடத்தில் துஷ்க்ருத்யங்கள் அதிகமாயிருப்பதால் அந்தக்ருத்யங்களையெல்லாரும் அறியலாயிற்றென்றும், ஏகாக்ஷரிகள் நம்முடைய ஸங்கதிகளும்வெளிவருமென்றுநினைத்து, தங்களைஉலகத்தார், உடையவர்ஸித்தாந்தத்தில்சேர்ந்தவர்களென்றெண்ணித்தன்னிடம் ஸமர்ப்பிக்கும்போது ராமாநுஜதாஸனென்றுசொல்லுகிறார்கள், சதுராக்ஷரிகள் அடியேன்தாஸனென்று நாளதுவரையிலும்சொல்லிவருகிறார்கள். தலைவெ

ட்டினபோதிலும் ராமாநுஜதாஸனென்று எவ்வளவும்சொல்லுகிறதேயில்லை. ப்ரஹ்மஸ்ருஷ்டிக்கு ப்ரதிவிஸ்வாமித்ரன் ஸ்ருஷ்டிசெய்தாற்போல் ராமாநுஜ ஸித்தாந்தத்துக்கு ப்ரதியாகச் சண்டிப்ரசண்டிகள் பள்ளமடை ஸித்தாந்தஞ்செய்திருக்கிறார்கள் என்றும், அவர்கள்கர்ப்பத்தில் உற்பத்தியானவர்களைச் சார்ந்தவர்கள் மொட்டைத்தலையுடன் சாத்தாதவர்களென்று பேர் வைத்துக்கொண்டு வேஷம்பூண்டு ப்ரமிக்கச்செய்யும்பள்ளமடையாரென்றும் சதுராக்ஷரிகள் ஏகாக்ஷரிகள் ஒருவர்க்கொருவர் எதிர்ப்பட்டால்மனத்தில்க்ரூரம்வைத்துக்கொண்டு வெளிக்குப் புன்சிரிப்புடன் நைச்யமாய்வார்த்தைசொல்லிக்கொண்டுபின்பு இருதிறத்தாரும் ஒருவரையொருவர் தூஷிப்பது புத்திமான்களுக்குத்தெரியவரலாம். இவர்கள் க்ருத்யங்களையும் தூஷித்துக்கொள்ளும்படியான ஸங்கதிகளையும் சிலகவிகள் அநேகஸ்தகங்களில்தூஷணையாய்ப்பாடியிருக்கிறார்கள். அதாவது!(బండారులగూడిగొణుగుచు|దండములిడుకొనుచుబోడితలలుండాముం | నిండిరిమహీతత్వమునను|చండితనంబుడుగరన్నసంపంగిమున్నా)என்றும்,(తలలుబోడులైనతలపులుబోడులావిశ్వదాభిరామవినరవేమా)என்றுஞ்சொல்லியிருப்பதையும்இவர்கள்செய்யும் துஷ்க்ருத்யங்களைச்சஹிக்காமல் பூர்வத்தில்தானேதூஷித்திருப்பதையும் புத்திமான்கள்செவ்வையாய் யோசித்துப்பார்க்கவேண்டியது. (ఆండాళమ్మా సాండిల్యమ్మా ఆదిశేషునికిఅంతరంగులై | తాండవమాడుచుదాసులనేలగధరించిగభముధరనౌతరించిన|సాత్తానితిరుమాళిగా|నాసామినాథ||) என்றும், (చేతనులరక్షించశేషాంశునితిరుమేనినైచండిప్రచండియమ్మలు| నాతిరోవినవేవేంచేశినన్నేలిననార్యులవైభవములూ||చే|| என்றும், சிலதிருநாமங்களென்றபாட்டுகளைப் பள்ளமடையார்பாடுவர்கள். அதனுல் அந்தவிபசாரிபிள்ளைகளுடன் சார்ந்தவர்களென்று யாவருக்கும் பரிஷ்காரமாய்த் தெரியவரலாம்.

## கொரிவிமதக்ருத்யசுருக்கம்.

கொரிவிமதஸ்தர்கள் சதுராக்ஷரிகள் அநுஷ்டிக்கும் துஷ்க்ருத்யங்களெல்லாம் ஒன்றுவது தப்பாம லநுஷ்டித்தும் போராது என்று நரமாம்ஸத்தையும் பக்ஷிப்பர்கள். அதினுடையவி

வரம் எவ்விதமெனில், வெளிதேசங்களிலேயிருந்து வயிற்றுக்கி ல்லாதவர்களைக் கொண்டுவந்து சமாஸ்ரயணஞ்செய்து தங்கள் கூட்டத்தார் வீடுகளில் ஒவ்வொருதிவஸம்போஜனமும், போக மூங்கொடுத்துச்சுகமாகவைத்துக்கொண்டிருந்து, ஸ்ரீஉடையவ ர்வருஷத்திருநக்ஷத்ரத்தில் மேற்படியானுக்குக்ஷௌரம்வாங்கம்க்ஷௌ ரஞ்செய்வித்துத்திருமண்காப்புச்செய்து திவ்யமான கோடிவ ஸ்திரங்களும் புஷ்பமுதலானவைகளாலும் அலங்கரித்துப் புஷ் பவிமானத்தின்பேரில் ஏறச்செய்து, ஊமைக்கு ஸ்ரீஉடையவர் பரமபதம்ஸாதித்தப்ரகாரம்,இந்தத்திருநக்ஷத்ரத்தில்இந்தவிமா னத்தின்பேரிலிருக்கும் ஸ்வாமியை நாமெல்லோரும் பரமபத த்துக்கனுப்பலாமென்று தாங்களிருக்கிற இடங்களில் நாலுவீதி யுமலங்கரித்து, அந்தவீதிகளில் திருவாய்மொழிச் சேவையுடன் விமானஸஹிதமாய்ப்ரதக்ஷிணம்வந்து, உடையவர் விக்ரஹத் துக்குத் திருவாராதனஞ்செய்து விமானத்தின்பேரிலிருக்குமவ னை நன்றாகச்சேவிக்கச்சொல்லி, உனக்கு உடையவர்திருவடி ஸேவையாகிறதா, திருமுடிஸேவையாகிறதாவென்றுகேட்டு அ வன்வாயிலிருந்து எந்தவிடம் ஸேவையாகிறதென்று வருகிற தோ அந்தவிடத்தி லவன்பேரில் கத்தியால்கண்டித்து மற்றதே ஹத்தையெல்லாம் பின்புகண்டித்து, ப்ரத்யேக ப்ரத்யேகமாக ச்சமைத்து, அவன்வாயினால்சொன்னதை; முதல் உடையவருக் கு எதிரில்வைத்து, திருவாய்மொழிச்சாத்துசெய்து, கள்ளுசா ராயங்களைக்குடித்துச் சிலபாட்டுகளைப்பாடிக்கொண்டு, செத் தவனது உடம்பை ப்ரஸாதமென்று அதை ஸ்வீகரித்தால் நாமும் பரமபதஞ் சேருவோமென்று, எப்போதும் அக் காரவடிசிலை அமுதுசெய்யாதவர்கள் அமுதுசெய்தருசிகண்ட பிரேமையால் சிலவிடங்களில் மேல்விழுந்து சண்டைபிடித்து வினியோகம் பெற்றுக்கொள்ளுமாபோல், மேற்கண்ட நரமா ம்ஸத்தை யெல்லாரும் ஒருவர்முன் ஒருவரோடிப் போராடி வாங்கித்தின்பர்கள். இவர்களில்பிணம்விழுந்தாலும் இத்தன்மை யாகவே வினியோகித்துக்கொள்ளுவர்கள். இவர்களில் சிலர், "கட்டப்பைஜில்லா சித்தவட்டம்தாலூகாவில்" பூர்வமிருக்கையில்

ராஜாங்கத்தாருக்கு இவர்களது துஷ்க்ருத்யங்கள்தெரிந்து, மரு
ந்து குண்டுகளால் இப்பூண்டில்லாமல் செய்துவிட்டார்கள். இ
வர்களிருந்தவிடங்கள் குட்டிச்சுவர்களாய் மேடிட்டிருக்கின்றன.
அந்தவூரில் இந்தமேடு கொரிவிமதஸ்தர்க ளிருந்தவிடமென்று
சொல்லுவர்கள். இம்மதஸ்தர்களுடைய துர்மார்க்கக்ருத்யங்க
ளைஇப்போதுப்ரஸித்தமாய்ச்சொல்லிக்கொள்ளுவர்கள். ஏகா
க்ஷரிசதுராக்ஷரிகளென்னும் பள்ளமடையார்களுக்குள்கோயிலி
ல் ராமாநுஜகூடங்களென்று வீடுகள்கட்டிக்கொண்டிருப்பவர்க
ளும்,அவர்களைச்சேர்ந்தவாள்வெளித்தேஸங்களிலிருப்பவர்களு
ம் ஸகலார்த்தங்களையும் நம்பெருமாள் பக்கலிலேகாணலாமெ
ன்று சொல்லுகிறபடியே ஸ்ரீஉடையவர் ஸந்நிதியில் மதுமாம்
ஸாதிகள் ராத்ரிகாலங்களில் ரஹஸ்யமாக அமுசெயாகின்றன
என்று அநேகமூடஜனங்களை யேமாற்றுவர்கள். இந்தப்பள்ளம
டையார் வீடுகளுக்கு த்ராவிடஸ்ரீவைஷ்ணவர்களென்று பேர்வ
ஹித்த சிலவிப்ரர்கள் குஹ்யாசாபல்யத்தாலும், ஜிஹ்வாசாப
ல்யத்தாலும், த்ரவ்யாபேக்ஷையாலும்,கோயிலிலும்வெளித்தே
ஸங்களிலும் போகவர இருப்பதன்றிக்கே, இப்பள்ளமடையா
ர்செய்யும் க்ருத்யங்களை ஸாஸ்த்ரயுக்தமென்றும், பூர்வர்களனு
ஷ்டித்திருப்பதால் உடையவர்ஸந்நிதியிலும் அமுசெயாகிறது
நிஜமென்றுஞ் சொல்லுவர்கள். இம்மட்டோ ? பள்ளமடை
யாரைச் சிலவிடங்களில் தங்களுக்குச்சமமாக மர்யாதையுஞ்
செய்துவருகிறார்கள். சிலர் ஒவ்வோரிடங்களில் சேருங்கூட்டங்
களின் மத்தியிலிருக்கச்செய்து எல்லாரிலும் பள்ளமடையார்
ஸ்ரேஷ்டராகத்தெரியவேண்டுமென்று எண்ணங்கொண்டு முத
ல் மர்யாதைகளைச்செய்வதுமன்றிக்கே, நாமிட்டதேசட்டமெ
ன்றெண்ணிப் பூர்வாசார்யர்கள் திருவுள்ளக்கருத்துகளையும் ஆஜ்
ஞையையும் தப்பிநடக்கிறார்கள். சிலத்விஜர் நமக்குச்சமமாக
இதரர்களிருக்கப்போகாதென் றெண்ணங்கொண்டு பொறாமை
யால் பள்ளமடையாரநுஷ்டானமே ஸரியென்றும் ராமாநுஜ
ர்திவ்யாஜ்ஞையின்படி யிருக்கும்பாகவதர்களைச்சின்னப்படுத்தி
ப் பள்ளமடையாருக்குச் சகாயமாய்ப்பேசுகிறதும் அவர்க
ளையே ஸ்ரேஷ்டமென்று மர்யாதைகள்செய்து பாகவத அ
பசாரப்படுவர்கள். சிலஜனங்கள் ராமாநுஜ ஸித்தாந்தத்திலிரு
ந்தும் பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளுக்குஜ்ஞாநாநுஷ்
டானங்களுடையரான ஸ்வாமிகள் ஸந்நிதியில்வணங்கி உண்மை
யான அர்த்தங்களை அறியாமல் இஷ்டமானபடி. அர்த்தங்களைச்

செய்துகொண்டு உலகத்தில் க்யாதிலாபபூஜைபெற நினைத்து ராஜஸத்தால் பாகவதாபசாரங்களுக்காளாய் வர்த்திப்பர்கள். சிலர் ராமாநுஜஸித்தாந்தம் இன்னதென்று அறிந்தும்நம்பியிருந்தும் ஷெபள்ளமடையாரிடத்தில் காலக்ஷேபங்கேட்ட அபிமானத்தால்பாரபக்ஷமாய்ப்பேசுவதுமன்றிக்கேவலரியானபாகவதர்களை அஸூயையினால்எளிதஞ்செய்யக்கங்கணங்கட்டிக்கொண்டு திரிவர்கள் சிலமூடர்பள்ளமடையாருக்குச்சமமாகராமாநுஜதிவ்யாஜ்ஞையிலிருப்பவர்களை நினைத்துத்தூஷிப்பர்கள். சிலர்ராமாநுஜர் ஆஜ்ஞையின்படி இருப்பவர்களைத்தாழ்வாகநினைத்துப் பள்ளமடையாரைஸ்ரேஷ்டர்களென்றுநினைப்பர்கள். இவர்களெல்லோரும் யமவாதனைக்குட்படுவர்களென்பதற்குச் சந்தேகமுமுண்டோ? மேற்கண்டபள்ளமடையாராகிய சதுராக்ஷரிமதத்தைச்சார்ந்தபராங்குஶ அம்மையென்பவள் அடியேனுக்குத்தேஹஸம்பந்தியானதால் அடியேன் ஆதரவற்று எட்டுவயதில் அவளிடத்தில்சேர, லோகவைஷ்ணவனென்று என்னைஅவள்கூடஇட்டுக்கொண்டுமேற்கண்ட ஆந்த்ரதேஶங்களில் இரண்டுமூன்றுமாதம் ஒவ்வோரூரில்வாஸஞ்செய்து ஜகந்நாதயாத்திரைசெய்து த்ராவிடதேஶத்திலிருக்கும் திவ்யதேஶங்களை அடியேனுக்கிருபதாம் வயதில் ஸேவிப்பித்துக்கொண்டுவருகையில், மேற்படிபராங்குஶ அம்மையென்பவள்தானிருக்கும் அநுஷ்டானப்பள்ளத்தில்என்னைத்தள்ள அநேகவிதமானஸ்ரமப்பட்டு யத்னஞ்செய்ய, அவள்பேரில்அடியேனுக்கு அஸூயையுண்டாகி, அவள்செய்யும் அநுஷ்டானங்களிலும் அஸூயைபிறந்து ராமாநுஜஸித்தாந்தத்தைமூடத்தன்மையால்தூஷித்துச் சைவசமயத்தில்ப்ரவேஶிக்க, அதற்குவேண்டிய நூல்களைப்பார்த்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீமத்உபய வேதாந்தாசார்யரான விஞ்சிமூர் அநந்தாசார்யஸ்வாமிகள் அடியேனதுவேஷம் ஸ்ரீவைஷ்ணவவேஷமாயும்; மனதுசைவபக்ஷமாயுமிருப்பதைக் கடாக்ஷித்து, ஒருஸ்ரீஸூக்தி வெளியிட்டருள, இருபதுவயதுவரையில் பள்ளமடையாருடன் கூடித்தெரிந்துகொண்டதுஷ்க்ருத்யங்களை த்ராவிடதேஶஸ்வாமிகளிடத்திலு மிருக்குமென்றெண்ணி அக்ருத்தியங்களை வெளியிட்டு ராமாநுஜஸித்தாந்தத்தை அவிவேகத்தால் அடியேன் தூஷிக்கையில், அந்தஸ்வாமிகள் புன்சிரிப்புடன் விஶேஷக்ருபைகூர்ந்து, ஸ்ரீபிள்ளைலோகாசார்யர் ஸ்ரீவசனபூஷணத்திலுதஹரித்திருக்கும் ஸூத்ரங்களையும், ஸ்வரூபவிரோதிநிர்ணயரஹஸ்யமும், அதாவது!

## அவதாரிகை.

ஸ்ரீய:பதியாய், ஸ்ரீவைகுண்டநிகேதனனாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ப்ரத்யக்ஷபரமபதத்திலெழுந்தருளியிருக்கும் பெரியபெருமாள் திருக்குமாரராய், இவ்வுலகத்தைப்பாவனஞ்செய்யக் கூரகுலத்தில் திருவவதாரஞ்செய்த ஸ்ரீபட்டாரியர் திருவூசலில் எழுந்தருளியிருக்க. திருக்கரங்களில் அக்ஷயபாத்ரமேளப்பண்ணிக்கொண்டு. "ஸ்ரீமதேராமாநுஜாய நம:" என்றெழுந்தருளும் ஒருவிலக்ஷண ஸ்ரீவைஷ்ணவருக்கு ப்ரதிதிவஸமும் அதிகப்ரேமையுடன் திருப்பரிவட்டம் கடிதடத்தில் நன்றாயுடுத்துக்கொண்டு இரண்டுதிருக்கரங்கள் நிரம்ப அமுதுபடியைக்கொண்டு விலக்ஷணஸ்ரீவைஷ்ணவருடைய அக்ஷயபாத்ரத்தில்ஸமர்ப்பித்துக்கொண்டுவருகையில், கீதாபாராயணஞ் செய்துகொண்டுஅக்ஷயபாத்ரத்தையேந்திவரும் சதுர்வேத பண்டிதரானஒருப்ராஹ்மணஸ்ரீவைஷ்ணவர்இதைக்கண்டுநாம் அக்ரகுலஸ்தராயும்நான்குவேதங்களுக்கு அதிகாரியாயுமிருக்க,நம்மை அலக்ஷ்யஞ்செய்துசூத்ரனிடத்தில் எவ்வளவு ப்ரேமைவைத்திருக்கிறார். ஆ! ஆ! என்றாயாஸப்பட்டு, இந்தப்பட்டரோ இவ்விதமாயிருக்கில் மற்றவர்நம்முடையபெருமையையறிந்து என்னமர்யாதைசெய்யப்போகிறார்கள்என்றுஉபாதானத்துக்குப்போவதைவிட்டுவ்யஸனத்துடனிருக்க, ஸம்பத்குமாரர்திருமாளிகைப்பரிசாரகன் மூன்றுதிவஸம்அந்தஅக்ரகுலஸ்ரீவைஷ்ணவரைச்சேவித்து இரண்டுதினமாய்ச் சேவைஸாதியாதகாரணமென்னவென்றுவினவ, அந்தஸ்ரீவைஷ்ணவர்வ்யாகூலத்துடன்மஹாஜ்ஞாநிகளென்றும், ஸ்ரீரங்கராஜர் திருக்குமாரரென்றும் வழங்குகின்ற அந்தப்பட்டார்யர்நம்முடையயோக்யதையைஅறியாமல் அலக்ஷ்யஞ்செய்து உம்மைஅழைத்து அமுதுபடிஸாதிக்கும்படிநேமித்துச்சூத்ரப்பயலுக்குப் பயபக்தியுடன் தாமேஅமுதுபடிகொண்டுபோய்ஸாதிக்கிறார்;அக்ரகுலத்திலும்விசேஷஜ்ஞராயிருந்தும் நம்முடையயோக்யதையை அறியாமல் அலக்ஷ்யமாயிருக்கில், இனியார்அறிந்து மர்யாதைசெய்வார்களென்று உபாதானத்துக்குவருகை விட்டுவிட்டேனென்றுஸாதிக்க, அந்தப்பரிசாரகன், ஸ்வாமீ, திருவுள்ளத்தில்சீற்றம்வேண்டாம் அடியேன் பட்டார்யர்ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்கின்றேனென்றுபோய்ப் பட்டார்யர் திருவடிகளில் விண்ணப்பஞ்செய்ய, ஆ! ஆ! இப்படியோக்கியரென்றுநமக்குகிஞ்சித்தேனும்தெரியாமற்போயிற்று இனியெழுந்தருளினால் விசேஷமர்யாதையுடன் வர்த்திக்கிறோ

மென்று அருளிச்செய்ய, பரிசாரகன்ஸந்தோஷமாய் அந்த ஸ்ரீ
வைஷ்ணவரிடத்தில் விண்ணப்பஞ்செய்ய, மறுநாள் அந்த ஸ்ரீ
வைஷ்ணவர் அக்ஷயபாத்ரத்தைக்கொண்டுகீதாபாராயணத்துட
ன் பட்டர் திருமாளிகைக்கெழுந்தருள, விசேஷமர்யாதையுட
ன் சித்ராஸநத்தில் எழுந்தருளப்பண்ணி அடியேனுக்குப்பரன்
இன்னானென்று தெரியாமல்சஞ்சலப்படுகிறேன் தேவர்சஞ்சல
த்தைப்போக்கவேண்டுமென்று ஸ்ரீபட்டார்யர்அருளிச்செய்ய,
அந்தஸ்ரீவைஷ்ணவர்யோசித்து வேதங்கள்சேற்றில்நட்டகம்பத்
தைப்போலிருக்கின்றன, ஒருபக்கத்தில் ருத்ரன்பரனென்றும்,
ஒருபக்கத்தில் பிரமன்பரனென்றும், ஒருபக்கத்தில் விஷ்ணுபர
னென்றும், பலபலவிதமாய்ச் சொல்லுகின்றன, ஆகையால் எ
ன்னால்நிர்ணயிக்கக்கூடவில்லை யென்று ஸாதித்துக்கொண்டிருக்
கையில் ஸ்ரீமதேராமாநுஜாய நமః, என்றந்தவிலக்ஷணஸ்ரீவைஷ்
ணவர்எழுந்தருள, ஸ்ரீபட்டார்யர் நைச்யத்துடன் பரன்இன்னா
னென்றறியாமல்அடியேன்சஞ்சலப்படுகிறேன்ஆகையால்தேவ
ர்பரன் இன்னானென்றறிவித்து அடியேனைத் தேற்றவேண்டுமெ
ன்றருளிச்செய்ய,அந்தவிலக்ஷணஸ்வாமிஅடியேன்மஹாநீசன்,
பாமரன்,அஜ்ஞன்,அசக்தனென்றநேகவிதமாகநைச்யத்துடன்,
ஸ்வாமிகளருளிச்செய்யஅடியேன் அறியத்தக்கயோக்யதையெ
வ்வளவும் இல்லாதிருக்க, இப்படிக்கனுக்ரஹித்தால் ஸ்வாமிகள்
திருவடிகளில் அடியேன் எதுவிண்ணப்பஞ்செய்வேனென்றுவி
ண்ணப்பஞ்செய்ய, இப்படிக்குநைச்யாநுஸந்தானம் செய்ய
ப்போகாது, தேவர் அவஶ்யம் ஸாதித்தருளவேண்டுமென்று இ
ரட்டித்து ஸ்ரீபட்டார்யர் அருளிச்செய்ய, ஸ்வாமிகள்திருப்பவ
ளத்திலிருந்து சிந்தின ஸ்ரீஸூக்தியை விண்ணப்பம்செய்கிறே
னென்று செப்பி, லோகத்தார்யாவரும் வேதத்திலிருக்கும் உ
ண்மையான ஸாரத்தைஸுலபமாயறிந்து அநுபவித்து உஜ்ஜீ
விக்கவேண்டுமென்றுதிருவுள்ளம்பற்றி ஆழ்வார்கள்திருவாய்மல
ர்ந்தருளின த்ராவிடவேதத்தில் "ஒன்றுந்தேவுமு லகுமுயிருமற்
றும்யாதுமில்லா. அன்றுநான்முகன்றன்னொடுதேவருலகோடு
யிர்படைத்தான், குன்றம்போன்மணிமாட நீடுதிருக்குருகூரத
னுள். நின்றவாதிப்பிரானிற் கமற்றைத்தெய்வம்நாடுதிரோ" என்
று நம்மாழ்வாரும் "மற்றுமோர்தெய்வமுண்டோமதியிலாமா
னிடங்காள் உற்றபோதன்றிநீங்களொருவனென்றுணரமாட்டீர்
அற்றமேலொன்றறியீர் அவனல்லாற்றெய்வமில்லை கற்றினமே
ய்த்தவெந்தைகழலிணைபணிமினீரோ" என்றுதொண்டரடிப்பொ

டியாழ்வாரும் திருவாய்மலர்ந்தருளினதைஸ்வாமிகள் அடியோ ங்களுக்கு அடிக்கடி அருளிச்செய்தும் ஸ்வாமிகளுக்கே சந்தே ஹம் ஜனித்ததாய் அருளிச்செய்தால் அடியோங்கள் நம்பத்தக்க தோ, அடியேனைப் பரீக்ஷிக்கத் திருவுளம்பற்றி யருளிச்செய்த தேயன்றி வேறன்று என்று நைச்யாநுஸந்தானஞ்செய்ய, ஸ்ரீப ட்டார்யர் பரிசாரகனைக்கடாக்ஷித்து இவருடையநிர்ணயமும், அவருடைய நிர்ணயமும் அறிந்தீராவென்று, பின்பருளிச்செய் த ஸ்ரீஸூக்திகளை ஸ்வரூபவிரோதி நிர்ணயரஹஸ்யத்தில், கூர குலத்திலவதரித்த ஸ்ரீரங்கநாதபட்டர் அருளிச்செய்தார்.

ஸ்ரீரங்கநாச்சியார்திருவடிகளேசரணம்.

# ஸ்வரூபவிரோதி நிர்ணயரஹஸ்யம்.

தனியன்.

వందేసుదర్శనాచార్యం - వారిధింగుణసంపదాం
శ్రీరంగనాథంతత్సూనుం- గురుంస్తత్తుల్యవైభవం.

ஸம்ஸாரியான சேதனன் (భకారోభగవత్భక్తంగకారోగర్వభంజనం-వకారోవర్ణహీనత్వంతకారస్తత్వనిర్ణయం) என்கிற ப்ர பன்னநிலையை அறிந்து முமுக்ஷுவாகும்போது ஸ்ரூபவி ரோதிகளை அறியவேண்டும். ஸ்வரூபவிரோதிகள் தாம் அநேக ங்கள், அவற்றுள் முக்யமானது அதிகாரிகளையறிந்து நைச்யத் துடன் வர்த்தியாமை, ஸ்வரூபவிரோதம். அதாவது சக்ராங்கித ராய்த்திருமட்குறிகளுடன்பரனைப்பஜிப்பவன். அதிகாரியைஅறி

ந்து தண்டம்ஸமர்ப்பித்தால் ப்ரதிதண்டஞ் செய்யாமை ஸ்வ
ரூபவிரோதம். அத்தன்மையுடையவர்களுக்கு அதிகாரி, முதல்
தண்டஞ்செய்கை ஸ்வரூபவிரோதம். அசக்ராங்கிதபரனாய் ஶீ
லனாய்த் திருமட்குறிகளுடன் பரனைப்பஜிப்பவன் தண்டம்ஸமர்
ப்பித்தால் அஞ்சலிசெய்யாமை ஸ்வரூபவிரோதம். அத்தன்
மையுடையாருக்கு ப்ரதிதண்டஞ்செய்கையும் வெறுமனேயிரு
க்கையும் ஸ்வரூபவிரோதம். பஸ்மதாரியும் தேவதாந்த்ரபரனு
ம் பகவத்பக்தி செய்பவனுமாயிருந்து தண்டம்ஸமர்ப்பித்தால்
அஞ்சலிசெய்வது ஸ்வரூபவிரோதம். அத்தன்மையனாயிருப்ப
வனுக்கு மங்களாசாஸனஞ்செய்து ஆசார்யனைஸ்மரித்து ஸ்வ
ரூபஜ்ஞானியாகச் செய்யவேண்டுமென்று ப்ரபத்திசெய்யா
தொழிகை ஸ்வரூபவிரோதம். மணச்சோறு பிணச்சோறு,ரக்த
ச்சோறு, எச்சிற்சோறு,கூலிச்சோறு,விலைச்சோறு, புகழ்ச்சோ
று ஸ்வீகரிக்கை, ஸ்வரூபவிரோதம். இவைகளை ஸ்வீகரித்தசே
தனன் த்ருஷ்டித்த ஶேஷித்தை ஸ்வீகரிக்கை ஸ்வரூபவிரோதம்.
யஜ்ஞ, தான, தபோ, த்யான, சந்தியாவந்தன, பஞ்சமஹாயஜ்
ஞ,அக்னிஹோத்ர,தீர்த்தயாத்ர, புண்யக்ஷேத்ரவாஸ, க்ருச்ர,சா
ந்திராயண, புண்யநதீஸ்நான, வ்ரதசாதுர்மாஸ்ய, பலமூலாஶ
னஶாஸ்த்ராப்யாஸ,ஸமாராதன,ஜப,தர்ப்பணாதி கர்மாநுஷ்டா
னபரர்களைப்பாகவதராகநினைத்துப் பூஜிக்கைஸ்வரூபவிரோதம்
வேதகுத்ருஷ்டியான அத்வைதியையும், ப்ரபந்தகுத்ருஷ்டியா
ன பின்னஸம்ப்ரதாயஸ்தனையும், ரஹஸ்யகுத்ருஷ்டியான ஏகா
க்ஷரி, சதுராக்ஷரி, கொரிவிமதஸ்தரென்றும் பேர்வஹித்து வி
பரீதார்த்த ப்ரதிபக்தியும், பரஹிம்ஸையும் அபக்ஷ்யபக்ஷண
மும் பரதாரபரிக்ரஹமும் செய்து எம்பெருமானார் தர்ஶ
னத்தைக் கெடுக்கும் பள்ளமடையாரையும் விஶேஷஜ்ஞராக
நினைத்து ஸ்ரீபாததீர்த்தத்தளிகை ப்ரஸாதங்கள் லபித்துக்கொ
ள்ளுகை ஸ்ரூபவிரோதம். ஸமான அதிகாரிகளைக் கண்டமா
த்ரம், (వైష్ణవో వైష్ణవం దృష్ట్వా దండవత్ప్రణమేద్భువి) என்கிறபடி
யே வேரற்றமரம்போல் விழுந்து தண்டம்ஸமர்ப்பியாமை ஸ்
வரூபவிரோதம். அவர்களைப்பகவத்பாகவத ஆசார்யஸந்நிதிகளி

ல்முன்னிட்டு நைச்யமாய் வர்த்தியாமல்ஸ்வதந்த்ரனாய் வர்த்திக்கை,ஸ்வரூபவிரோதம்; அதிகாரிகளைக்கண்டமாத்ரத்தில்(ద్వామూర్తిర్వాసుదేవస్య। చరంచాచరమేవచ। అచరంబింబసంయుక్తం। చరంభాగవతాస్మృతాః) என்கிறபடியே ஸஞ்சரிக்கும் விபவாவதாரவ்யக்திகளென்றுநினைத்துப் பயபக்தியுடன் தண்டம்ஸமர்ப்பியாமல் ஸமபுத்திசெய்வது ஸ்வரூபவிரோதம் அதிகாரிகளைஸேவித்தவநந்தரம் பசியன் சோற்றைக்கண்டாப்போலே ஆவலுடன் ஸ்ரீபாததீர்த்ததளிகை ப்ரஸாதங்களைலபித்துக்கொள்ள ப்ரார்த்தியாமல், (జన్మనాజాయతేశూద్రః। కర్మణాజాయతేద్విజః। వేదస్వాధ్యయనాత్ విప్రః। బ్రహ్మజ్ఞానాత్తు బ్రాహ్మణః।) என்றும், (వసిష్టభార్యాచండాలా। పుత్రఃశక్తిర్మహామునిః। శక్తిభార్యాశ్వపాకీచ। పుత్రఃపారాశరస్తతః। తస్యభార్యాచకైవర్తీ। పుత్రోవ్యాసమహామునిః। వ్యాసపుత్రాఃపాండవాశ్చ। శుకశ్చవిదురస్తథా) என்றும், (స్పర్శవేధనసంబంధాత్। లోహమప్రాకృతంయథా। విష్ణుసంబంధసంస్కారాత్। జాతిభేదంనకారయేత్।) என்றும், శతబ్రాహ్మణముఖ్యేభ్యో। వరమేకోపివేదవిత్ వేదవిద్భ్యస్సహస్రేభ్యో। వరమేకోపియజ్ఞవిత్। యజ్ఞవిద్భ్యస్సహస్రేభ్యో। వరమేకోజితేంద్రియః। జితేంద్రియసహస్రేభ్యో। వరంవిష్ణోశ్చదాస్యవిత్) என்றும், (శ్వపచోపిమహీపాల। విష్ణుభక్తోద్విజాధికః। విష్ణుభక్తివిహీనస్తు। యతిశ్చశ్వపచాధమః) என்றும், (యేయజంతిహరింసర్వే। బ్రాహ్మణాఏవతేస్మృతాః। రుద్రాదియజమానస్తు। శూద్రఏవప్రకీర్తితః) என்றும்,(నారదోరజకీపుత్రో। నారదోభూన్మహామునిః। తపసాబ్రాహ్మణస్తత్ర। జాతిభేదంనకారయేత్) என்றும், (దురాచారోపిసర్వాశీకృతఘ్నోనాస్తికఃపురా। సమాశ్రయేదాదిదేవంశ్రద్ధయాశరణంయదా। నిర్దోషంవిద్ధితంజంతుంప్రభావాత్పరమాత్మనః) என்றும், (భరద్వాజాంగసంభూతో। భారద్వాజమహామునిః। తపసాబ్రాహ్మణస్తత్ర। జాతిభేదంనకారయేత్।) என்றும், అనాచారాన్దురాచారానజ్ఞానాన్హీనజన్మనః। మద్భక్తాన్దూషయేద్యస్తు। సద్యఃచండాలతాంవ్రజేత్) என்றும், (నశూద్రాభగవద్భక్తాః। విప్రాఃభాగవతాఃస్మృతాః। సర్వవర్ణేషుతేశూద్రా। యేహ్యభక్తాజనార్దనే) என்றும், (విష్ణుభక్తంశ్వపచంవాపి। నిందాంకుర్వంతియేనరాః। పద్మకోటిశతేనాపి

మామికదాచన।) என்றும், (శూద్రంవాభగవద్భక్తం। నిషాదంశ్వపచంతథా। ఈక్షతేజాతిసామాన్యం సయాతినరకంనరః) என்றும், (అర్చావతారోపాదానం। వైష్ణవోత్పత్తిచింతనం।మాతృయోనిపరీక్షాచ। తుల్యమాహుర్మనీషిణః) என்றும், (విప్రాద్ద్విషడ్గుణయుతాదరవిందనాభపాదారవింద విముఖాత్ శ్వపచంవరిష్ఠం) என்றும், (యథాతేతత్రవర్తేరన్ తథాతేతత్రవర్తేథాః)என்றும், (భక్తిరష్టవిధాహ్యేషా।యస్మిన్మ్లేచ్ఛేపివర్తతే।తస్మైదేయంతతోగ్రాహ్యం।సచపూజ్యోయథాహ్యహం)என்றும், “குலந்தாங்கு சாதிகணாலினுங் கீழிழிந்தெத்தனை, நலந்தானிலாதசண்டாள சண்டாளர்களாகிலும், வலந்தாங்குசக்கரத்தண்ணன்மணிவண்ணர்க்காளென்றுள், கலந்தாரடியார்தம்மடியாரெம்மடிகளே.” என்றும், “பழுதிலா வொழுகலாற்றுப்பலசதுப்பேதிமாரில், இழிகுலத்தவர்களேனு மெம்மடியார்களாகில், தொழுமினீர்கொடுமின்கொண்மி னென்றுநின்னோடுமொக்க, வழிபடவருளினாய் பொன்மதிட்டிருவரங்கத்தானே” என்றும், “அமரவோரங்கமாறும் வேதமோர் நான்குமோதித், தமர்களிற்றலைவராயசாதியந்தணர்களேனும் நுமர்களைப்பழிப்ப ராகினொடிப்பதோரளவிலாங்கே; அவர்கடாம்புலையர்போலுமரங்கமாநகருளானே” என்றும், (సిద్ధిర్భవతివానేతి।సంశయోచ్యుతసేవినః।నసంశయోత్రతద్భక్త।పరిచర్యారతాత్మనః॥) என்றும், (యంయంస్పృశతిపాణిభ్యాం। యంయంపశ్యతిచక్షుషా।స్థావరాణ్యపిముచ్యంతే। కింపునర్బాంధవాజనాః॥) என்றும், ப்ராஹ்மண்யம் விலைச்செல்லுகிறது வேதாத்யயனாதி முகத்தாலே பகவல்லாப ஹேதுவன்று, அதுதானே யிழவுக்குறுப்பாகில் த்யாஜ்யமாமிறே, ஜன்மவ்ருத்தங்களினுடைய உத்க்ருஷ்டமும், அபக்ருஷ்டமும், பேற்றுக்கும் இழவுக்கும் அப்ரயோஜகம், ப்ரயோஜகம், பகவத்ஸம்பந்தமும்; அஸம்பந்தமும், பகவத்ஸம்பந்தமுண்டானால் இரண்டும் ஒக்குமோவென்னில், ஒவ்வாது, உத்க்ருஷ்டமாக ப்ரமித்த ஜன்மம் ப்ரம்ஹவஸம்பாவனையாலே, “ஹரீசே” என்கிறபடியே பயஜனகம், அதுக்கு ஸ்வரூபப்ராப்தமான நைச்யம்பாவிக்கவேண்டும், அபகிருஷ்டமாக ப்ரமித்த உத்கருஷ்ட ஜன்மத்துக்கு இரண்டுதோஷ

மில்லை, நைச்யம் ஜன்மஸித்தம், ஆகையால், உத்க்ருஷ்டஜன்ம மேஸ்ரேஷ்டம்.“ஸ்வபசோபிமஹீபாலா” நிக்ருஷ்டஜன்மத்தால் வந்ததோஷம் ஸமிப்பது விலக்ஷணஸம்பந்தத்தாலே, ஸம்பந்தத்துக்கு போக்யதையுண்டாம்போது ஜன்மக்கொத்தைபோகவேண்டும்,ஜன்மத்துக்குக்கொத்தையும்,அதுக்குப்பரிஹாரமும், “பழுதிலாவொழுகல்” என்கிறபாட்டில் அருளிச்செய்தார். வேதகப்பொன்போலே இவர்களோட்டே ஸம்பந்தம், இவர்கள்பக்கல் ஸாம்யபுத்தியும், ஆதிக்யபுத்தியும்,நடக்கவேண்டும், அதாவது, ஆசார்யதுல்யரென்றும், ஸம்ஸாரிகளிலும், தன்னிலும்,ஈஸ்வரனிலும், அதிகரென்றும் நினைக்கை,ஆசார்யஸாம்யத்துக்கடி ஆசார்யவசனம், இப்படி நினையாதொழிகை அபசாரமென்றும், ம்லேச்சனும் பக்தனுகில் சதுர்வேதிகள் அனுவர்த்திக்க வறிவுகொடுத்துக்குலதெய்வத்தோடொக்கப்பூஜைகொண்டு பாவனதீர்த்த ப்ரஸாதநாமென்கிற திருமுகப்படியும், விஸ்வாமித்ர விஷ்ணுசித்த துளஸீப்ருத்யரோடே யுள்கலந்துதொழுகுலமானவன் நிலையார்பாடலாலே ப்ராஹ்மண வேள்விக்குறை முடித்தமையும், கீழ்மகன்தலைமகனுக்கு ஸமஸகாவாய்த்தம்பிக்குமுன்பிறந்து வேலும்வில்லுங்கொண்டு, பின்பிறந்தானைச்சோதித்துத் தமையனுக்கிளையோன் ஸத்பாவஞ்சொல்லும்படியேகுலமானமையும், தூதுமொழிந்துநடந்துவந்தவர்களுடைய ஸம்யக்ஸ்குண ஸஹயோஜனமும் ஒருபிறவியிலே யிருபிறவியானு ரிருவர்க்குந் தர்மஸூநுஸ்வாமிகளக்ரபூஜைகொடுத்தமையும், ஐவரில்-நால்வரில்-மூவரில் - முற்பட்டவர்கள் ஸந்தேஹியாமல் ஸஹஜரோடே புரோடாஸமாகச்செய்த புத்ரக்ருத்யமும், புஷ்பத்யாகபோகமண்டபங்களில் பணிப்பூவும் ஆலவட்டமும்வீணையுங்கையுமான வந்தரங்கரைமுடிமன்னனும் வைதிகோத்தமரும் மஹாமுனியு மனுவர்த்தித்தக்ரமமும், யாகானுயாகோத்ர வீதிகளில் காயான்னஸ்தல ஸாத்திபங்க்தின வ்ருத்தாசாரமறிவார்க்கிறே ஜன்மோத்கர்ஷாபகர்ஷங்கள் தெரிவது, அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணாஸ்ரமவித்யா வ்ருத்தங்களைக்கர்த்தபஜன்மம் ஸ்வபசாதமம் ஸில்பனைபுணம் பஸ்மா[illegible]

விதவாலங்காரமென்று கழிப்பர்கள். என்றும், (వయంతుహరిదా సానాంపాదరక్షావలంబినః) என்று ஏககண்டமாயிருக்கும் ஸ்ரீஸூக்திகளின் உண்மையை நெஞ்சில்கொள்ளாமலும் திருக்கச்சிநம்பிபக்கல் உடையவர்வர்த்தித்ததை ஸ்மரியாமலும், உடையவர் நேமனப்படிதனுர்த்தாஸர்பக்கலில்பட்டர்வர்த்தித்ததை ஸ்மரியாமலும் பாகவதர்களுடைய உத்பத்திசிந்தனம்பண்ணுகை ஸ்வரூபவிரோதம். ரஹஸ்யோபதேஶம் லபித்துக்கொண்டபின் ஆசார்யன்பக்கல் தோஷங்களையெண்ணித் தண்டம்ஸமர்ப்பியாதொழிகை ஸ்வரூபவிரோதம். ரஹஸ்யஜ்ஞானமுடைய ஶிஷ்யன் தண்டன்ஸமர்ப்பிக்கப் பாகவதனுகநினையாமல் மங்களாஶாஸனஞ்செய்வது ஸ்வரூபவிரோதம். பகவத்தாஸக்குழாங்களில், உண்ணும்போதொரு வார்த்தை உண்ணுதபோதொரு வார்த்தை யாடிக்கொண்டு வர்த்திக்கை ஸ்வரூபவிரோதம். ஸ்ரீரங்கநாயகி பாகவதர்கள் விஷயமாய் வர்த்தித்தது ஸ்மரியாமை ஸ்வரூபவிரோதம். இப்படிக்கு அறிந்துவர்த்திக்கும் முமுக்ஷுவானவன்பெரியபெருமாளுக்கு; பிராட்டிமாரிலும் நித்யஸூரிகளிலும் அத்யந்த அபிமதவிஷயமாகக்கடவன்.

## வாழித்திருநாமம்.

சீராருங்கூரகுலம் செழிக்கவந்தான்... ... ... ...வாழியே
ஸ்ரீபராசரபட்டர் சீருரைப்போன் ... ... ... வாழியே
பாராருமெதிராசர் பதம்பணிவோன் ... ... ...வாழியே
பாஷியத்தினுட்பொருளைப் பரிந்துரைப்போன்... வாழியே
ஏராருஞ்சரமார்த்த மெமக்களித்தோன் ... ... ...வாழியே
எழிற்சொருபவிரோதிகளையெடுத்துரைத்தோன்... வாழியே
ஆராமத்தென்னரங்கரருள்பெற்றோன் ... ... ...வாழியே
அரங்கநாதபட்டர்பொன்னடியிணைகள் ... ... வாழியே

ஸ்ரீரங்கநாதபட்டாரியர்திருவடிகளேசரணம்.



இந்தஸ்வரூபவிரோதி நிர்ணயரஹஸ்யமும், ஸ்ரீமத்வரவரமுனிகள் ஶிஷ்யரான எறும்பிலப்பா திருவாய்மலர்ந்தருளின விலக்ஷணமோக்ஷாதிகாரி நிர்ணயமென்னும் க்ரந்தத்தில் பள்ள

மடையாரனுஷ்டானங்களைக்கண்டித்து ஆழ்வாராசார்யர்கள் திருவுள்ளக்கருத்துகளை வெளியிட்டருளினதையும் மேற்கண்டவிஞ்சிமூர் அநந்தாசார்யஸ்வாமிகள் திருவாய்மலர்ந்தருளி, காந்தோபயந்த்ர ப்ரபன்னனென்று அடியேனைத்திருத்திப்புத்ரனாக்கிக்கொள்ள, பள்ளமடையார் அநுஷ்டானமான நரகஸமுத்ரத்தில் விழாமலும், சைவசமயத்தில் ப்ரவேசிக்காமலும் ஸ்ரீராமாநுஜர் திவ்யாஜ்ஞையிலிருந்து ஆநந்தக்கடலில்முழுகலாயிற்று.

இப்போது சிலர் தங்கள் தங்கள் அபிப்ராயங்களுக்கு இவ்விதமான ரஹஸ்யங்கள் விரோதமாயிருப்பதால் பூர்வாசார்யர்கள் திருவாய்மலர்ந்தருளின ஸ்ரீஸூக்திகளில் சில க்ராஹ்யமென்றும், சில அக்ராஹ்யமென்றுஞ்சொல்லி வருகிறார்கள். இப்படிச்சொல்லுமவர்களையெந்த ஆசார்யர்கள் க்ராஹ்யம், எந்த ஆசார்யர்கள்அக்ராஹ்யம், என்றுவிசாரிக்குமளவில், ஸ்ரீமணவாளமாமுனிகள் பர்யந்தம் பூர்வாசார்யத்வமுள்ளது; அவர்கள்ஸ்ரீஸூக்திகள் தான் நமக்குக்ராஹ்யம் மற்றவஷ்டதிக்கஜங்களுக்கும்அவர்கள்திருவடிகளிலாஸ்ரயித்தமுதலிகளுக்கும் பூர்வாசார்யத்வமில்லை; அவர்கள் ஸாதித்தவையெல்லாம்நமக்கு அக்ராஹ்யமேயன்றி, உபாதேயமன்றென்றுஞ்சொல்லுகிறார்கள். இப்படிக்குச்சொல்லுவதுஅஸத்ஸம்ப்ரதாயம். பூர்வாசார்யர்களாவார். ப்ரதமசேஷியான ஸ்ரீய:பதிமுதல் சரமசேஷிகளான ஆழ்வார்தொடங்கி அஷ்டதிக்கஜங்களும்அவர்கள் திருவடிகளாஸ்ரயித்த முதலிகள் பர்யந்தம் பூர்வாசார்யர்கள். இப்படி ஸத்ஸம்ப்ரதாயமாயிருக்க, இதைவிட்டுச் சிலர்பூர்வாசார்யத்வம்ஸ்ரீமணவாளமாமுனிகள் பர்யந்தந்தான் உள்ளது. மற்றமுதலிகளுக்கு இல்லையென்று சொல்லுவது தங்களுடைய அஜ்ஞானத்வமேயன்றிவேறன்று. ஆனால் பூர்வாசார்யத்வம் ஸ்ரீமணவாளமாமுனிகள் திருவடிகளையாஸ்ரயித்தவர்களுக்கும் அவர்களை யாஸ்ரயித்தமுதலிகளுக்கும் எவ்விதமாய் உண்டெனில், பரமாசார்யர்திருவடிஸம்பந்தத்தாலும் பரமாசார்யர்வசனத்தாலும் இவர்களுக்குப் பூர்வாசார்யத்வம் உண்டு. பரமாசார்யர் வசனமாவது; ஸ்ரீவானமாமலைராமாநுஜஸ்வாமியைத் தமக்குப் ப்ராண [illegible]

ரீத்தென்று அங்கீகரிக்கையாலும், கோயில் கந்தாடைஅண்ணனை (వరదనారాయణంస్తుమః) என்றும், காரார்பொழிற்கோயிற் கந்தாடை யண்ணனெனும், பேராளனையடைந்தபேர். எக்குணத்தோ ரெக்குலத்தோ ரெவ்வியல்போராயிடினும், அக்கணத்தேநம்மிறைவராவர்.) என்று ஸ்ரீமணவாளமாமுனிகள் அண்ணனைத் தமக்காசார்யரென்றும், அண்ணனுடைய ஸ்ரீபாதத்திலாஶ்ரயித்த முதலிகளைத்தமக்குப்பரமஸ்வாமிகளென்றும்பாசுரமிட்டிருக்க, அவர்களுக்குப் பூர்வாசார்யத்வ மில்லையென்று சொல்லுவதுயாருடைய துர்ப்போதனையோ அறிகிலேன். இதுவுமன்றியில்உபதேஶரத்னமாலையில்ஸ்ரீமணவாளமாமுனிகள்தாமே, (சீர்வசனபூடணத்தின் செம்பொருளை,) என்கிறபாட்டில் அஷ்டதிக்கஜங்களைத்தம் திருப்பவளத்தால்(ஆரியர்காள்) என்று ஸாதித்திருக்க அவர்களுக்குப் பூர்வாசார்யத்வம் இல்லையென்று ஸ்ரீகோசங்களிலொன்றிருக்க விஶ்வாமித்ர ஶ்ருஷ்டியைப்போல் தாங்களோர் அபார்த்தங்கற்பித்துக்கொண்டு சொல்லுகிறார்கள். அப்படிக்குச் சொல்லுவது ஸத்குருகுலவாஸஞ்செய்து எதீந்த்ரப்ரவணப்ரபாவம் நன்றாக ஶ்ரவணஞ்செய்யாத குறைதான். "வரதநாராயணம்" என்கிற அண்ணன் தனியனும். 'எக்குணத்தோரெக்குலத்தோர்' என்கிறபாட்டையும். "சீர்வசனபூடணத்தின் செம்பொருளை" என்கிறபாட்டின் வ்யாக்யானத்திலே பிள்ளைலோகம் ஜீயர் ஸ்பஷ்டமாயருளிச்செய்திருக்கிறார். உடையவருக்கு வடுகநம்பியைப்போல் தமக்கு அந்தரங்கராயும் நாற்பது ஸம்வத்ஸரம் ஸ்ரீபாததீர்த்தத் திருத்தளிகை ப்ரஸாதலப்தராயுமிராநின்ற ஸ்ரீகோவிந்ததாஸரப்பனென்னும் பரவஸ்து பட்டர் பிரான்ஸ்வாமியை "எல்லாருமெல்லாவற்றையுமறிவர்கள், நம்கோவிந்த தாஸரப்பன் நம்மையொழியவேறொன்றையறியமாட்டான்" என்றுஸ்ரீமணவாளமாமுனிகள் விஶேஷஅபிமானம் பண்ணியருளியும், ப்ரதிவாதிபயங்கர அண்ணாவுக்கு ஸ்ரீபாஷ்யாசார்யரென்ற திருநாமத்தைச்சாத்தியும் கோயிலண்ணனுக்குப் பகவத்விஷயாசார்யரென்ற திருநாமத்தைச்சாத்தியும், எறும்பிலப்பா, அப்பிள்ளார், அப்பிள்ளை, திருவேங்கடராமா

நுஜஸ்வாமி, இத்யாதிகளைப் போலவே விஶேஷ கடாக்ஷம் பண்ணியும், தம்முடைய திருப்பேரனாரானஜீயர் நாயனாருக்குத் திருவாய்மொழி ஆசார்யனென்று திருநாமம்சாத்தியிருப்பதால் பூர்வாசார்யத்வமுண்டென்பது நிச்சிதம். ஸ்ரீமணவாளமாமுனிகளாலே இப்படிவிஶேஷப்பெருமைபெற்ற அஷ்டதிக்கஜங்களுக்குப் பூர்வாசார்யத்வ மில்லையென்று சொல்வது எவ்வளவும் தகாது. இவர்களை பூர்வாசார்யர்க ளன்றென்று சொல்லும் பக்ஷத்தில் இவர்களாலேஸாதிக்கப்பட்ட ஸ்ரீஸூக்திகளும் உபாதேயமாகமாட்டாது, த்யாஜ்யமாம். ஸ்ரீஸூக்திகளாவன! அந்த்யமோபாய நிஷ்டை, தினசர்யை, விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம், ரத்னமாலைவ்யாக்யானம், ஸ்ரீயார்த்தி ப்ரபந்தவ்யாக்யானம், திருவாய்மொழி நூற்றந்தாதி வ்யாக்யானம் ஸ்ரீவைஷ்ணவஸமயாசார நிர்ணயம் ஸப்தகாதை வ்யாக்யானம்; ஈட்டுக்கு அடையவளைந்தானரும்பதம், ஜீயர்அரும்பதம், மூவாயிரத்துக்கும்அரும்பதம், எதிராஜவிம்ஶதிவ்யாக்யானம், "ஸ்ரீஶைலாதி" தனியன்களின்வ்யாக்யானம் இத்யாதிஸ்ரீஸூக்திகளெல்லாம் த்யாஜ்யமாம்.இத்யாதிகளையொருவரும்பரிக்ராஹ்யம்பண்ணப் போகாது. பரிக்ராஹ்யம்பண்ணும்போது, இவர்களுக்கும்பூர்வாசார்யத்வம்உண்டு வர்த்தமானகாலத்தில்ஶிஷ்டாக்ரகண்யரானவானமாமலைஸ்வாமிமுதலானயாவரும்இவைகளைப்பரிக்ராஹ்யம்பண்ணும்போது, அஶிஷ்டர் இந்த ஸ்ரீஸூக்திகளை அக்ராஹ்யமென்பது அவிவேகம். அஷ்டதிக்கஜங்களுக்கு, முன்புள்ள முதலிகள்ஸாதித்தஸம்ப்ரதாயார்த்தங்களையாசார்யமுகேன குறையறஶ்ரவணம்பண்ணி அவ்வர்த்தங்களைக்கடுங்காட்டிலேயெறித்தநிலாவாகாமே, மந்தமதிகளுக்குஸுவ்யக்தமாம் படியும், ஸ்வாசார்யபரமாசார்யர்முகமலர்த்திக்காகவும் இவர்கள்விஸ்தாரமாகஸாதித்ததேயன்றித் தங்களுக்கொருக்யா திலாபபூஜாதிமித்தமாகஸாதித்ததன்று. ப்ரஹ்மதேஶத்துக்கலிகாலசோழப்ரஹ்மாராயன்நம்மாழ்வார்திருவுள்ளத்துக்கனியதாதிருவாய்மொழிக்குவ்யாக்யானம்பண்ணினாற்போல் அஷ்டதிக்கஜங்களும் அவர்கள் ஸ்ரீபாதத்திலாஶ்ரயித்தமுதலிகளும் தங்கள் ஸ்வாசார்

யபரமாசார்யர்கள்திருவுள்ளத்துக்கன்யதாஸாதித்திருந்தால் இ
வர்கள்ஸாதித்ததும்த்யாஜ்யமாம். ஆசார்யர்கள்திருவுள்ளத்தை
யடியொற்றிஸாதித்திருப்பதால்அவற்றை யுபாதேயமாகக்கொ
ள்ளுகைக்குஎவ்வளவும்ஸம்ஶயிக்கவேண்டுவதேயில்லை. ஸம்ஶய
ஜ்ஞானம் பிறக்குமேயாகில் பூர்வாசாயர்களுக்கும் ஈடுதொ
டக்கமான ஸம்ப்ரதாயார்த்தங்களுக்கும், வர்த்தமான கா
லத்திலுள்ள ஆசார்யஸந்ததி களுக்கும் அவர்கள் திருவடிக
ளையாஶ்ரயிக்கிறதற்கும் அவர்கள் ஸாதிக்கும் இதாஹிதங்களு
க்கும் கொத்தைநேரிடும். அதாவது இழிவுவரும். இதன்றியில்அ
ஷ்டதிக்கஜங்களுக்கும் அவர்கள்திருவடிகளிலாஶ்ரயித்தமுதலிக
ளுக்கும் பூர்வாசார்யத்வம் இல்லையென்னும்போது ஸ்ரீபராங்கு
ஶபரகாலபட்டநாத எதிராஜவரவரமுனிகளித்யாதிமஹனியர்
களுக்கும் அவர்கள் பக்ஷத்தால் பூர்வாசார்யத்வம்இல்லையாய்வி
டும். இவர்களுக்குப்பூர்வாசார்யத்வமில்லாதபோது விஶிஷ்டா
த்வைதமேபொய்யாய்விடும். நம்குலநாதர்களான ஸ்ரீபராங்கு
ஶபரகாலநாதயாமுன எதிராஜஸ்ரீவரவரமுனிகளித்யாதிமஹனி
யர்கள் மஹாப்ரயாஸைப்பட்டு நிலைநிறுத்தின இத்தரிஶனத்துக்
கு இராவணசன்யாஸி,பௌண்ரிகவாஸுதேவனைப்போலிக்கா
லத்திலிவர்கள்தோன்றி அவித்யத்தைவிளைவிக்கிறார்கள். இப்படி
யிவர்கள் அவித்யத்தை விளைவிக்கிறதற்குஹேதுவேதெனில், க
ருவில் திருவில்லாமையாலும் ஸதாசார்யஸமாஶ்ரயணம் பலி
யாமையாலும், ஶரணாகதிஶரண்யனைக்காட்டாமையாலும், ஜ
னனமரணத்துக்கு நாற்றங்காலழியாமையாலும், அஹங்காரம
மகாரங்கள் மேலிட்டபடியாலும், அர்த்தகாமாதிகளில் நசை
யறாமையாலும், அவாவற்று வீடுபெறப்ராப்தியில் லாமையா
லும்; அஷ்டதிக்கஜங்களுக்கும் அவர்கள் திருவடிகளிலாஶ்ரயித்
தமுதலிகளுக்கும், பூர்வாசார்யத்வமில்லை யென்று தங்கள்தங்க
ள்ஸ்வா அபிப்ராயங்களுக் கனுகூலமாயிருக்கும் சில ஸ்ரீஸூக்
திகளைக்ராஹ்யமென்றும் தங்கள் ஸ்வாஅபிப்ராயங்களுக்குப்ர
திகூலமாயிருக்கும் ஸ்ரீஸூக்திகளை அக்ராஹ்யமென்றும்சொல்
லியாசார்யர்கள் திருவடிகளிலும். பாகவதர்கள் திருவடிகளிலும்

அபசாரப்பட்டு (நக்ஷமாமிக்கும் க்ஷிபாமிக்கும்) லக்ஷ்ய மாய் அருநரகத்தழுந்தும் பயன்படுகைக்குப்ராப்தி யுண்டா கையாலே இப்படிக்கு அவத்யத்தை விளைவிக்கைக்கு ஹேது வாயிற்றென்று ஸ்ரீஜநார்த்தநத்தில் ப்ரகடனஞ்செய்து ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸ ராமாநுஜதாஸரது கக்ஷியை ஸ்திரப்படும்படி செய்துவைத்தார், இதுவரையிலுங்கண்ட அநுஷ்டானங்களை இப்போது த்ராவிடதேசங்களில் அபரிமிதமாய் அநுஷ்டித்துக் கொண்டு வருகிறார்கள். சிலவிடங்களில் ப்ரத்யக்ஷமாய்ச்சிலக்ருத்யங்கள் காணும்படியாகவும் மற்றக்ருத்யங்கள் கேள்வியால் மனதுக்கு ஸ்திரப்படும்படி யாகவும், இருக்கின்றன. இஃதிப்படிருக்க ஷை பள்ளமடையாரில் யாரோவொரு ஏகாக்ஷரிசரமச்லோக ஸாரமென்று கற்பனைசெய்து இதை ஸ்ரீ பராசரபட்டர் நஞ்ஜீயருக்கு அருளிச்செய்தாரென்று கற்பனைசெய்தபுத்தகத்திலேயே யெழுதியிருக்க! வைஷ்ணவத்தில் வஸிக்கும்சிலதாந்தோன்றிகள் அந்தக்கற்பனைப்புத்தகத்தைப் பள்ளமடையாரைக்கேட்டு வாங்கிவைத்துக்கொண்டு இனிமேலிந்த க்ரந்தம் வெளிப்பட்ட வனந்தரம் அடியேனை ஸங்கிக்கவேண்டுமென்று உத்தேசித்திருக்கின்றார்கள். அத்தாந் தோன்றிகள் எவ்விதலக்ஷணமுள்ளவர்களெனில்? மதுவைமாத்திரம்நீக்கி மாம்சாதிகளை வேண்டுமளவும் ரஹஸியமாய்ப்புஜித்துக்கொண்டு புறம்பில்புஜியாதவர்களைப்போல், பள்ளமடையார்கள் ஷைமதுமாம்சாதிகளைத் தின்பது கேவலம் ப்ரமாணவிரோதமென்றும், அக்ரமமென்றும் பலவாறாய்த் தூஷித்துத் தாமுமொரு ப்ரபன்னனைப்போல் ஒழுங்காய்ப்பேசுவர்கள். சிலர் தேவதாந்த்ரங்கள்செய்துகொண்டுவந்தும் புத்தித்யாஜியமாய்க்கருமங்களனுஷ்டிக்கலாமென்று சொல்லுமவர்களைப்போல்தேவதாந்தரங்களை யனுஷ்டித்துக்கொண்டு எங்கள்மனமதிற்பற்ற வில்லையென்று கூறுவர்கள். சிலர்தேவதாந்தரங்களைத் தங்கள்குடும்ப நிர்ப்பந்தத்தால் ரஹஸ்யமாயனுஷ்டித்துக்கொண்டு புறம்பிலனுஷ்டியாதவரைப்போல்நடிப்பர்கள். சிலர் செவ்வையாயொரு ஆசார்யனன்னதிபண்ணிஸ்வரூபஸிக்ஷையாய், ரஹஸ்யாதிக்ரந்தங்களுப

தேஸமாய்ப்பெருமல் சிலஎட்டுப்பிரதிகளையும் அச்சிற்பதிப்பித்தபுத்தகங்களையுஞ்சம்பாதித்துக்கொண்டு, ஊமைவாயனுக்கு உளறுவாயனுற்பாதபிண்டமென்று சொல்லும்பழமொழிபோலும் (ఉపాయస్యాస్య గ్రంథో।ఉపాయపిజజాత్మకా।అపాయాసోహస్య మాహాత్మ్యం। పకశ్శిష్యోపరో గురుః।) என்னும் ப்ரமாணத்தின்படியே திவ்யப்ரபந்தங்களில் திருபல்லாண்டு தனியன்களைத்திருத்தமாய்ஸேவிக்க மாட்டாதவர்களும், ஸ்வயமாசார்ய புருஷர்களாய்ச்சில உளமையர் களைக்கூட்டமாய்ச்சேர்த்துக் கொண்டு ஏட்டிலிருப்பதுவாயிலில்லாமலும், வாயிலிருப்பது ஏட்டில்காணவரிதாய்ச்சிலகட்டுக்கதைகளை ப்ரஸங்கஞ்செய்துகொண்டும் ஸாதுக்களாகிய பெரியோர்களைநிந்தித்தும், தகாதக்ருத்யங்களனுஷ்டித்துக்கொண்டும் தங்களுக்குநிகரானபூர்ணாதிகாரிகளும்தங்களுக்கொத்தவனுஷ்டானபரர்களுமிவ்வுலகத்திலொருவருமில்லையென்று நினைத்து இறுமாந்துதிரிபவர்களுமாயிருக்கிறார்கள். இப்பேர்க்கொத்தவர்களை ஸ்ரீமணவாளமாமுனிகள், "முன்னோர் மொழிந்த முறைதப்பாமற் கேட்டுப் பின்னோர்ந்துதாமதனைப்பேசாதே தந்நெஞ்சில்தோற்றினதேசொல்லியிதுசுத்த உபதேசபரவார்த்தையென்பார் மூர்க்கராவார்" என்று உபதேசரத்னமாலையி லருளிச்செய்திருக்கும் நிலைக்கேஸதுவாய்நிற்பர்களென்பதற்கு யாதொருசந்தேகமுமில்லையென்றுபுத்திமான்கள் தெரிந்து கொள்ளலாம். ஷை லக்ஷணமுள்ள தாந்தோன்றிகள் ஷை புத்தகத்திலிருக்கும் ஆபாஸார்த்தங்களைப்பட்டர்ஸாதித்ததுவாஸ்தவ்யமா? அல்லது அவாஸ்தவ்யாமாவென்றறிந்து கொள்ளாமல் ஸங்கிக்கநினைத்திருப்பது அத்யாஸ்சர்யமா யிருக்கின்றது. ஷைபுத்தகத்தையுமித்துடனெழுதலாமென்றுயோசித்தால் க்ரந்தம்விஸ்தாரமாவதன்றிக்கே அப்ரயோஜனமாயிருக்கின்றது எதுக்கெனில்? முன்கண்டிருக்குந் துர்மார்க்கவேகாக்ஷரிரஹஸ்யத்திலிருக்கின்ற தாத்பரியமே யதில்தேறுவதால் இங்கு எழுத வேண்டுவதில்லை ஆகிலும் அதிலிருப்பதுமெய்யோபொய்யோவென்று சிலருக்கு ஸம்ஸயம் ஜனிக்குமென்று தோன்றினமையால், ஷைபுத்தகத்திலிருக்கும் முக்யகருத்தை யிங்குதஸங்ரிக்கி

றோம். ஸ்ரீக்ருஷ்ணபகவான் ஜகந்நாதராயவதரித்து ஸுபத்ரா தேவியான பெரியபிராட்டியாருக்குச் சரமஶ்லோகஸாரத்தை யுபதேசித்தாரென்றும், அந்தப்பெரியபிராட்டியார் ஸ்ரீஸேனை முதலிகளுக்கும்,ஸேனைமுதலிகள் நம்மாழ்வாருக்கும், நம்மாழ் வார் ஸ்ரீமன்னாதமுனி மதுரகவிகளுக்கும், ஸ்ரீமன்னாதமுனிகள் ஸ்ரீபுண்டரீகாக்ஷருக்கும், ஸ்ரீபுண்டரீகாக்ஷர் ஸ்ரீராமமிஶ்ரருக்கு ம், ஸ்ரீராமமிஶ்ரர் ஸ்ரீஆளவந்தாருக்கும், ஸ்ரீஆளவந்தார் திருக் கோட்டியூர் நம்பிகளுக்கும், நம்பிகள் எம்பெருமானாருக்கும், எம்பெருமானார் எம்பார் கூரத்தாழ்வான், ஸ்ரீபட்டர்முதலான ஸ்வாமிகளுக்கும் உபதேசித்திருப்பதாயும், அதைநஞ்சீயர்உப தேசிக்கவேண்டுமென்றுதண்டஸமர்ப்பித்து, ஸ்ரீபராசரபட் டரிடம் விண்ணப்பஞ்செய்ததாயும், அநந்தரம்;பட்டர்சரமஶ் லோகஸாரத்தைநஞ்சீயருக்குஸாதித்ததாயும்பள்ளமடையார் எ ழுதியிருக்கின்றார்கள். அதில்முக்யமாய்த்தேர்ந்தசங்கதியென்ன வென்றால்! சரமநிஷ்டையென்கிறஸ்வரூபஜ்ஞானஎஜ்ஞமென்று சொல்லுங்க்ருத்யத்துக்குவிஹிதமான இரண்டுவஸ்துக்களைஸ்வீ கரிக்கவேண்டுமென்றும், அதற்குமுன் விலக்ஷணமாகத்திருவாரா தனம்பண்ணவேண்டுமென்றும்,தத்ஸந்நிதியிலே ஆதிகூர்மாகார த்தையும்,அஷ்டாக்ஷரிபத்மத்தையும், அமுதுபடியாலேற்படுத் தி அதின்மேலே யிரண்டுவஸ்துக்களென்னும்மதுமாம்சாதிகளை நிறைத்து"ஸர்வதர்மான்பரித்யஜ்ய" என்கிறமந்த்ரத்தாலே மூ ன்றுதரம் ஸ்பரிசித்து ஶுத்தியாக்கி,அந்தவஸ்துக்களையும் ஸக லபதார்த்தங்களையுந்திருவாராதனைக்கு அமுதுசெய்வித்தனந்த ரம், ஏகாந்தப்ரதேசத்தில் ஆசார்யனை ஒருமணையின்பேரில் கு ந்துகால்வைத்திருக்கவும் கைகளைக்கூப்பிக்கொள்ளவுஞ்செய்து, அவனதுகாலின்கீழொரு வாழையிலையைப்போட்டு அதின்மே லொரு தளுவத்தைச்சுற்றிவைத்து, அதின்மேலவனது இரண்டு கால்களையுஞ்சேர்த்துவைத்துத் திருத்துழாயைப் பவித்திரவிர லின் சந்திவிடுக்கிக்கொண்டு ஷையானடிகளைக்கழுவி, தூப,தீப, சந்தன, குங்குமம்,தாம்பூலாதிகளாலேயர்ச்சித்தபின்பு,அடிகளை க்கழுவினஜலத்தை வாங்கிக்கொள்ளவேண்டுமென்றும், அவனு

ண்ட ஶேஷிமான மதுமாம்சான்ன தாம்பூலாதிகளைப்பெற்றுக் கொள்ளவேண்டுமென்றும், அநந்தரம் அகார உகார மகாரங்களோடேகூடியேகாக்ஷரமாய் ஒருமந்த்ரமாயிருக்கின்ற மந்த்ரார்த்தத்தைத் தாஸபூதனாய் லபித்துக்கொள்ளவேண்டுமென்றும், மந்த்ரார்த்தமாவது—த்வயஶேஷமென்றும், த்வயஶேஷிமாவது: அகாரவாச்யரென்னு மாசார்யரும், உகாரவாச்யரென்கிறதேவிகளும், மகாரவாச்யரென்னும் சேதனரும் ஏகவஸ்தராய், சரமசெய்யே என்னும் ஶேஷபான்பிலே நிர்பரத்வராயிருந்து, ஸித்தோபாய ஸ்வீகாரத்தைப்பண்ணி, ஶேஷபூதனான சேதனன் மிதுனத்துக்கு ப்ராப்யனாகவேண்டுமென்றும், அவனுக்கதுவே தாரகபோஷக போக்யங்களென்றும், அவனுக்கதுவே உபயவிபூதிக்குக் காரணமென்றும், இவ்விதமாய் அனுபவியாமல் வேறுவிதமாயனுபவித்தால் நரகம் ஸித்தமென்றும், நஞ்சீயருக்குப்பட்டர் அருளிச்செய்ததாய் எழுதியிருக்கின்றார்கள். இப்படிக்குத் துர்மார்க்கர்கள் கல்பனைசெய்திருக்கும்புத்தகப்போலியை வாங்கிக்கொண்டவர்கள்பார்த்து, இந்தஆபாஸத்தையும் பட்டர் நஞ்சீயருக்கு உபதேஶித்திருப்பாரவென்றுசற்றேனும் யோசியாமல் அடியேனிடம்ஶங்கைசெய்யயோசித்திருப்பதை நினைக்குமளவில்,இவர்கள்வணங்கி ஸத்குருகுல வாஸஞ்செய்து திவ்யார்த்தங்களை ஶ்ரவணஞ்செய்யாத ப்ரபாவமேயன்றி வேறன்றென்றுஸ்பஷ்டமாகின்றது. இப்போது சிலபள்ளமடையார் கோயில்தாஸநம்பிகளுக்குத்துராநுஷ்டானங்கள்கற்பித்துத்தங்களைப்போலவேசெய்துகொள்ளவேண்டுமென்று எண்ணங்கொண்டுவெளித்தேசங்களிலிருந்து "மாரீசன்வனத்தில்சேர்ந்ததைப்போல்" கோயிலில்சேர்ந்து கோயில்தாஸநம்பிகள் ஶிஷ்யமாயதிவிஶ்வாஸமுள்ளவரைப்போல்வர்த்தித்துக்கொண்டு, அவர்களுக்குத் துர்ப்போதனைசெய்துகொண்டு வருகிறதாய்க் கோயிலிலும் வெளித்தேஶங்களிலும் பஹுஜனங்களதிகப்ரஸித்தமாய் வழங்குகிறார்கள். இந்தப்பள்ளமடையார்அவர்களைக்கெடுக்க எவ்வளவுப்ரயத்னஞ்செய்தபோதிலும், இவர்களொருங்காலும்பள்ளமடையாருடைய கருத்தின்படி யெவ்வளவும் இசையவே

மாட்டார்கள். ஏனெனில்? இவர்கள் இசைந்தார்களேயாகிலிவர்களுக்கிருக்கும் ஸௌஸ்வெல்லாமழிந்து கோயில்கைங்கர்யங்களையும்இழைந்துவிடுவர்கள். ஆகையாலதுஎவ்வளவும் நடக்கவேமாட்டாதென்றுஉறுதியாய் நம்புகிறேன். சிலவருஷங்களுக்குமுன்பு இராயவேலூரில்பள்ளமடைச்சதுராக்ஷிசம்பந்தத்தில்சிலராஸ்ரயித்து அந்தத்துராநுஷ்டானங்களில் மனங்கொள்ளாமல்ராஜாங்கபரியந்தம்வந்திருந்தது இப்போதும்லோகப்ரஸித்தம். இதுவுமன்றியில்திரிசிரபுரத்தில்-எ-அ-௵க்குமுன், ஸ்ரீமான் நாராயணராமாநுஜதாஸரைப் பள்ளமடையாரான ஏகாக்ஷிகள்துற்போதனைசெய்து தங்கள் அநுஷ்டானமாகிய படுகுழியில் மூக்காலேமூன்றுவீசம் அழுத்திவிட, ஸ்ரீமத், உபய, அஷ்டகோத்ரஸஹஸ்ரதர்ஸநாசார்யருக்குத் தெரிந்து மஹாப்ரயாசப்பட்டு, மேற்படி படுகுழியில் விழவொட்டாமல் திருத்தியாட்கொண்டார். மேற்படியூரில் ஸ்ரீமான் கருடத்வஜராமாநுஜதாஸரைச் சதுராக்ஷிகள் துர்ப்போதனைசெய்துகெடுக்க யத்நித்தஸமயத்தில், அவருக்குத்துர்ம்மார்க்கக்ருத்யங்களென்று மனத்திற்பட்டு மீண்டார். இப்படிக்குமேற்படியூரில் சிலபுத்திமான்கள்தப்பித்துக்கொண்டார்கள். சிலரோ அவர்கள்போதனைக்குட்பட்டுப்புத்திஹீனராய்அப்படுகுழியிலழுந்திவிட்டார்கள். இப்படிப்பட்டகூட்டத்தாரில்ஒருகிழவன், கோயம்புத்தூரில்தன்னுடையமகளைத்தன்னிடம்துர்ம்மார்க்கஸரணாகதிசெய்துகொள்ளயத்னஞ்செய்ய, அவளொப்பாமல்சேலத்தின்ஸமீபத்தில்பாலபாளயமென்னும்க்ராமத்திற்குஸ்ரீபாஷ்யபுரமென்றுபேர்வைத்துக்கொண்டிருக்கும் சதுராக்ஷிகளில் ஒருசதுராக்ஷியானிடத்தில் துர்ம்மார்க்கஸரணாகதியென்றுதுஷ்க்ருத்யத்தைநடத்திக்கொண்டு அவர்கள்கூட்டத்திலொருவனுடன் பல்லாரிமார்க்கமாய்ப் போய்விட்டாள். மேற்படிசேலத்துக்குச் சுற்றுப்புறத்திலிருக்கும்அநேகர்களைஅந்தப்பாலபாளயத்திலிருக்கும் சதுராக்ஷிகளிற்புக்குஸரணாகதிசெய்துகொண்டதில் ஒருவனுக்கு ஸப்ரஹ்மமென்றுபேர்வைத்து ஆசார்யஸ்தானத்துக்கு அர்ஹனாகப்பட்டங்கட்டிவைத்தான். இவனும் அவனும் பஹுஜனங்களுக்குத் துர்ப்போத

னசெய்து வரும்நாளில் ஸ்ரீமான், பாஷ்யகார தாஸனைத்தங்க ளுடன்சேர்த்துக்கொள்ள, அவருக்கமோஹமாய்ப் போதித்து ச்சரணாகதியானவர்களுக்கே பரமபதம், ஆகாவிடில் பரமபதங் கிடையாதென்று சொல்ல, அதை அந்தத்தாஸர்கேட்டு ப்ரமித் து, இதின் வ்ருத்தாந்தத்தை யேகாக்ஷரிகளிலொருவனை விசாரி க்க, அந்தஏகாக்ஷரிகளுக்கும் சதுராக்ஷரிகளுக்கும்விரோதமாத லால் அந்த ஏகாக்ஷரியானவன் இவர்கள்நடத்தும் துஷ்க்ருத்யங் களையெல்லாம் இவருக்குவிவரித்துச்சொல்ல, அதைக்கேட்டு, இ வர்மருண்டு மறுநாள் அக்ஷயபாத்ரத்துக்கு எழுந்தருளும்போ து அந்தச்சதுராக்ஷரிகள் மறுபடியும்பீடிக்க, அதின்பேரில் உங் களுடைய அநுஷ்டானம் இவ்விதமாமேஎன்று ஏகாக்ஷரிசொன் னதைச்சொல்ல, நம்முடையஸங்கதிகளைத்தெரிந்து கொண்டா ரென்றபயத்தால் அவரைமிகவும் கேட்டுக்கொண்டதாவதுயாரா வது இப்படிசெய்வர்களா ? இந்தஸங்கதிகளையெங்குஞ் சொ ல்லவேண்டாம், நீரும்இதில்ப்ரவேசிக்கவேண்டாமென்றுசொல் லி அனுப்பிவிட்டார்கள். கோயம்புத்தூரில்-எழுஸம்வத்ஸரங்க ளுக்குமுன், ஒருநாயகர், அத்தங்கிஸ்வாமிகள் திருவடிகளிலாஶ்ர யித்து, க்ரமமாயிருக்க, ஏகாக்ஷரியான் ஒருவன் அவருக்குத்து ர்ப்போதனைசெய்து தன்ஸித்தாந்தத்துக்குள் ஐக்யப்படுத்திக் கொண்டான், இப்படிக்கு ஐக்யப்படுத்திக்கொண்ட ஏகாக்ஷரி யை அவ்வூரில்சிலவிவேகஶூன்யர்கள், ஆஶ்ரயித்து மேற்சொ ன்னபடி ஶரணாகதிசெய்துகொண்டார்கள். அவர்களில் ஒரு மௌட்யன், இதுவரையில்சொல்லிவந்ததுர்ம்மார்க அநுஷ்டா னங்கள் செய்கிறவர்களே க்ரமமான வைஷ்ணவர்களென்றும், ம ற்றயாவரும் அவைஷ்ணவர்களென்றும், அநேகரிடத்தில்வாதிப் பதுமன்றியில், தன்னைப்போலிருக்கும் ஸர்வமூடர்களுக்குந்து ர்ப்போதனைசெய்து அந்தஏகாக்ஷரியர்னிடத்தில் ஸமாஶ்ரயண முதலானவையெல்லாஞ் செய்வித்தான். இவ்விதமான யோக்ய ர்கள் ஒருகாலத்தில்கூரகுலோத்தமரான ஸ்ரீமத், உபய, திருவே ங்கடபட்டார்யரை அவமானப்படுத்தயோசிக்க, அவர்கள் என் னம் நிறைவேறாமல் பெரியபெருமாள் ஸந்நிதியில் அத்யயன

உத்ஸவத்தில் அவமானப்பட்டார்கள். இப்படிக்குத்துர்ம்மார்க்கக்ருத்யங்களையுடைய பள்ளமடையார் நடத்தைகளை அறிந்து பாகவதர்களென்று நினைப்பவர்களும் அப்படிநினைத்துத் த்ரவ்யஸஹாயமாவது, தேஹஸஹாயமாவது, வாக்ஸஹாயமாவது மற்றும் எந்தவிதஸஹாயமும்செய்பவர்களும், அந்தப்பள்ளமடையார்களும், பாரதத்தில், ஆதிபர்வம், சந்தநுமஹாராஜனுத்பநசருக்கத்தில்சொல்லியபடி அஷ்டவஸுக்களிலொருவனாகிய ப்ரபாஸனென்பவன்தன்மனைவியின் சொற்படிவஸிஷ்டரிடமிருந்த காமதேனுவைக்கொண்டுவரப்போனதில், அவனுக்குஸஹாயமாகச்சென்ற அநலன், அநிலன், ஆபச்சைவன், ஸோமன், தரளன், த்ருவன், ப்ரத்யூசன்; என்னும்எழுவஸுக்களும்ப்ரபாஸனுக்குத் தேஹஸஹாயஞ்செய்யப்போய் ப்ரபாஸனுக்குவந்த வஸிஷ்டர் ஶாபத்துக்கு இவர்களும் பாகஸ்தர்களாய் அநுபவித்ததைப்போலவும்; அந்தப்பாரதத்திலேயே ஆரண்யபர்வம் நச்சுப்பொய்கைச்சருக்கத்தில், கொடியனாகிய துர்யோதனனுக்கு அநேகவிவேகத்தைச்சொல்லியும் அவன்கேளாமல்கொண்டதுஷ்க்ருத்யத்துக்குட்பட்டு யாகஞ்செய்தகாளமாமுனியென்பவர் த்ரிகாலஜ்ஞானியாயும் ப்ரஹ்மநிஶ்சயம் தெரிந்தவராயும் இருந்தும் துர்ம்மார்க்கன்செய்யும் துஷ்க்ருத்யங்களுக்குட்பட்டபடியால்; அவர்செய்தயாகத்திலுண்டான பூதத்தினாலேயெவ்வாறிறந்தனரோ அத்தன்மைபோலவும், ஷ மதஸ்தர்களும் அம்மதஸ்தர்களுக்கு எவ்விதத்திலாவது ஸஹாயஞ்செய்கிறவர்களும் மேற்படி துர்ம்மார்க்கரோடு பாகஸ்தர்களாய், இவர்கள் எல்லாரும் பூதப்ரேத பிசாசமண்டலம் சேர்வார்கள். இதற்குத்திருஷ்டாந்தரம் ப்ரத்யக்ஷமாய் இக்காலத்தில் களவு, மோசம், கொலை, முதலானவைகளைச் செய்யுமவர்களையும் அவர்களுக்கு ஸகாயஞ்செய்யு மவர்களையும் இராஜாங்கத்தார் தண்டிப்பதை நாமெல்லோரும் கண்டிருக்கிறோமல்லவா ! அத்தன்மையாகவே ஷ துர்ம்மதஸ்தர்களும் ஸஹாயபரர்களும் காலனாஜ்ஞையின்படி ஷ மண்டலத்தையடைய ஸந்தேஹிக்கவேண்டுவதேயில்லை. இவர்கள்யாவரும் புண்யா

புண்யங்கள் க்ஷீணித்துப் பூலோகத்தின்கண் ஜனிக்கவருவர்கள். இந்தலோகங்களின் விவரம் எவ்விதமெனில் மேருவுக்குக்கீழ்ஸப்தஸமுத்ரங்கள்,ஸப்தத்வீபாந்தரங்கள்,ஸப்தகுலபர்வதங்கள், இந்தத்வீபாந்தரத்தில், (చాతుర్వర్ణ్యంతు మానుషః|) என்கிறபடியே, அநேகவிதமனுஷ்யர்களிருப்பர்கள். ஸப்தகுலபர்வதங்களில்,மஹரிஷிகளும் ஸிம்ஹஶார்த்தூலாதி ம்ருகங்களும், கருடகண்டபேரண்டபக்ஷிஸமூஹவனங்களும், நதிகளுமுண்டு. இந்த ஜம்புத்வீபத்தில் - ாகூ - திவ்யதேஶங்களுண்டு, அவற்றில்,கோயில், திருமலை, பெருமாள்கோயில், திருநாராயணபுரம், இவை ஶ்ரேஷ்டம். கோயிலென்னும் ப்ரத்யக்ஷபரமபதமான ஸ்ரீரங்கக்ஷேத்ரம் உத்தமோத்தமம் என்று அறியவேண்டும். இப்படிப்பட்டபூலோகத்திலிருக்கும் ஸப்தஸமுத்ரங்களில் க்ஷீரஶுத்தோதகமத்யத்வீபங்களில் மானஸோத்தரபர்வதம் மேருவுக்குக்கீழிருக்கும், அந்தமானஸோத்தரபர்வதத்தின்மீது அஷ்டதிக்குகளில், இந்த்ரன், அக்னி, யமன், நைருதி, வருணன், வாயு, குபேரன், ஈசான்யன், இவர்கள் பட்டணங்கள்உண்டு. அந்தமானஸோத்தர பர்வதத்திற் கப்புறம் சுற்றிலும் ஜலஸமுத்ரமிருக்கும், அந்தபர்வதத்தின்கீழ் சக்ரவாளபர்வத மிருக்கும், இந்தப்பூலோகத்தின்கீழ் ஏழுலோகங்களிருக்கின்றன.அதெப்படியெனில், (పదపద్మేతలంవింద్యాత్ । పాదేవివితలంభవేత్ । సుతలంజంఘదేశేతు। జానుదేశేతలాతలం।మహాతలంతువ్రూరోర్భ్యో।గుహ్యదేశేరసాతలం।పాతాళంకటిదేశేస్తు।సప్తపాతాళసంజ్ఞకా)என்கிற பகவத்ஸ்ரீஸூக்தியின்ப்ரகாரம்,அதல,விதல, ஸுதல, தராதல, மஹாதல, ரஸாதல, பாதாள, லோகங்கள் ஏழினும் மேலுலோகங்களிற்போல், கல்பகவ்ருக்ஷம், காமதேனு, அம்ருதநதி நவரத்னஸ்தாபிதங்களான மேடைகள் முதலானவையுண்டென்பதுபராஶரஸம்ஹிதையில் ஸுஸ்பஷ்டம். அதலம்,விதலம்,ஸுதலம், இந்தமூன்றுலோகங்களை எம்பெருமான்மஹாபலிக்குப்பட்டங்கட்டினர். அதற்குக்கீழ்-கூ-ஶிரஸுகளுள்ள ஆதிஶேஷன்மேருபாதத்தைச்சுமந்துகொண்டு,அநேகமாயிரம் நாககன்னிகைகள்ஸேவைசெய்யும்படியாக இருப்பன். (ఫణిరాజస్య శేషస్య।సహస్రఫణిమండలమండితే।

என்றுமஹாஸங்கற்பத்தில்சொன்னபடியே,ஆதிஶேஷனும்அந்தஶேஷனைச்சுற்றி-அ-பக்கங்களில் அஷ்டதிக்கஜங்களு மிருக்கின்றன. அந்தஶேஷனுக்குக்கீழ் ஆதிகூர்மமிருக்கும் அந்த ஆதிகூர்மத்தின்கீழ்(அ௦௬௦௦௦௦௦)யோஜனை ஆழமுடைத்தாய மஹாஜலமிருக்கும், முன்சொல்லப்பட்ட மேருவுக்குத் தக்ஷிண பார்ஶத்தில் மாநஸோத்தரபர்வதத்தின்மீது நாகலோகபர்யந்தம் யமனதுபட்டணமிருக்கும், அதில் (௬௪) கோடி நரகபேதங்களுண்டாயிருக்கும், இந்தவிவரம் ஸ்ரீபாகவதம், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலானவைகளில் ஸ்பஷ்டம். இந்தப்படி ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராணாகமாதிகள் ஏககண்டமாய்க் கோஷித்துக்கொண்டிருக்க, இடதுகை வலதுகையறியாத சிலமௌட்யர்கள் ஸர்வம் மித்யயேயொழிய, குருவேது தெய்வமேது, பின்னால் வருங்கார்யத்தை யாரறிந்தார்கள், இப்போது ப்ரத்யக்ஷமாயிருக்கும் ஆஹாரநித்ரமைதுனங்களேநிஜமென்றெண்ணி,அந்யாயமாய்நஶித்துப்போகிறதுமல்லாமல், “தான்கெட்டகுரங்கு வநமெல்லாம் அழித்தது” என்றபழமொழிப்ரகாரம், ராவணஸம்ஹாரனுக்கு மஹோதரனும், துர்யோதனனுக்கு ஶகுனியும், துர்ப்போதனைச்செய்ததுபோல்ஆஸ்திகநாஸ்திகராய்தாமுங்கெட்டு,தமதுபந்துமித்ராதிகளையும் துர்ப்போதனைசெய்துகெடுத்துக்கொண்டுவருகிறார்கள். இவர்களை அந்த்யகாலத்தில்யமதூதர்களான,கால-தூத-ம்ருத்யுக்களென்று மூவரும்வந்து பிடித்துக்கொண்டு ஸ்தூலதேஹத்தை விடுவித்து ஸூக்ஷ்மதேஹமென்னும், யாதநாஶரீரத்தில்நுழைத்து, துஸ்தரமானமார்க்கத்திலிட்டுக்கொண்டுபோய், யமனிடத்தில் நிறுத்தி அவனது ஆஜ்ஞையின்ப்ரகாரம் அநேகவிதமாகபாதித்து,நரகூபங்களில் அநேககாலங்கள்வீழ்வித்து, மறுபடியும் கர்மஶேஷத்தோடு மர்த்யலோகத்திற் பிறக்கும்படி அனுப்பும்போது அந்தகர்மஜீவன் (ఆకాశాద్వాయుః। వాయోరగ్నిః। అగ్నేరాపః।అభ్యః పృథివీ।పృథివ్యా మోషధయః।ఓషధిభ్యోన్నం।అన్నాత్పురుషః।) என்கிற இந்தஶ்ருதிப்ரகாரம் ஆகாஶவாயு, அக்னி, ஸூர்யகிரண, ஹிம, வர்ஷதாரைகளால் பூமியில் விழுந்து ஸர்வ உணவுக்குரிய வஸ்துக்களில் விழுந்து, அந்நமா

ய், புருஷகர்ப்பத்திலிருந்து. ரதிகேளியில் ஸ்த்ரீகள் கர்ப்ப த்தில் விழுந்து ஒன்பதுமாதம் ஸ்த்ரீகள் கர்ப்பத்தில் துக்கி த்து, அநந்தரம்ஜனித்து, பால்யகௌமாரயவ்வனவார்த்திகமா முவஸ்தைகளுடன் ஸப்தாவஸ்தைகளும்பட்டு, இப்படிஜன்மஜ ன்மங்களிலும் யமனால் பாதிக்கப்படுவர்கள். மேற்கண்டஸ்ருதி யர்த்தப்ரகாரபஞ்சாக்னிஸாஸ்ரத்திலும், பாகவதத்ருதிய ஸ்க ந்தத்திலும் ஸஷ்பஷ்டம். துஷ்க்ருத்யங்களாலிவ்விதயம பா தைகள்படவேண்டுமென்றபயத்தால் சிலர்வ்ரத, தான, தபோ, யஜ்ஞாதிகளை அநுஷ்டிப்பர்கள் - இவர்கள் ஸ்ரீர அநந்தரத்தில் ஸ்வர்க்கமான இந்த்ரலோகஞ்சேர்ந்து ரம்பையூர்வஸிமுதலா ன அப்ஸரஸ்த்ரீகளுடன் போகித்து, விமானாரூடர்களாய்த் திரி ந்துகொண்டிருந்து பின்பு (க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி) என்ற ஸ்ருதி ப்ரகாரம், புண்யபாபங்கள் க்ஷீணித்தவுடன் கர்மஸேஷ த்தால் யமலோகத்திலிருந்து வந்தப்ரகாரமே பூலோகத்தில்வ ந்துஜனிப்பர்கள். மேற்கண்ட வ்ரததானதர்மங்களைப் பிதாபுத் ரர்களும்செய்வர்களேயாகில் அவ்விருவரும், ரம்பையூர்வசிகளை யநுபவிக்கவேண்டிவரும், ஆகையால்அப்படிப்பட்டந்யாயமு ள்ளஸ்வர்க்கத்தைவிடநரகமேமேலென்றும், நரகம் இருப்புச்ச ங்கிலிவிலங்காயும், ஸ்வர்க்கம் தங்கச்சங்கிலி விலங்காயுமிருப்ப தால் இந்த இரண்டு விலங்காகிய புண்யபாபங்களை நிவர்த்திப்ப தேபந்தவிமோசனமென்றும், ஸ்ரீமத் ஆழ்வாராசார்யர்கள் ஆஜ் ஞாபித்திருக்கிறார்களாகையால், ஸ்திரஜ்ஞானிகள்புண்யாபுண்ய ங்களில் விழாமல், ஸ்ரீபரமபதவாஸரான நித்யஸூரிகள் இங்கு அவதரித்து, நிர்ஹேது கடாக்ஷத்தால்சேதனசேதனர் உஜ்ஜீவன ர்த்தமாய் ஆஜ்ஞாபித்த ஸ்வரூபக்ரந்தங்களான, தத்வத்ரய, ரஹ ஸ்யத்ரய, ஸ்ரீவசனபூஷண, அர்த்தபஞ்சக, அர்ச்சராதிமுதலான ஸ்ரீஸூக்திகளை "ஞானமநுஷ்டானமிவை நன்றாகவேயுடைய" ஆசார்யன்முகேன அவற்றின் வ்யாக்யான நிஜார்த்தங்களையறி ந்து, ததநுஷ்டானமுடைய ப்ரபன்னரான ஸ்ரீவைஷ்ணவர் சண்டாளர்முதலான எந்தவர்ணங்களி லவதரித்தபோதிலும் லீ லாவிபூதியான இந்தஉலகத்தில் ஸ்ரீமதாசார்ய பகவத்பாகவத

கைங்கர்யங்கள்செய்துகொண்டு இருந்தால் அந்தமுத்தாத்மாவி ன் தேஹாவஸானகாலத்தில், ஸ்ரீபரமபதநாதனது தாஸர்களா ன ஆதிவாஹிகர்களென்ற நித்யஸூரிகளான நான்குதிருநாம ங்கள், ஸூக்ஷ்மஶரீரத்தையும், ப்ரணவமந்த்ரமென்கிற விமா னத்தையும்கொண்டுவந்து, அந்தமுக்தாத்மாவினுடையஸ்தூல த்திருமேனியை விடுவித்துஸூக்ஷ்மதிருமேனியில்எழுந்தருள ச்செய்கையில், ஶ்ருதி (ఓంకారరథమారుహ్య என்றபடியே, ஓ ங்காரமென்கிற ரதத்திலேறி ஶ்ருதி (ప్రవిశ్యచసహస్రాంశుం) என் றும் திருமங்கைமன்னன் (மன்னுகடுங்கதிரோன், மண்டலத்தி னூடுநடுவுள், அன்னதோரில்லியினூடுபோய்) என்றுசொன்ன படியே ஸூர்யமண்டலத்தில்ப்ரவேஶித்து, ஶ்ருதி (క్రమాచ్ చంద్రమసంప్రాప్య) என்று ஸூர்யமண்டலத்துக்குமேல் நடுவு ள்ளலோகங்களை க்ரமக்ரமமாய்த் தாண்டிச் சந்த்ரமண்டலத்தி ல் ப்ரவேஶித்தும், அதாவது, சடகோபர் "தோரணநிரைத்தெ ங்கும் தொழுதனருலகே" என்றும், "தொழுதனருலகர்கடேந ன்மலர்மழை, பொழிவினர்பூமியன் றளந்தவன்றமர்முன்னே, எழுமினென்றிருமருங்கிசைத்தனர்முனிவர்கள், வழியிதுவைகு ந்தக்கென்றுவந்தெதிரே" என்றும். "எதிரெதிரிமையவரிருப்பி டம்வகுத்தனர், கதிரவரவரவர்கைந்நிரைகாட்டினர், அதிர்குரன் முரசங்களலைகடன்முழக்கொத்த, மதுவிரிதுழாய்முடிமாதவன் றமர்க்கே" என்றும் இந்தப்ரகாரமாக நடுவுள்ளலோகங்களிலு ள்ளவர்கள் பூஜிக்கும்படி சந்த்ரமண்டலத்தில் ப்ரவேஶித்து "ம டந்தையர்வாழ்த்தலு மருதரும்வசுக்களும், தொடர்ந்தெங்குந் தோத்திரஞ்சொல்லினர்" என்றும்மருத்துக்கள், வஸுக்கள் இ வர்களுடைய லோகங்களையுங்கடந்து, பரமசந்தோஷித்துடன் ப்ரஹ்மாண்டங்கள் யாவையுங்கடந்து, ஸப்தாவர்ணங்களைத்தா ண்டி, இருபத்துநான்கு தத்வங்களுடன்கூடி அநந்தப்ரஹ்மா ண்டங்களுக்கு மூலமான மூலப்ரக்ருதியைக்கடந்து அதற்கு ராஜனாகிய அநந்தகோடி ப்ரஹ்மாண்டநாயகனான விராட்பு ருஷனைக்கடந்து, அவனதுகிரீடத்தின்மீதிலிருக்கும், ஶ்ருதி (తతస్తువిరజాతీరప్రదేశంసహగచ్ఛతివిరజానదీం) என்றபடியே அப்ருத வாஹிநியாய் வைதரணிக்கெதிர்த்தட்டான விரஜையைக்கிட்டி

அதில்தீர்த்தமாடி, ஸூக்ஷ்மத்திருமேனியை ப்ராக்ருதிவாஸனை
யுடன், ஶ்ருதி (తస్మాద్రాహువినిర్ముక్తచంద్రసన్నిభముజ్వలం) எ
ன்றபடியே க்ரஹணம்பிடித்துவிட்ட ஸூர்யசந்த்ரர்களைப்
போலே விடுத்து, விரஜாநதியிலிருக்கும் கைவல்யத்துடன்கூடி
ய பனிரண்டாயிரம் யோஜனையுள்ள விரஜைக்கரையைச்சேர்ந்
து, ஸகலதாபங்களுமாறும்படி ஶ்ருதி (అమానవంసమాసాద్యం)
என்று அமானவனுடையகரஸ்பரிஶத்தால் சதுர்ப்புஜஶங்கசக்ர
ங்களும் நித்யமான இருபத்தைந்துவயதும்; ஆயிரத்தெட்டுமா
ற்றுத்தங்கம்போன்றகோடிஸூர்யப்ரகாஶமுடைய அப்ராக்ரு
தவிக்ரஹத்தையும்பெற்றுத்தில்லவ்ருக்ஷத்தினிழலில்தங்கி(శ్రీవై
కుంఠాయదివ్యనగరాయనమః) என்று அங்கேதோன்றும், ஸ்ரீவைகு
ந்தநகரத்தைத்தண்டம் ஸமர்ப்பித்து ஶ்ருதி (తంపంచశతాన్యప్స
రసాంప్రతిధావంతి) என்று வந்த முக்தனைத் தேசாந்த்ரத்திலிருந்
து வந்தபுத்ரனைக்கண்ட தாய்மாரைப்போல் ஐந்நூறு அப்ஸ
ரஸ்ஸுக்கள் எதிர்கொண்டுவந்து, ஶ்ருதி (తమేవంవిద్బ్రహ్మాలం
కారేణాలంకారంకుర్వంతి) என்றுஅந்தமுக்தனைப்பரப்ரஹ்மத்தை
அலங்கரிக்குமாபோ லலங்கரித்து எழுந்தருளச்செய்துகொண்
டுபோகையில், அநேகசிங்காரவனங்களும் பகவத்குணுனுபவஞ்
செய்யும் ஸூகசாரிகா மயூர கோகிலாதிகளையும், அம்ருதந
திகளையும் காமதேனு கற்பகவ்ருக்ஷஸமூஹங்களையும் பார்த்துக்
கொண்டானந்தத்துடன் போகையில் ஸ்ரீசடகோபர் "நிதியுநற்
சுண்ணமுநிறைகுடவிளக்கமும், மதிமுகமடந்தையரேந்தினர்வ
ந்தே" என்கிறபடியே நிதியேயென்கிற ஸ்ரீசடகோபரும் நற்சு
ண்ணமென்கிற திவ்யபரிமளமுடைய மகரந்தப்பொடியாகிய
கதம்பப்பொடிகளும்; நிறைகுடமென்கிற பூரணகும்பங்களு
ம், விளக்கமென்கிற மங்களதீபங்களு மேந்திக்கொண்டுவந்து,
உபசாரங்கள்செய்து "தீர்ந்துதன்பான்மனம் வைக்கத்திருத்தி
வீடுதிருத்துவான்" என்கிறபடியே இந்தமுக்தன் வருகிறனெ
ன்றலங்காரஞ்செய்திருக்கும் பரமபதத்தில் ஆயிரஞ்சுற்றுவீதி
யும் ஒருநொடியில்பவனிவர, ஶ்ருதி (యత్రపూర్వేసాధ్యాస్సంతి
దేవాః) என்றபடியே எம்பெருமான் வீற்றிருக்கும் திருமாம

ணிமண்டபத்தின் சமீபத்திலிருக்கும் நித்யஸூரிகள் பத்மரா கசோபானபீதிமேலேறச்செய்யக்கண்டூரக்கண்டு (సమస్తపరివారా య శ్రీమతే నారాయణాయనమః) என்று ஹர்ஷிபரவசனாய் விழுந் தெழுந்திருந்து, பெரியப்ரீதியோடேசென்று பாதபீடத்திலே அடியிட ஸ்ருதி (తమేవంవిత్పాదేనాధ్యారోహతి) என்கிறபடியே கோப்புடையசீரியசிங்காஸனத்தின்பேரில் அடியிட்டேறும்படி பரமபதநாதன் தனதுவலது ஸ்ரீஹஸ்தத்தினாலேற்றி, அவனும் "அவாக்யநாதர:" என்கிறவாகாரம்குலைந்துசந்த்ரனைக்கண்டகட ல்போலே விக்ருதனாய்த் தன்னைப்பிரிந்து நெடுநாள் தரைக்கி டைக்கிடந்த விழவுதீர அங்கே (భరతమారోప్య) என்றபடியே ஸ்ரீபரதாழ்வானை மடியில்வைத்ததைப்போல் வைத்து ஸ்ரீபரதா ழ்வானையும் அக்ரூரனையும் அணைத்தாற்போலே அணைத்து, உச் சிமோந்து கன்னத்தைநெரித்து முத்தமிட்டு ப்ரீத்யதிசயத் தாலே ஸ்ருதி (కో౽సి) என்கிறபடியே நீயாரென்றுகேட்க, அத ற்கிந்தமுக்தன், ஸ்ருதி (అహంబ్రహ్మాస్మి) என்று நான்ராஜகுமா ரனென, நீயித்தனைகாலமுஞ்செய்ததென்னென்றுகேட்க, சாந் தேந்து மென்முலையார்தடந்தோள் புணரின்பவெள்ளத்தாழ்ந் தேனென்ன, நீயதால்பெற்றபலமேதென்றுகேட்க, அருநரக த்தழுந்து பயன்படைத்தேனென்றபின்பு நீசெய்ததென்னென் னப்போந்தேனென்ன, நீபோந்தவிரகென் னென்றுகேட்க, பு ண்ணியனேயென்ன,நீயதினின்றும்போந்துசெய்ததென்னென் ன, உன்னையேத்தினேனென்ன, நம்மைக்கிட்டினவிடத்தில் நீ பெற்றப்ரயோஜனமென்னென்றுகேட்க, என்தீவினைகள் தீர்ந் தேனென்ன, இப்படிக்கு ஸ்ருதி (ఆత్మా వైపుత్రనామాసి) என்கிற படியே பிதாபுத்ரந்யாயத்தால் அநேகவிதமாக ஸ்ரீஸூக்திக ளுடன் ஆநந்தித்து ஸ்ரீமஹா லக்ஷ்மியின் திருக்கரங்களில் சாய் க்கையில் ஸ்ரீபெரியபிராட்டியார், அந்தப்புத்ரனுக்கு ஸ்தந்ய பானந்தந்து முத்தமிட்டுச் சந்தோஷ ஸ்ரீஸூக்திகளால் சாம காநஞ்செய்கையில், திருச்செவிசாத்தி ஸ்ரீநித்யவிபூதியான ஸ்ரீ வைகுந்தநாம ஸ்ரீபரமபதத்தில், நித்யஸூரிகளுடன்கூடி நித் யாநந்தத்தை அநுபவிப்பான்.

இந்தக்ரந்தத்தின் முக்யதாற்பர்யத்தை உணர்ந்து, ஜகத்தில்வேஷிங்களைப்பூண்டு ப்ரமிக்கச்செய்யும் பள்ளமடையார்துர்கிருத்தியங்களையுடையவரானவரையோடேகைவிட்டு ஸ்ரீராமாநுஜர் திவ்யாஜ்ஞையின்படி அநுஷ்டித்துவருகிறவர்களே ஸ்ரீவைஷ்ணவப்ரபந்நோத்தமர்களென்று சொல்லப்படுவர்கள். இந்தக்ரந்த்தின்கருத்துகளை ஸகலருமெளிதிலறிந்துஉஜ்ஜீவிக்கவேண்டுமென்கிற திருவுள்ளத்தால் நம்பூர்வர்கள்கோயில்கருடமண்டபத்தின் கற்பாவுகளில்வர்ணகலாபத்தால் எழிஅருளப்பண்ணியிருப்பதா லிப்போதும் ஸேவித்துணருப்படியிருக்கின்றன. ஸ்வாமிகளின் ஸ்ரீபாதங்களில் அடியேன்ஶ்ரவணஞ்செய்த அர்த்தங்களின் அந்தர்யாமியான ஸர்வேஶ்வரன்தோற்றிவைத்தவரைக்கும் விண்ணப்பஞ்செய்தேன்; இதில் குற்றங்களைப்பாராட்டிவேறுவிதமான வெண்ணங்கொள்ளாமல் பாலும் நீரும் மிஶ்ரமாயிருந்தால் அன்னமானதுபாலை க்ரஹித்து நீரை நிக்ரஹிக்குமாப்போல் யாவத்ரர்களுமிதிலிருக்குமஸத்தை நிக்ரஹித்துஸத்தை க்ரஹித்துக்கொண் டடியேனுக்குத் திருவடிஸாதிக்கும்படியெம்பெருமானிடத்தில் ப்ரபத்திசெய்யவேண்டுமென்று ப்ரார்த்திக்கின்றேன்.

## வாழித்திருநாமம்.

வாழிஸ்ரீசதாசார்யர் - வாழிபரமாசார்யர்..............*
வாழிஸ்ரீசர்வாசார்யர் - வாழித்திருப்பாவைஜீயர் .... *
வாழிபராங்குசனம்பி - வாழிஸ்ரீயமுனைத்துறைவர்.....*
வாழிமணக்கால்நம்பி - வாழிஸ்ரீஉய்யக்கொண்டார்...*
வாழிஸ்ரீபெரியமுதலி - வாழிஸ்ரீமச்சடாரி.. ...... ...*
வாழிஸ்ரீசேனநாதர் - வாழிபூமன்னுமாது...............*
வாழிமணவாளப்பிள்ளை - வாழிப்பயல்பூதி.............*
வாழியிந்நூல்வழங்குமவர் - வாழிவயிணவம்வாழி.....*

ஆழ்வாரெம்பெருமானார்ஜீயராசார்யர்கள்

திருவடிகளேசரணம்.



முற்றும்-முற்றிற்று.